ஈடுபாட்டுடன் இணைத்த தம்பி வளநாடனுக்கும், நண்பன் தெ.மதுசூதனனுக்கும் அன்பு. புலம்பெயர்ந்த பின்னும் என்மீதும், என் கவிதைமீதும் பேரன்பு கொண்ட கவிஞர் அரிமாஅழகன், எஸ்.நர்த்தனகுமார், ந.ரகுராம், தா.நவநீதன், கவிஞர் கிருஷ்ணா அம்பலவாணர் ஆகியோருக்கும் அன்புரைத்தேன். விடுதலைமீதான என் பெருவிருப்புக்கு நம்பிக்கைதரும் வெளிச்சமாகவும், ஆதர்ஸமாகவும் நின்று ஆற்றுப்படுத்தும் எமது தேசியத்தலைவர் வே.பிரபாகரன் அவர்களுக்கும், என்னை எனக்கே அறிமுகம் செய்த கலாநிதி அன்ரன் பாலசிங்கம் அவர்களுக்கும், அடேல் அன்ரிக்கும், தம்பி சு.ப.தமிழ்ச் செல்வனுக்கும், வரலாற்றுக் கடமைக்கான யாத்ராவின் சுமைதாங்கி நடக்கும் சக தோழமைப் போராளிப் பயணிகளுக்கும், நன்றியெனும் வெற்றுவார்த்தையைத் தவிர கொடுப்பதற்கு வேறென்ன உண்டு என்னிடம்?

காலம் இனியுமெனக்குக் கருணைசெய்யுமெனில் மீண்டும் சந்திப்போம்.

அன்புடன்
புதுவை இரத்தினதுரை

புத்தூர் கிழக்கு,
புத்தூர்.
28.02.2005

• புதுவை இரத்தினதுரை

# தூரப் பறந்துவிட்ட துணிவுப் பறவைகளே!

நேற்றுவரை நீங்கள் நேரிருந்தீர்;
கண்களிலே
பூத்ததுபோற் பூத்துப் புன்னகைத்தீர்.
எங்களுடன்
பேசிக்களித்தீர்; போய்விட்டீர்.
தாயகத்தில்
வீசிவரும் காற்றில்
விரித்த சிறகெடுத்து
தூரப் பறந்துவிட்ட துணிவுப் பறவைகளே!
ஈரவிழியிங்கு எமக்கின்னும் காயவில்லை.
ஊரறியோம்
உங்கள் உறவறியோம்
தந்தையிட்ட பேரறியோம்

ஆனாலும் புகழறிந்து நிற்கின்றோம்.
நெஞ்சினிலே உங்கள் நினைவுக்கு மாலையிட்டு
நஞ்சணிந்தோம்.
நீங்கள் நடந்தவழி நடக்கின்றோம்.
தம்பியென்றும்;
அண்ணன் தங்கையென்றும்
எங்களுக்கோர்
வம்சவழி தோன்ற வாழ்ந்தோமே;
ஒன்றாகி
வந்தபகை வீழ்த்த
வரிசையிட்டுப் போனோமே.
செங்குருதி பாய்ந்து திசை சிவந்து
எதிரிகளின்
தங்ககங்கள் யாவும் தணலிற் கருக்கியபின்
வென்ற களிப்பில் வீடு வந்தோம்.
அன்றிருந்து
இன்றுவரை உம்மை எவ்விடத்தும் காணலையே.
கல்லறைக்குள் நீங்கள் கண்மூடித் தூங்குவதாய்
சொல்லுகிறார்
உங்கள் தேகம் தூங்காதே.
மொட்டவிழும் பூவினிலே முகம் தெரியும்
கல்லறைக்குக்
கிட்டவர உங்கள் கண் தெரியும்
வீசுகின்ற
காற்றினிலும் மூச்சுக் கலந்து
எம்மை உயிர்ப்பிக்கும்.
இனிக்
கூற்றெனவே வரும்பகையைக்
குடிப்போம்
வென்றிடுவோம்.
□□

வெளிச்சம்
கார்த்திகை 1993

# அள்ளிவர ஏன் ஆசை வரவில்லை

*வடித்து இறக்கினால்*
*ரோஜா நிறத்தில் பூத்திருக்கும்*
*'பூநகரி' மொட்டைக்கறுப்பன் சோறு,*
*கரைத்துக் காய வைத்த*
*களிமண்போல*
*பசைப் பிடிப்பாகக் குழையும்*
*'பலாலி' மரவள்ளிக் கிழங்குக் கறி,*
*'பொன்னாலை'ப் பாலத்து சிறுதிரளிக் குழம்பு*
*எல்லாம் குழைத்து ஒரு கவளம்*

*செத்தவன் நாக்கிலும் நீரூறும்.*
*உண்டு மகிழ்ந்து எத்தனை நாளாச்சு?*
*சாப்பிட்ட வாய்க்கு ஒருபிளவு பாக்கும்,*
*சாறு பிழியும்*
*'மாவிட்டபுரத்து' குருத்து வெற்றிலையும்*
*வாய்க்கு ருசி.*
*சாப்பிட்டால் நாக்குச் சிவக்கும்*
*எத்தனை நாளாச்சு?*
*எங்கள் நிலம்*
*எங்கள் கடல்*
*ஆனால் போக முடியவில்லையே*
*உனக்கேன் கோபம் வரவில்லை?*
*மொட்டைக் கறுப்பனை மறந்து*
*சீனத்துப் பச்சையுடன் திருப்தி கொண்டாயா?*
*'ஆனையிறவி'ல் உப்பு வீணில் கரைகிறது*
*அள்ளிவர உனக்கேன் ஆசை வரவில்லை?*
*இழந்தவற்றை மீளப்பெற*
*எழும்பு.*
□□

*வெளிச்சம்*
*மார்கழி 1993*

● புதுவை இரத்தினதுரை

# சிறகு விரிக்கத் துடிக்கும் ஒரு சின்னப் பறவை

பாலைச்சரித்து நிலவு விளையாடும்
பௌர்ணமி நாள்.
விளக்கணைக்கக்கூடப் பலமில்லாத
மெல்லிய காற்று.
வானச்சுவரில் முகில்கள் அப்பிக்கிடக்க
நிலவு நிர்வாணமான சாமப்பொழுது.
வயல்வெளியை உச்சிபிரித்த
செம்மணி வீதியில் நடக்கின்றேன்.
வெள்ளத்தாற் கடலான தரவைவெளி.
இடையில் வந்த சுடலையில்
சடலமொன்று தணல்பூத்துக் கிடக்கிறது.
என் காலடி அரவத்தால்
கரையேறிய நண்டுகள்
வளைக்குள் உடல்மறைத்துக் கொள்கின்றன.
ஓலமிட்டபடி உயரப்பறக்கும்
அடையாளம் தெரியாத புள்ளினங்கள்
ஆட்காட்டியா? மீன்கொத்தியா?
எதுவாகவும் இருந்துவிட்டுப் போகட்டும்
அழகாகப் பறக்கின்றனவே அதுபோதும்.
இவைபோலப் பறக்க முடியாதா?
எனக்கும் சிறகு முளைத்தால்
எத்தனை ஆனந்தம்.
பேயும் உறங்குகின்ற பொழுது இதுவாமே
எனக்கு மட்டும் ஏன் உறக்கம் வரவில்லை?
"நாற்பதுக்கு மேலே தூக்கம் இருக்காது"

சரியாகச் சொன்னவனின் வாயில்
சர்க்கரை போடவேண்டும்.
நாவற்குழிப் பாலத்தின் மேலே
வெளிச்சங்கள்.
என்ன அது?
அட பாரமேற்றிய
வண்டில்கள் வருகின்றன.
வேகமாக ஒரு 'பிக்கப்' மின்னலென வந்து
என்னைக் கடந்து உருவுகின்றது.
"பாவம் பொடியளுக்கும் நித்திரையில்லை"
சின்ன வயதில் எத்தனை பாரம் சுமக்கின்றனர்.
உழைப்பவனுக்கு உறக்கமில்லை என்பது
எவ்வளவு உண்மை.
அழகு விரித்து
ஆட்சி நடத்துகின்ற
நிலவுநாள் நெஞ்சுக்கு நிறைவு.
இந்த எழிலை இவ்வூர் பருகாமல்
கடைவாய் வழியக் கண்மூடிக் கிடக்கிறது.
தூக்கத்தில் அப்படியென்ன சுகமிருக்கிறது?
யாழ்ப்பாணம் பாலைவனமென்று
யார் சொன்னவன்?
அவனை அழைத்துவா.
கள்ளியும், நாகதாளியும்,
நாயுருவியையும் தவிர
உள்ளே வேறென்ன உண்டு
என்ற கவிஞனை எழுப்பி வா.
எம் மண் எத்தனை எழில் என்று
செம்மணியை இப்போது காட்டவேண்டும்.
சோம்பேறிகள் தூங்கிக் கிடப்பார்கள்
எங்கே தேடுவது?
வீரம் வரும்போதுதான்
மீசை துடிக்கும்.
அது போல
போராடும் போதுதான் எல்லாமும் பொலிவுறும்.
குண்டு வீச்சால் சிதறுண்டு போன

• புதுவை இரத்தினதுரை

கட்டிடங்கள் கூட
நவீன ஓவியங்கள் போல
அழகாகத்தானே தெரிகின்றன.
அப்படியாயின் அழிவே அழகா?
இல்லை
சிலரின் தேகத்தில் தேமல்கூட அழகாக இருக்குமே
அது போலத்தான்
எங்கள் மண்ணில்
எல்லாமே அழகுதான்.
மண்டைதீவிலிருந்து ஏவிய
எறிகணை வெடித்து
அரியாலைப் பக்கம் அதிர்கின்றது.
கோழிகள் ஏறும் மரத்தில்
மரநாய் புகுந்ததுபோல
ஊர் கலங்கி விட்டது.
எதிரியுள்ளவரை அழகை அனுபவிக்க முடியாது.
முத்திரைச் சந்தைக்கு முகம் காட்டி
நான் திரும்பி நடக்கின்றேன்.
வேகமாக ஒரு 'பிக்கப்' மின்னலென வந்து
என்னைக் கடந்து உருவுகின்றது.
இனி விடியும்.
□□

வெளிச்சம்
தை 1994

## நிமிர்

இனிவரும் நாட்களில்
இளவேனில் கருக்கட்டும்
மாருதம் தவழ்ந்து செடி கொடி தழுவும்.
முதிர்ந்த இலையுதிர்ந்து
மரங்கள் புதிதாய்ப் பிறக்கும்.
முற்றத்து வேம்பிருந்து
குக்கூவென்று குயில் பாடும்.
ஆடுகால் பூவரசுகள் அசையும்.

• புதுவை இரத்தினதுரை

துலாக்கள் உடற்பயிற்சி செய்யும்.
அறுகுபடர்ந்த வரம்பில்
ஆடுகள் அணிவகுக்கும்.
பச்சைப் பாவாடைகட்டி
தோட்டங்கள் அழகுகாட்டும்.
விடிகாலை எழில்பூட்டி வெளியேவரும்.
சந்தைக்குப் போகும் வண்டில்களின்
சக்கரச் சத்தம் பூபாளமாகும்.
வரும் காலம் வசந்தம்.
எம்மண் இனி அழகு.
எதிரிக்கு எங்கே இது தெரியும்
இந்த வசந்தத்தையும் எரியூட்டுவான்.
வெடிக்கும் எறிகணைகளுக்கு
விரல்மடித்துக்கொண்டு
காப்பரணுள்
நாங்கள் கண்துயில்வோம்.
இது கொடுமை
இறப்புக்கு நிகர்.
இந்த வருடத்து மந்த மாருதத்திலும்
கந்தகக் கலப்பா?
ஏற்றுக் கொள்ளக் கூடாது.
வீதியெங்கும் வெளிச்சம் ஊற்றி
விடிய விடியத் திருவிழா வேண்டும்.
வல்லிபுரக் கோவிலுக்கு
வண்டில் பூட்டு நிமிர்ந்து நின்று
நிலவு பார்க்கவேண்டும்
நிமிர்.
□□

வெளிச்சம்
மாசி 1994

# மார்கழி அழகு

சுற்றிய போர்வை விலக
சுருக்கென்று குத்திய குளிர்
என்னைத் தட்டிவிட எழுந்தேன்.
அதிகாலை
வெளியே வந்தபோது
அரவமற்றிருந்தது தெரு.
கறுப்புச் சேலை விரிப்பாய்
நீண்ட தார் வீதியில்
என்னைப்போல் ஓரிருவர்.
மார்கழி அழகு 'மகாலட்சுமி'

உண்மையை ஒப்புக்கொண்டாக வேண்டும்.
சும்மா சொல்லக் கூடாது
மார்கழி மாதம் பேரழகு.
எட்டு மணிவரை கட்டிலிற் கிடப்பவனுக்கு
இந்த எழில் எப்படித் தெரியும்?
நல்லூர் மணியடிக்கும்
நாலரை மணிக்கு
கொள்ளையழகு கொலுவிருக்கும்.
வாசலுக்கு வந்து பார்த்தால்
மார்கழி அழகு 'மகாலட்சுமி'.
"ஆதியும் அந்தமுமில்லா"
பள்ளியெழுச்சிப் பாடல்கள்
ஒவ்வொன்றும்
முடிய,
முடிய
அந்தமணியும்,
அரோகராச் சத்தமும்,
முடியும், துணியும் முறுக்கிய
கூந்தலில்
நீர் சொட்ட வந்தெழுப்பும்
என் மனைவி அழகும்
எல்லாம் ஒன்றாகி
மார்கழி அழகு 'மகாலட்சுமி'.
□□

ஈழநாதம்
16.02.1994

# புலரத் துடிக்கும் பொழுதும் ஒரு தூக்கம் வராத கவிஞனும்

நேற்றும் காற்றில்லாப் புழுக்கம்
கழுத்து வியர்வையால் தலையணை நனைந்து
மேனி பிசுபிசுத்த போது கண்களைத் திறந்தேன்.
நேரம் என்னவாக இருக்கும்?
அடுத்த வீட்டுக் கடிகாரமணிக்காகக் காத்திருந்தேன்.
தூரத்தில் வீரிட்டு ஒரு பிள்ளை அழுதது.
தாயின் முலை வாயில் புகுந்ததோ?
அழுகையை நிறுத்தி அமைதியானது.
எழுந்து முற்றத்துக்கு வந்தேன்

ஊமை நிலவு மேக மரங்களுக்குப் பின்னால்
ஒளித்து விளையாடியது.
அடுத்த வளவுச் சடைத்த வேம்பில்
வெளவால்கள் விழுந்து கொண்டிருந்தன.
கசக்கும் மரத்தின் பழங்களுக்காக
இவைகள் தங்களுக்குள் ஏன் கடிபடுகின்றன?
எனக்கு எரிச்சல் வந்தது
என்றாலும் என்ன செய்யமுடியும்?
மண்டைதீவு இராணுவ முகாமில்
'அவர்கள்' விழித்திருக்கின்றார்கள்
என்பதைச் சொல்லி ஓரிரண்டு வெடிச்சத்தங்கள்
அதுவும் பின்னர் அடங்கிப்போனது.
அயலை எழுப்பி,
உறக்கம் கலைத்து,
பயணம் சொல்லிப் போவதுபோல,
பக்கத்திருக்கும் பருத்தித்துறை வீதியால்
மண்ணெண்ணையும்,
மரக்கறி எண்ணையும்,
கலந்து குடித்த வாகனம் ஒன்று
இரவின் எழிலை இல்லாதழித்து
உறுமிக் கொண்டு ஓடிச்சென்றது.
என்னுள் மீண்டும் எரிச்சல் முளைத்தது.
அடுத்தவீட்டுக் கிணற்றில் இருக்கும்
கப்பியும், கயிறும் புணரும் சத்தம்.
'மனோன்மணி அம்மன்' கோவில் குருக்கள்
குளிக்க வந்ததைக் குறிக்கும் சத்தம்.
அப்படியாயின் மூன்று மணியா?
ஐயமே இல்லை மூன்று மணிதான்.
வழக்கம் போல நாய்கள் குரைக்க
கையில் விளக்கேந்தியபடி
பூப்பறிக்கும் பண்டாரம் வந்து
முற்றத்து தேமா மரத்தை
மொட்டை அடித்துவிட்டுப் போனார்.
நல்லூர்மணி நான்கு மணிக்கு அடித்தது.
நாதவெள்ளம் காதை நிறைத்து

*வேதனைகளை வெளியேற்றியது.*
*நெஞ்சில் இருந்த நெருஞ்சி முட்கள் வெளியே வந்தன.*
*மூச்சு இலகுவாகி சுவாசம் சீரானது.*
*"வேல் வேல் முருகா வெற்றி வேல் முருகா"*
*உரத்துப் பாடியபடி*
*வெளி வீதியை*
*தானே விலைக்கு வாங்கியவன் போல*
*ஒருவன் சொந்தம் கொண்டாடியபடி சுற்றிவந்தான்.*
*அயலிலுள்ள கிணறுகள் எல்லாம்*
*ஆரவாரப்பட்டன.*
*கிழக்கு வானம் வெளுக்கத் தொடங்கிய போது*
*காகங்கள் வந்து கத்தித் தொலைத்தன.*
*இரவில் இருக்கும் சுகமும், அழகும்*
*பகலில் தொலைந்து போவது எங்கே?*
*நாளையும் விடியும் தானே*
*அதற்காகக் காத்திருப்பேன்.*
*அநுபவிப்பதிலும் பார்க்க*
*காத்திருப்பது சுகமானது.*
□□

*வெளிச்சம்*
*பங்குனி 1994*

# பனிவிழும் தேசத்து நண்பனுக்கு பதிற்கடிதம்

நண்பனே!
மன்னிக்க,
பதிலெழுத நாட்களாயின.
வன்னிக்குப் போயிருந்தேன்
வந்ததும் கடிதம் மேசையிலிருந்தது
படித்ததும் எழுதும் பதில்.
துயருரைத்த வார்த்தைகளில்
உன் விழிநீர்க் கறைகள்
என்மனம் இரங்கியது.

• புதுவை இரத்தினதுரை

உடல் பனிவிழும் தேசத்திலென்றாலும்
மனமின்னும் முற்றத்து மாமரத்தைச் சுற்றியே
அந்தரிப்பதை அறிந்துகொண்டேன்.
புலம் பெயர்ந்த பறவையின்
கூடுதிரும்பும் அவாவுணர்ந்து
மகிழ்ச்சி.
இவ்வளவு தானென்றாலும்
இதுவே போதும்.
தாய்மடி நினைவுகள்
கரையாதிருப்பதே திருப்தி.
கலங்காதே
காலமொருநாள் கணக்கெழுதும்
வானப்பயணம் முடித்து வருவாய்.
அந்நிய நாடொன்றில்
அறியா முகங்களிடையே
உன்னை எவன் தேடுவான்?
அவசரங்கள் எதிர்மோதும் காலையில்
எவனுன்னைக் கவனிப்பான்?
நதிக்கரை ஒதுங்கிய சருகாகி
கிடப்பது துயரம்தான்.
என்ன செய்வது
இசைந்து போக அசைந்து கொள்.
சிகரங்கள் எழுந்த வீதியில்
'தகரம்பிள்ளையார்' கோவிற்திருவிழாவையும்,
கச்சான் கடைகளையும்,
காப்புக் கடைகளையும்,
மேற்குவீதி மேளக்கச்சேரியையும்
அசைபோடல் ஆகாது.
பழையன மீட்டல் பழுது.
புதிய மண்ணில் வேர்விடப் பழகிக் கொள்.
ஊர்ப் புதினம் கேட்டாய்
வழமை போல் எல்லாமும் வந்து போயின.
பள்ளியின் பரிசளிப்பும்
வாசிகசாலை வருட விழாவும்
நடந்து முடிந்தன.

வரதலிங்க அப்புவின் பேத்தியும்,
செல்வராசா அண்ணரின் மகனும்
'போக வேண்டிய இடத்துக்குப்' போய்விட்டனர்.
உனக்குப் புரியும்.
மற்றும்
இளங்கலைஞர் மன்றத்து இசைவிழாவும்,
சட்டநாதர் கோவிற் திருவிழாவும்
ஆயிரம் அழகோடு நடந்தன.
வாசுதேவ நாணயக்கார வந்து போனார்.
தடைகளை நீக்கென்று
முந்தைநாள் பெரிய ஊர்வலம்
நானும் கலந்தேன்.
நீயும் இங்கேயே இருந்திருக்கலாம்
போனது பெரிய பிழை.
உன் 'புவனத்தை' அடிக்கடி காண்பேன்
ஒரு புன்னகையை உதிர்த்து விட்டு
போய்விடுவாள்
அவள் பாவம்.
ஜேர்மனிக்குப் போய்விட்ட
நாகலிங்கத்தார் வீட்டில்
இப்ப 'பொடியளின்ர முகாம்'.
உயரத்துக்கு தகரமடித்த வேலி
ஒன்றும் தெரியாது.
வருவார்கள் போவார்கள்
சிலநாளில் விளக்கெரியும்.
"எதிரிகளின் பாசறையைத் தேடிப் போகிறோம்"
அடிக்கடி இந்தப் பாடல் கேட்கும்.
ஒருநாள் கருவேப்பமிலை வாங்க
சின்னப் 'பொடியன்' வந்தான்;
சீருடையில் இருந்தான்.
என்ன கறியென்றேன்
இறைச்சிக் குழம்பென்றான்.
ஊர் கேட்டேன் சொல்லவில்லை.
பேர் கேட்டேன்
பெரியண்ணன் என்றான்.

• புதுவை இரத்தினதுரை

எத்தனை சண்டைக்குப் போனாய்?
சும்மா பகிடிக்குத் தான் கேட்டேன்
பூநகரியோடு ஏழு என்றான்.
நான் விதிர் விதிர்த்துப் போனேன்.
வீரம் விளைந்து அறுவடைக்குக் காத்திருக்கும்
இந்த மண் வித்தியாசமானது.
இந்த மண்ணில்,
இந்த நாட்களில்,
இருந்தேனென்பதே
எனக்குப் போதும்.
உனக்கு?
சேர்ந்து வாழப் பழகிக் கொள்
அல்லது திரும்பி வந்து சேர்.
எல்லோரும் நல்ல சுகம்.
பதில் கண்டு
அடுத்த பதில்.
தாமதத்துக்கு மீண்டும் மன்னிக்க.
உன் அன்பு நண்பன்.
........................
□□

ஈழநாதம்
07.04.1994.

# மேகம் விளையாடட்டும்

*மின்னல் குடியிருக்கும் கண்களைத் திறந்து
கைகளை வீசு
புயல் புறப்பட்டுப் போகட்டும்.
எடுத்து வைக்கும் காலடி ஒவ்வொன்றுக்கும்
இடிமுழக்கங்கள் கேட்கட்டும்.
நட; காலம் உனக்கு கைகட்டும்.
வான் பரப்பெங்கும்
பிணந்தின்னிக் கழுகுகள்
போடும் எச்சத்தால்
கீழே குடியிருப்புக்கள் தீப்பிடிக்கின்றன.
ஒவ்வொரு வீட்டு வாசலிலும்
ஒப்பாரி கேட்கிறது.
இத்தனையையும் மீறிக்கொண்டு
சின்ன அலகால் சுள்ளி பொறுக்கி
எங்கள் மரங்களில் குருவிகள் கூடுகட்டுகின்றன.
மேய்ச்சலுக்குப் போகும் மாடுகள்
கன்றீன்று பால் சுரக்கின்றன.
வாழும் வழி இதுதான்.
நிமிர்ந்து கொள்
மேகம் உன் தலை தடவி விளையாடட்டும்.*
□□

*வெளிச்சம்
சித்திரை - வைகாசி 1994*

• புதுவை இரத்தினதுரை

# நெருஞ்சி எரிந்து நீறானால்
# அறுகு படர்ந்து அழகாகும்

இன்று வெள்ளிக்கிழமை.
ஆரதக்கறியுடன் உண்ட அசதி
திண்ணையில் அயர்ந்து விழித்த போது
அந்த நினைவு வந்து மிதந்தது.
'கோட்டை முனியப்பரை'த் தரிசித்து எத்தனை காலம்?
செல்லுமிடம் சொல்லாமல்
சைக்கிள் ஏறி மிதிக்கத் தொடங்கினேன்.
எதிர்காற்று என்றாலும் தொடர்ந்து முன்னேறி

பத்துமைல் கடந்து வந்தபோது
'பண்ணைக்கடல்' குருதியில் குளித்துக்கொண்டிருந்தது.
சூரியன் மஞ்சள் வெய்யிலை விசிறிவிட்டு
பாதியுடல் கடலுக்குள்ளும்,
மீதியுடல் வெளியிலுமாக விழுந்து கிடக்கின்றான்.
வைகாசிமாதத்து இளந்தென்றல் மேனிவருட
இதமாக இருந்தது.
'முனியப்பர் கோவிலின்' சடைத்த மரங்களில்
குடியிருக்கும் பறவைகள் கூடுதிரும்புகின்றன.
'சல்வீனியா' பூண்டு படர்ந்து 'புல்லுக்குளம்' கூட
எட்ட இருந்து பார்க்கும்போது எழிலாகத்தான் இருக்கிறது.
'இடிந்த நூல் நிலைய'மும், 'திறந்தவெளி அரங்கு'ம்
தங்கள் இருப்பை இழந்த நிலையில்
தேடுவாரற்று ஒதுங்கிக் கிடக்கின்றன.
பக்கத்தில் 'வீரசிங்கம் மண்டபம்'
பார்க்கப் பாவமாக இருக்கிறது.
'றீகல் தியேட்டர்' முன்பாக
தார்வீதி பிளந்து புல் முளைத்திருக்கிறது.
கும்பகர்ணன் தூங்குவதுபோல 'கோட்டை' கிடக்கிறது.
நெருஞ்சி படர்ந்திருக்கும் 'முற்றவெளி'
'உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டு உயிர்ப்பலி நினைவுக்கற்கள்'
நித்திரை விழித்துக் கட்டிய 'முத்தமிழ் விழா மேடை'
எல்லாவற்றையும் பார்க்க நெஞ்சுக்குள் நெருப்பு மூண்டது.
அந்தக் கால நினைவுகள்
நெஞ்சில் அலையெறிந்து கொள்ள
பழையன கரையொதுங்கிக் கொண்டன.
பஸ் நிலையத்திலிருந்து நூல் பிடித்த மாதிரி
நேராக ஓடிவரும் 'மூத்திர ஒழுங்கை' முகப்பில்தான்
அந்தத் 'தேனீர்க்கடை' இருந்தது.
பக்கீஸ் பலகைச் சுவரும் தகரக் கூரையுமாய்
எந்த நேரமும் நல்ல வியாபாரம் நடக்கும்.
உழுந்துவடை ருசியாக இருக்கும்.
'பிளேன் ரீ' ஐந்துசதம்தான்.
'காற்று வாங்கவரும் கவிஞர்கள்' கூடி
இங்கேதான் கல்பணிஸ் கடிப்பார்கள்.

எங்கே அந்தக்கடை? இருந்த சுவடே தெரியாமல்
ஒத்தியெடுத்துத் துடைத்தது யார்?
வாரத்தில் மூன்று நாட்களுக்கென்றாலும்
வீரசிங்கம் மண்டப வாயிலில் வாழை கட்டியிருக்கும்
பூச்சரம் கட்டிச் சோடித்திருக்கும்.
காஞ்சிபுரமும் கனகாம்பரமும் வாசலில் வரவேற்கும்.
சந்தனமும் பன்னீரும் மூக்கிலடிக்கும்.
மின்கம்பத்தில் கட்டிய பெரிய புனலுக்குள்ளிருந்து
கே.பி. சுந்தராம்பாள் பாடுவார்.
சில நாட்களில் 'சீர்காழி' பாடிக்கொண்டிருப்பார்.
ஐயோ என்ன இது கூட்டுறவுக்கு என்ன நடந்தது?
இந்திரமாளிகையை இடித்தது யார்?
பக்கத்துப் பள்ளத்தில்தான் றீகல் தியேட்டர்
ஆங்கிலப் படங்களுக்கு ஏங்குபவர்கள்
இங்கேதான் 'தாகம்' தணிப்பார்கள்.
மாலை 4.45க்கு ஒரு காட்சி
பள்ளிப்பிள்ளைகளுக்கு மெத்தவசதி
'நல்ல பிள்ளைகளாக' வீடு திரும்புவார்கள்.
இதென்ன கூரையற்ற குட்டிச்சுவர்
அப்போ றீகலுக்கு என்ன நடந்தது?
இங்கேதான், இந்த இடத்தில்தான்
ஆவிபறக்கும் 'காரம் சுண்டல்' வண்டிலுடன்
ஒருவன் வாசலில் நிற்பானே;
உப்பு, புளி, வெங்காயம், மிளகாய்
எல்லாம் கலந்து சுடச்சுடத் தருவான்.
ஒரு சுருள் போதும் அறுசுவை அறியலாம்
நாக்கு சப்புக் கொட்டுகிறது
அவன் எங்கே தொலைந்து விட்டான்?
நெருஞ்சி படர்ந்துள்ள முற்றவெளி
முன்னரெனில் இப்படியா கிடக்கும்
அறுகு படர்ந்து அழகாய் இருக்கும்.
கோட்டை அகழிக்கரையில்
நெஞ்சில் கனவுகள் விதைத்த 'காதற் பறவைகள்'
கூடியிருந்து கொத்துப்படுவர்
கதைப்பது காற்றில் வராது காதோரம் நின்றுவிடும்

இடைக்கிடை மின்னலடிக்கும் சிரிப்பு மட்டும் தெரியும்.
'சென்றல் கொலிச்' மைதானத்துக்கு
விளையாடப்போகும் விடலைகள்
விசிலடித்துக் கொண்டு போவார்கள்.
காற்று இங்கு மட்டும்தான் இலவசம்
மற்றெங்கும் விலையதிகம் என்பதுபோல
வாங்கத் தினசரி வந்து கூடும் 'பென்சன்காரர்கள்',
சாமானியரின் சின்னக் கனவுகளையெல்லாம்
நிராகரித்துவிட்டு, புதுயுகம் தேடிய
யாழ்ப்பாணத்துக் 'கனவு எழுத்தாளர்கள்'
இவர்களால் முற்றவெளி பூத்துக்கிடக்கும்.
சித்திரை மாதத்து அக்கினி நாளென
இன்று இவையெல்லாம் எப்படி எரிந்து போயின?
பண்ணைக் கடலையும் பார்த்து விடலாம்
கால்கள் நடக்கத் தொடங்கின.
"அண்ணர் நில்லுங்கோ" திரும்பினேன்.
தூக்க முடியாத துப்பாக்கிச் சுமையுடன்
சீருடை தரித்த சிறுவன்.
"என்ன தம்பி?"
அங்காலை போனால் "ஆமி சினைப்பண்ணுவான்".
அட எட்டும் தூரத்தில் எதிரி
எப்படி எம்மண் சிரித்தல் கூடும்?
நன்றியை உதிர்த்துவிட்டுத் திரும்பி நடக்கின்றேன்.
சீருடை தரித்த சிறுவனே!
உன்னால் மீண்டும் இவை எல்லாம் உயிர்க்கட்டும்.
முனியப்பர் கோவிலின்
பின்னேரப் பூசைக்குப் பெரிய மணி அடிக்கிறது
இனி எல்லாமும் பச்சை நிறமாகும்.
□□

வெளிச்சம்
சித்திரை - வைகாசி 1994

• புதுவை இரத்தினதுரை

# நேற்று இன்று நாளை

தங்கத் தகடடித்துத்
தகதகக்கும் வானமது
மஞ்சள் குளித்து மகிழும்
பொன்மாலையிலே
சூடாறிக் கொண்ட சூரியன் போய்;
மிக விரைவாய்
தேரேறி மேற்குத் திசை பார்த்துச் செல்லுகின்ற
நேரமதில்,
பச்சை நிறமான நெல்வயலில்
ஈரம்சுவற,
இடுப்பொடியப் புல் பிடுங்கி
மீளும் இளம் பெண்கள் மிடுக்காய்
நடைபயில்வர்.
ததும்பி வழிகின்ற
தாமரைப்பூம் பொய்கையதில்
குவிந்து,
ஊர்ச்சிறுவரெலாம் குதித்துக் கலக்கிடுவர்.
மாடெல்லாம் மேய்ந்து
மடிநிரப்பி
வரம்பேறி
வீடு திரும்ப வெளிக்கிட்டு
உடல் நெளிக்கும்.
'அரசவெளிஅம்மன்' ஆலயத்துப் பூசைமணி
தரவை வயல் கடந்து தாவி
ஊர் எல்லைவரை
விரையும்.
நீரள்ளி வீடேகும் சிற்றிடையார்
காற்சலங்கையோசை
கல்லொழுங்கை மீதிருந்து

மேற்கிளம்பி
இளசுகளின் மேனியிலே கிளுக்கிண்டும்.
விழுதெறிந்த ஆலவிருட்சத்தின் கீழிருந்து
பொழுதுபடும் வரையும் பேசிக்கழிக்கின்ற
கிழடுகளும் மெல்லக் கிளம்பி நடைபயில்வர்.
தோட்டக்கிணற்றின் துலா இருந்து
பாட்டு வரும்,
காட்டுக் கொடி சிலிர்த்துக் கண்மலரும்.
சில்லென்று
கற்றைக் குழல் கலைத்து
காற்று வந்து விளையாடும்.
அற்புதமாய் எல்லாம் அழகொளிரும்.
கிராமத்து
வற்றா எழில் கவிதை வரம்புக்குள் சிக்காது.
நேற்றிருந்த வாழ்வை நினைத்தால்
நெஞ்சத்தில்
தீப்பிடித்துக் கொள்ளும்.
தித்தித்த வாழ்க்கையினி
எப்போது?
எங்களுக்கு ஏனிந்தத் தண்டனைகள்?
கப்பிக்கிடக்கும் இருள் கலைவதினி எக்காலம்?
குயிலிருந்து பாடிய எம்கொம்புகளில்
மீண்டுமினி
குயிலிருந்து பாடிக் குதுகலித்தல் எப்போது?
எறிகணையும்,
குண்டு ஏற்றிவந்து வீசுகின்ற
வெறிகொண்ட 'புக்காரா' விமான இரைச்சலதும்,
குழிவிழுந்த வீதிக் குலுக்கல் பயணமதும்,
வழிதெரியா கும்மிருட்டு வாழ்வும்,
பசி வயிறும்,
பஞ்சு விளக்கும், பயம் பிடித்த முகங்களதும்,
பிஞ்சில் சொரிகின்ற பிணியும்
எம்மண்ணிருந்து
என்றகலும்?
எல்லாம் எழிலாதல் எப்போது?

*அஞ்சற்க!*
*எங்கள் அடுத்த தலைமுறைக்குள்*
*'நஞ்சணிந்தவீரர்' நாடமைப்பர்.*
*நடக்கின்ற*
*வெஞ்சமரை வென்று*
*வீதியெங்கும் முரசறைவர்.*
*வேலியொன்று போட்டு*
*வெறிநாய்கள் உட்புகுந்து*
*காலில் கடிக்காமல்*
*காவலுக்கு நின்றிருப்பர்.*
*தென்றல் தடவிச் செல்லும்.*
*திசையெங்கும்*
*கன்றெல்லாம் துள்ளும்.*
*கறவையெலாம் பால்சொரியும்.*
*நாதஸ்வரத்தோடு*
*தவில், வீணை, மத்தளங்கள்*
*பேசும்.*
*மரங்களெலாம் புதிதாய் துளிர்த்துவரும்.*
*பூசுமஞ்சள் கரைந்து*
*பொன்னாறு ஓடுதல்போல்*
*வாசம்சுமந்து வழிநடக்கும்*
*வீதியெங்கும்*
*காற்சலங்கை மீண்டும் கலகலக்கும்.*
*பூமரங்கள்*
*பூத்துச் சொரியும்*
*'புலம்பெயர்ந்த குருவி'யெல்லாம்*
*கூடுதிரும்பும்*
*கோயிலெல்லாம் கொடியேறும்.*
*நாடு திரும்பி நம் கையில் வந்ததென்று*
*பாடும் குரலெல்லாம் பரவும்.*
*அஞ்சற்க!*
□□

*வெளிச்சம்*
*ஆனி 1994*

# குடையாவது பிடிக்கலாம்

இன்று நடை தளர்ந்தும்
நரை விழுந்தும் தள்ளாடும்
ஐம்பது வருடங்களுக்கு முந்திய இளைஞர்களே!
வெள்ளைத் தோல் சீமான்கள்
வீடு திரும்ப மூட்டை கட்டியபோது
நீங்கள் ஏன் ஊமையானீர்கள்?
தலைப்பாகை கட்டிய சந்தனப் பொட்டுகளை நம்பி
நீங்கள் ஏமாந்து போனீர்கள்.
மீண்டும் ஒரு இலையுதிர்வுக்குப் பின்னர்
புதிதாகத் துளிர்த்தெழுந்த
'ஐம்பத்தெட்டில்' அடிவாங்கிய தலைமுறையே!
தேசியச்சாயம் கரைந்து
சிங்கக் கொடியைப் பூச்சி அரித்தபோது
ஒட்டுப்போட ஊசிநூல் தேடி நீங்கள் தோற்றுப்போனீர்கள்.
வழமையான அஸ்தமனத்துக்குப் பின்
கிழக்கில் புதிய உதயங்கள்.
மண்ணின் தேவர்கள் மாலையும் கையுமாய்
விடுதலைக்குத் தாலிகட்ட விரைகின்றனர்.
பிஞ்சுப் பாதங்கள் நோகலாம்
பாரச் சிலுவை தோளை அழுத்தலாம்
நிழலற்ற நீண்ட பாலையெனினும்
அவர் பயணம் தொடரும்.
நிழலற்ற பாதையல்லவா வாருங்கள்
அவர்களுக்குக் குடையாவது பிடிக்கலாம்.

□□

வெளிச்சம்
ஆடி 1994

# வயல்வெளிப் பிள்ளையார் கோயிலின் நித்திய பூசையும் பத்துநாள் திருவிழாவும்

*எங்கள் சிறு ஊரின்*
*விரிந்த வயல் வெளியின் அந்தத்தில்*
*அந்தக் கோவில்.*
*வண்டிப் பாதை உண்டு*
*ஆனால் சுற்றி வரவேண்டும்.*
*ஒற்றை வரம்பே ஊருக்கு வசதி.*
*வரம் கேட்க வருவோர் மிகக்குறைவு.*
*நேரே வருவதற்கு ஊருக்கு நேரம் கிடையாது.*
*மணிச்சத்தம் கேட்கும்*
*எட்ட இருந்து தலையில் குட்டிக் கொள்ளும்.*
*"பிள்ளையாரப்பா"*
*ஒரு வார்த்தை உதிரும் அவ்வளவுதான்.*
*குருக்கள் வருவார்.*
*தெய்வத்துக்கு ஏதேனும்*
*தின்னக் கொடுத்துவிட்டு செல்வார்.*
*வாசலில் ஏறினால்*
*வெளவால் புழுக்கை வாசமே வரவேற்கும்.*
*மணி அடிக்க ஆளிராது.*
*பலிபீடப் புக்கைக்காக இரண்டு காகங்கள்*
*நந்தியில் குந்தி இருக்கும்.*
*பூசை முடியும்*

வாசற் கதவில் பூட்டு விழும்.
அடுத்த கோவிலுக்கு ஐயர் பறப்பார்.
தெய்வம் சிரிக்கும்.
பூட்டிய கருவறைக்குள்
பிரபஞ்ச இயக்கத்தின் மையப்புள்ளி
போட்டபடி கிடக்கும்.
தினசரிகள் இப்படிக்கழிய
திருவிழாப் பட்சம் வரும்
ஊரெல்லாம் உயிர்ப்புக் கொள்ளும்.
கோயில் வளவின் பற்றைகள் கொழுத்தப்படும்.
காவிகலந்த சுண்ணாம்பு பூசி
வீதி மதிற்சுவர் பல்லைக்காட்டும்.
ஒரு வெள்ளிக்கிழமை
அகலக்கரை 'ஆந்திரா வேட்டி'யும்
தோள்கள் சுமக்கும் சால்வையுமாக
எடுபிடிகள் இருபுறமும் இருக்க
'தர்மகர்த்தா' வண்டியில் வருவார்.
வெளிமண்டபத்தில் 'மஹா சபைக்கூட்டம்'
உபயகாரருக்குப் பூச்சரம் கொடுப்பதுடன்
கூட்டம் இனிதே நிறைவுறும்.
பிறகென்ன
கோயில் கொடியேறும்.
கொடிமரம் இல்லாத கோவிலா
அதற்கென்ன?
அலங்காரத் திருவிழா அமர்க்களப்படும்.
சாத்துப்படி ஐயர்
எழுந்தருளிக்குப் புளிக்காப்புப் போட்டு
பொன்னாக்கி விடுவார்.
வடையும், மோதகமும் வாய்க்கு ருசியாகும்.
புளிச்சாதப்பட்டையின்
தாழித வாசத்தில் உமிழ்நீர் ஊற்றெடுக்கும்
குருக்கள் அம்மாவின் கைராசி அப்படி.
ஊர்கூடித் தேரிழுக்கும்.
இரவு
மின்விளக்குகள் கண்ணடிக்கும்.




*மேளமும் நாதஸ்வரமும்
இணுவிலில் இருந்து இறக்குமதியாகும்.
"ஒட்டகத்தை கட்டிக்கோ..."
பாட்டுக்காரர் பாடத்தொடங்குவர்.
இளசுகள்
எதிர்ப்பாற்காரரை
ஓரவிழியால் உண்ணத் தொடங்குவர்.
"கற்பில் சிறந்தவள்
கண்ணகியா சீதையா"
பட்டிமன்றத்தில்
மருத்துவப் பரிசோதனை நடக்கும்
'காஞ்சிபுரங்கள்' வாய் முத்துச் சிதற
பத்தினிகளின் சேலையுரிவதைப் பார்த்திருப்பார்.
கண்கள் மொய்க்கும் நேரம்
வில்லுப்பாட்டுத் தொடங்கும்
முடிய விடியும்.
அர்ச்சனைச் சில்லறையுடனும்
அண்டா, குண்டா, இட்லிச்சட்டியுடனும்
'மடப்பள்ளி'யிலிருந்து
குருக்கள் குடும்பம் வெளியேறும்.
மீண்டும்
வயல்வெளி சூனியப் பிரதேசமாகும்
கலைந்துபோன வெளவால்கள்
கோயில் மண்டபத்தில் குடியேறும்.
C - 90 மண்ணெண்ணெய்ச் சைக்கிளில்
குருக்கள் வந்து குதிப்பார்
பத்து நிமிடத்தில் பூசைமுடியும்.
தெய்வம் சிரிக்கும்.
பூட்டிய அறைக்குள்
பிரபஞ்ச இயக்கத்தின் மையப்புள்ளி
போட்டபடி கிடக்கும்.*

□□

*வெளிச்சம்
ஆடி 1994*

# கண்ணிமைக்கும் நேரத்தில் மின்னல்

ஒரு சனிக்கிழமை காலை
கண்ணிமைக்கும் நேரத்துள்
வானத்தைக் கிழித்துக் கொண்டு
அது வந்தது.
யாரும் எதிர்பார்க்கவில்லை.
மின்னல்.

தொடர்ந்து ஒரு வெடியோசை.
எல்லாம் நடந்து முடிந்தது.
ஐயோ! நேற்றிருந்த அழகென்ன?
வெளிர் நீல நிறத்தில் அந்த வீடு.
முற்றத்துப் புல்வெளி,
வரிசை கட்டிப் பூத்திருக்கும் ரோஜாச் செடிகள்,
வாசலுக்குப் போனால்
ஓடிவந்து வாலாட்டும் சடைத்த 'பொமேரியன்',
கவிதையொன்று காற்றில் திரிவதுபோல
சிரித்தபடி முகம் காட்டும்
அந்த வீட்டு இளம்பெண்,
அவள் கணவன்,
முற்றத்து ஊஞ்சலில்
அல்லது தாயின் தோள்களில்
அடிக்கடி காணும் அவர்களின் பிஞ்சுப்பூ
எதுவுமே தப்பவில்லை
எல்லாமும் இல்லாமற் போய்விட்டது.
வந்த 'அசுரப்பறவை' கூடடைந்திருக்கும்.
ஒப்பாரி ஓலம் கொழும்புக்குக் கேட்டிருக்காது.
பார்த்த பக்கத்து வீட்டுச் சிறுவனை
அன்றிலிருந்து காணவில்லை
பயிற்சிக்குப் போய்விட்டானாம்.

□□

வெளிச்சம்
ஆவணி 1994

# கூத்தாடிகள்

மதிற் சுவர்களுக்கு கைகளில்லாததால்
சுவரொட்டி ஒட்டுபவர்கள்
உயிருடன் திரும்புகின்றனர்.
வாக்குச் சீட்டுக்கு வாயில்லாததால்
வேட்பாளர்கள் தப்பிக்கொள்கின்றனர்.
சாக்கடைச்சேறு அள்ளுபவர்களுக்கும்
நேர்முகத் தேர்வு உண்டு
தகுதிபார்த்தே நகரசபை வேலைவழங்கும்.
அரசியல்வாதியாக மட்டும்
எதுவும் வேண்டாம்.
அம்மணமானாலும் அதற்கென்ன?
எவன் கேட்பானோ அவன் வேட்பாளன்.
அரசியலுக்கு வந்துவிட்டால்
ஆணுக்கும் பெண்ணுக்கும்
அங்கங்கள் வேறுபடுமே தவிர

*ஆசைகள் வேறுபடுவதில்லை.*
*மார்புக்கச்சையும் கோவணக் கச்சையும்*
*மாறிமாறி அணிந்து கொள்ளலாம்.*
*அறுபதிலே ஆசை அறும்*
*சுத்தப் பொய்.*
*அரசியல் வாதிகளுக்கு*
*அறுபதுக்குப் பின்புதான் எல்லாமே ஆரம்பம்.*
*வெற்றிபெற வேண்டுமென்பதற்காக*
*கட்டிய மனைவியையே காசுக்கு விற்பார்கள்.*
*பொதுத்தேர்தல் வந்துவிட்டால்*
*பிள்ளைக்கறியுடன் பந்தி பரிமாறுவர்.*
*தேர்தல் ஒரு கூத்து*
*மக்களோ சூத்திரக்கிணற்றடி மாடுகள்.*
□□

*வெளிச்சம்*

*ஆவணி 1994*

• புதுவை இரத்தினதுரை

# வந்துபோன வசந்தம்

சின்னவயதின் நினைவுப் பொறிகள்
தீ மூட்டுகின்றன.
காலப்பெட்டகத்தின் கதவுகள் விரிய
பழையநாட்கள் முளை விடுகின்றன.
இன்னும் அழியாத அழகுடன் இருக்கும்
அந்தச் சின்ன ஊர்
என் பாதம்படும் ஒவ்வொரு தடவையும்
பளிச்சிடுகின்றது.
நினைவுகளை அடிவரை தோண்டி
எட்டும்வரை தொட்டுப் பார்க்கிறேன்.
என்னுள் புதியபரவசம் புகுந்து கொள்கிறது.
தாயைப் பெற்ற தந்தையின் தோளிருந்தே
ஐந்துவயதில் பள்ளிக்குப் போனேன்.
'சிறுப்பிட்டி கந்தையா வாத்தியார்'
என் விரல்பற்றி ஏடு தொடக்கினார்.
நான் வகுப்புக்குள்ளே படிக்கும்போது
அப்பர் வெளியே வேம்புக்குக் கீழேஇருப்பார்.
எட்டிப் பார்ப்பேன்;

இல்லாதுவிட்டால் கல்லூரியே கலங்கும்
சிலேற்றுமட்டை சிதறு தேங்காயாகும்.
குளறும் சத்தம் கிழக்குத் தெருவரைகேட்கும்.
'தம்பிமுத்துவாத்தி' தலையிற் கைவைப்பார்.
காலையில் மூன்று சதத்துக்கு
'சிவக்கொழுந்து அக்கா' தோசைவிற்பாள்
வட்டவடிவம், எட்டங்குல விட்டம்
ஒரு தோசை போதும் வயிறூதிப் போகும்.
'புத்தர்கலட்டி பண்டாரி பெண்டிலிடம்'
பத்துச்சதத்துக்கு ஆச்சி மீன் வாங்கினால்
மத்தியானம்
குழம்பும் பொரியலும் மணக்கும்.
வாசம் இருக்கும் இடம்தேடி வந்திழுக்கும்.
தோட்டத்திற்குப் போய்வருவோர்
சும்மாதரும் மரக்கறியால்
வீட்டு விறாந்தை நிரம்பி வழியும்.
இருட்டுக்குப் பழகியது எங்களூர்
கும்மிருட்டானாலும் குறி தவறாது.
பத்து மணிக்கே நித்திரைக்குப் போய்விடும்
'படபஸ்'சில் வந்திறங்கினால்
நாய்கள் மட்டும் வரவேற்கும்.
ஊர் உறங்கிக் கொண்டிருக்கும்
மதவடியில்
'பழனியப்பா' கடையில் மட்டும்
லாந்தர் எரியும்.
பளையிலிருந்து கிடுகு ஏற்றிவரும்
வண்டிற்காரர்கள் விழித்திருப்பார்கள்.
'ஆவரங்கால் கணேசன்' கடையில்
வாடகைக்கு சின்னச் சைக்கிள் பழகியபோது
உலகத்தைச் சுற்றிய புளுகம்.
சாதித் திமிர்பிடித்த 'லோயர் கந்தையா'வுக்கு
தந்தை செல்வாவைப் பிடிக்காது
ஜீ.ஜீ பொன்னம்பலம் பற்றியே பேசுவார்.
தினசரி வாசிக்கத் தெரியாத கிழடுகளுக்கு

அவரின் வாயே 'வீரகேசரி' ஆகும்.
கையில் 'செவ்விந்தியனை' பச்சைகுத்திய
'வெள்ளைத் தாமு' அண்ணர் கொக்குச் சுடுவார்.
'கிளுவரை வயலில்' கொடியேற்றுவார்.
துவக்கும் அவரும் சோதரங்கள்
எனக்கும் அவரில் பிரியம்.
ஊருக்குள் ஒரு நாள் பொலிஸ் வந்தது
விதானையும் சேர்ந்து வந்தார்.
வெள்ளைத் தாமருக்கு விலங்கிட்டார்கள்.
'சிவலிங்கத்தை'ச் சுட்டு விட்டாரென்று
ஊர் முழுதும் கதைத்தது
பின்னர் ஓய்ந்து போனது.
'அந்திரானைத் தரவை' வெளியில்
'மனோன்மணி அக்கா' மாடு மேய்ப்பாள்
'சிவஞானம்' உதவிக்குப் போவான்.
ஒருநாள் சுடலை பார்க்கும் ஆசைவந்தது
இருவரும் உள்ளே போனோம்.
உடல்கள் உதறிக் கொண்டாலும்
சரித்திரம் படைத்ததாக நினைத்துக் கொண்டோம்.
பின்னாளில் விசர்பிடித்த 'லட்சுமி அக்கா'வுக்கு
என்னில் உயிர்
ஒக்களையில் வைத்து உலா வருவாள்.
பக்கத்து வீட்டில்தான் குடியிருப்பு.
பரம்பரையாக தொடர்ந்த பாசஉறவு.
விசரென்று அவளை ஊர் விலத்தியபோது
பார்த்து அழுதிருக்கின்றேன்.
ஒருநாள் உலகம் எனது கைகளில் அடங்கியது.
அன்று 'காரைக்கூடல் வைரவர்' கடைசித் திருவிழா
ஊரெல்லாம் கோயிலில் கூடியிருந்தது.
நாங்கள் சிலர்
'ராணித் தியேட்டரில்' வேர்த்துக் கொண்டிருந்தோம்.
'காலம் மாறிப் போச்சு' படம் பார்த்தோம்
முதன் முதலாகப் பார்த்ததால் மூச்சு முட்டியது.
யாருக்கும் தெரியாமல் ஊர் திரும்பினோம்

எப்படியோ கள்ளம் கசிந்தபோது
எல்லோர் வாயும் என் பெயரையே அரைத்தது.
'கோகிலாம்பாள்' கொலை வழக்குடன்
'ஈழநாடு' எங்களூர் வந்தது.
'தில்லையப்பாவின் கற்பகம்' ஆத்தை
ஒருநாள் இறந்து போனாள்.
சாகும்வரை இவள் பஸ்ஸில் ஏறியதில்லை.
ஊருக்கு வெளியே உலகமிருப்பது
இவளுக்குத் தெரியாது.
இப்படித்தான்,
இவர்களுடன் சேர்ந்துதான்
எனக்கும் வசந்தம் வந்து போனது.
□□

வெளிச்சம்
ஆவணி 1994

● புதுவை இரத்தினதுரை

# இனியும் உதை விழலாம்

புழுதி விதைப்புக்குப் பின்னர்
வயலில் நிற்கும் உழவனைப் போல
வானத்தைப் பார்த்தபடி நம்மில் சிலர்.
'புரட்டாதிச் சனி' விரதத்திலன்று
காகத்தை எதிர்பார்த்துக் காத்திருப்பவர் போல்
இன்னும் சிலர்.
'மகாவலி கங்கை' ஓடிவந்து

'வழுக்கையாற்றில்' விழுமென்ற
நம்பிக்கையுடன் வேறும் சிலர்.
பார்க்க அழகாக
மரங்கள் பூக்கத் தொடங்கியுள்ளன
தலையில் சூடத்தான் சரிவருமா?
பட்டத்துக்குக் கட்டிய வாலாகத் தொங்கும்
மின்சாரக் கம்பிகள்
எப்போது ஒன்றாகி உயிர்ப்புக் கொள்ளும்?
புகைவண்டியோடிய தண்டவாளப் பாதையில்
இன்று அகதிகள் குடியிருப்பு.
என்று இவையெல்லாம் ஒன்றாகி
"கூ" வென்ற இரைச்சலுடன் 'யாழ்தேவி' ஓடிவரும்?
ஆனையிறவுப் பாதை திறந்தவுடன்
ஒருமுறை கதிர்காமம் போகவேண்டும்
பழைய கிழடொன்றுக்கு இதுதான் பல்லவி.
இனிமையான கனவுகளுடன்
காலையில் 'தினசரிகள்' விற்பனையாகின்றன.
எல்லோரும் இணைப்பதைப் பற்றியே மூச்சு விடுகின்றனர்.
ஏன் பிரிக்கப் புறப்பட்டோம்?
அதை மறந்தால்
இனியும் உதை விழலாம்.
□□

வெளிச்சம்
புரட்டாதி 1994

• புதுவை இரத்தினதுரை

# ஒரு மரண புராணம்

*'கந்தையா வாத்தி' கண்மூடி விட்டாராம்*
*சந்தைக்கு வந்தது செய்தி*
*எல்லோரும் திடுக்குற்றுப் போனார்கள்.*
*நல்லாய் இருந்த மனிதன்*
*நேற்றிரவு*
*நடுச்சாமம் எழுந்து வெளியே போய் வந்து*
*படுத்தாராம்*
*காலையிலே பார்த்தால் கண்மூடிக் கிடந்தாராம்.*
*உண்மையிலே அச்சாச்சாவு*
*புண்ணியவான் போய்விட்டார்.*
*ஊரெல்லாம் சேதி ஓடிப்பரவியதால்*
*நாற்சாரவீடு நிரம்பி வழிகிறது.*
*முற்றம், வளவு, பின்கோடி எங்கெங்கும்*
*ஊர்வந்து கூடி உளது.*
*வாங்கொன்றில்*
*கந்தையா வாத்தி கால் நீட்டிக் கிடக்கின்றார்.*
*'பொன்னம்மா மாமி'*
*அவர் பெஞ்சாதி*
*விம்மி அழும் குரலின் வீச்சில்*
*வீடே அதிர்ந்து வெடிக்கிறது.*
*சும்மாவா?*

நாற்பது வருடங்கள் தாங்கிய 'கொழு கொம்பை'
இன்றிழந்துபோன துயரம்
எப்படித் தாங்கி இருப்பாள்?
துடிக்கின்றாள்.
முற்றத்தைப் பந்தல் மூடிற்று.
இழவு சொல்லிப் போகும்
காரிரண்டு புறப்பட்டுப் போகிறது.
பெட்டி,
கிரிகைச் சாமான்கள்
வந்திறங்கிய குருக்கள் வசமாச்சு.
வெற்றிலைக்கும் சுருட்டுக்கும் வெகு மவுசு
எல்லோரின் வாயும் இரத்தச் சிவப்பாச்சு.
கொள்ளிவைப்பதாரென்ற கேள்வி எழுகிறது.
ஏன்?
கந்தையா வாத்தி மலடனல்லன்
ஏழு பிள்ளைகளுக்குத் தகப்பன்.
நாலு பொடியள்
மூன்று பேர் பொடிச்சிகள்
எங்கே அவர்கள்?
வாத்திவளர்த்த நாய்மட்டும்
கட்டிலின் கீழே
காத்துக் கிடக்கிறது.
கொள்ளிவைப்பதாரென்ற கேள்வி எதற்கு
பிள்ளைகள் எல்லாம் எங்கே போனார்கள்?
பொன்னம்மா மாமி பெரிதாய்க் கத்துகிறாள்.
மூத்தவன் லண்டனிலாம்
மற்றவன் ஜேர்மனியாம்
நடுவிலான் நோர்வேயில்
கடைசிப் பெடியன் கனடாவாம்.
பெட்டைகளில் ஒருத்தி வத்தளையில்
மற்றவள் பிரான்ஸ்சிலாம்
சரி போகட்டும்.
கடைக்குட்டி கவிதா எங்கே
அவளும் சுவிஸ்சுக்குப் போய் ஆறுமாதமாம்.
கொள்ளிவைப்பதாரென்ற கேள்வி எழுகிறது.

• புதுவை இரத்தினதுரை

ஐயோ பாவம்!
கந்தையா வாத்தி கட்டிலிலே கிடக்கின்றார்
பொன்னம்மா மாமி பெரிதாய்க் கத்துகிறாள்.
வாத்தி வளர்த்த நாய் மட்டும்
கட்டிலின் கீழே
காத்துக் கிடக்கிறது.
வேரிழந்த ஆலமரமாகி
நடைப்பிணமாய்
ஊரிருந்தாரென்ற உண்மை சுடுகிறது.
தாங்குமென்று ஈன்ற விழுதெல்லாம்
தாய் மரத்தை
ஏங்க விட்டுச் சென்ற ஏக்கம்தான் சாவாச்சு.
என்ன உறவு
ஏனிந்தப் பொய் வாழ்வு?
கண்ணினுக்கு 'அந்திமத்தில்' காவலில்லை
என்றான பின்பும்
இமைகளையேன் இவர்கள் பெறவேண்டும்?
□□

வெளிச்சம்
புரட்டாதி 1994

• புதுவை இரத்தினதுரை

# சுட்டுக்கழிக்கவா சுதந்திரம்

வெண்புறா சிறகுவிரித்து
வெளியே வந்து
விரிந்த வானமெங்கும் திரியட்டும்.
அலகுகளில் 'ஒலிவ்' கிளை சுமந்து
தாழப் பதிந்து பறக்கட்டும்.
அவை பாடும் கானாமிர்தம்
எங்கள் செவிகளில் ரீங்காரமிடட்டும்.
குருதிவழிந்த சுவர்களெங்கும்
சமாதானத் தேவதையின்
சாந்த முகம் சிரிக்கட்டும்.
நம்பிக்கைக் 'கனவின் நாயகர்கள்' வரும்
'பறக்கும் பல்லக்கு'
'மலைவேம்பு வளவுக்குள்' அடிக்கடி இறங்கட்டும்.
படித்தவரும் பாமரரும்
'வானமரர்' வரும் இந்திரவிமானத்தை
தொட்டுப்பார்த்து முத்தமிடட்டும்.
எந்த நேரமும் 'தங்கை' வரலாம்
அந்திமந்தாரப் பூவில் மாலைகட்டி
வந்திறங்கும்போது சூட்டுவோம்.
என்னதான் இருந்தாலும்

*இரத்த உறவை எப்படி உதறலாம்?*
*"கண்ணிரண்டும் விற்றுச் சித்திரம் வாங்கினால்*
*கைகொட்டிச் சிரியாரோ?"*
*யாரடா பாடுவது?*
*உள்ளதையும் கெடுக்கும் கொள்ளிக்கண்ணன் யார்*
*அட நீயா? முண்டாசுக் கவிஞன் பாரதியே!*
*உன்னை முன்னுக்கு வரச் சொன்னது யார்?*
*பொங்கி வரும் நேரத்தில் பானையைப் போட்டுடைக்கவா*
*வந்து நிற்கிறாய்? போய்விடு.*
*சிட்டுக்குருவிக்கும் சுதந்திரம் தேடிய*
*எட்டயபுரத்து அரசே!*
*நீ வாழத் தெரியாத வகையினன்*
*எங்களையும் குழப்பாதே போய்விடு.*
*மின்சாரம்,*
*நெடுஞ்சாலை,*
*'சம்சாரம்' விரும்பும் சில சாமான்கள்*
*இந்தளவுமே மெத்தத் திருப்தி.*
*இதற்குமேல் சுதந்திரம் எதற்கு*
*சுட்டுக்கடிக்கவா?*
*தீபாவளிக்கிடையில் தீர்வு வருமென்றால்*
*பாவாடை மலியும்*
*பாத்திரங்கள் விலை குறையும்.*
*பெற்றோல் வந்தால் புதுக்கார் வாங்கலாம்.*
*தண்டவாளங்கள் இணைந்தால்*
*'றெயிலே'றிச் சாமான்கள் வரும்.*
*அடிக்கடி கொழும்பில் 'அலுவல்கள் பார்க்கலாம்.'*
*யாழ்தேவி தமிழரைச் சுமந்து செல்லும்*
*திரும்பி வரும்போது 'சகோதரங்களை' அழைத்துவரும்.*
*நாகவிஹாரை வளவுக்குள்*
*தூபியுடன் கூடிய புத்த கோவிலில்*
*தாமரைத் தட்டேந்திச் சிங்களப்பெண்கள் சிரிப்பர்.*
*'காமினி ரீறூம்' கதவுகள் திறக்கும்.*
*கற்பனையே எத்தனை அற்புதம்.*
*"விதந்தரு கோடி இன்னல்*
*விளைந்தென்னை அழித்திட்டாலும்*

• புதுவை இரத்தினதுரை

சுதந்திரதேவி நின்னைத் தொழுதிடல் மறக்கிலேனே!"
போரிடச் சொல்லிப் பாடுவதாரடா
சுதந்திரம்பற்றிச் சொல்பவன் யாரடா
என்ன திமிரிருந்தால் இப்படிப் பாடுவான்?
அதுவும் இந்த நேரத்தில்
யாரடா அவன்?
அட பாரதியா?
நீயின்னும் இங்கேயா நிற்கின்றாய்?
கவியரசே!
பாலுக்கும், சீனிக்கும், பருப்போடு மாவுக்கும்
நாலுக்கும்தானே நாங்கள் போரிட்டோம்
ஏனய்யா உனக்கிந்தப் பொல்லாப்பு?
நீட்டோலைக்கு இதுவல்ல நேரம்.
பாட்டரசே! உனக்கென்ன பாட்டு?
போய்விடுக!
"சும்மா வராது சுதந்திரம்" என்று
'சூரியத்தலைவன்' சொன்னதை மறந்தார்.
இன்னுயிர் இழந்து மண்ணுள்ளே புதைந்த
கண்ணின் மணிகளின் கல்லறைகள் மறந்தார்.
சிதறிப்போன வாழ்வை மறந்தார்.
திசைகளுக்கொன்றாய்ப் பறந்ததை மறந்தார்.
மறப்பது எங்களின் மரபென ஆனதால்
கிடைப்பதில் மகிழ்வதே விடுதலை என்றார்.
பாரதியே! அஞ்சற்க; வேங்கை அசையாது.
அனல் மூண்டு
பிஞ்செல்லாம் அதில் வீழ்ந்து பொசுங்கிடினும்
கல்லறையில்
கண் துஞ்சும் வீரர் கனவு நனவாகும்.
அஞ்சற்க; வேங்கை அசையாது.
போய் வருக!
□□

வெளிச்சம்
ஐப்பசி 1994

# காதலிக்கக் கற்றுக்கொள்

*காதலே உன்னதம்*
*காதலே பரிபூரணம்*
*காதலே நேசிப்பின் 'நிலாவரை'.*
*ஆதலால் மானுடனே!*
*காதல் செய்வாய்.*
*காதலிப்பதென்று முடிவெடுத்து விட்டாயானால்*
*யாரைக் காதலிக்கலாம்?*

எதிர்ப்பாலார் மீதான காதலெல்லாம்
இங்கு காமம் கலந்தே விற்பனையாகிறது.
தோலில் சுருக்கம் விழுந்தவுடனேயே
அதிகமான 'காதல்கள்'
அஸ்தமனமாகி விடுகின்றன.
தெருநாயும் காதலித்தே கலவி செய்கிறது.
இதில் தெய்வீகம் இருப்பதென்பதெல்லாம்
சுத்தப் பம்மாத்து.
வேறெதைக் காதலிக்கலாம்?
அட மானுடனே!
தாயகத்தைக் காதலிக்கக் கற்றுக்கொள்.
பெற்றதாய் சுமந்தது பத்துமாதம்
நிலம் சுமப்பதோ நீண்டகாலம்.
அன்னை மடியிலிருந்து கீழிறங்கி
அடுத்த அடியை நீ வைத்தது
தாயகத்தின் நெஞ்சில் தானே.
இறுதியில் புதைந்தோ
அல்லது எரிந்தோ எருவாவதும்
தாய்நிலத்தின் மடியில்தானே.
நிலமிழந்துபோனால் பலமிழந்துபோகும்
பலமிழந்துபோனால் இனம் அழிந்துபோகும்.
ஆதலால் மானுடனே!
தாய்நிலத்தைக் காதலிக்கக் கற்றுக்கொள்.
□□

வெளிச்சம்

ஐப்பசி 1994

# அமைதியாகத் தூங்குங்கள்

*கார்த்திகை மாதம்.*
*வானம் கிழிந்து*
*எந்தநேரமும் மழை வரலாம்.*
*ஈரநிலம்.*
*மயிர்க்கணுக்கள் சில்லிட்டுப் போக*
*குளிர்ந்த காற்று சுகம் கேட்கிறது.*
*நள்ளிரவு*

*'நேற்று இறக்க இன்று பிறக்கும்'*
*கணக்குப் பிசகாத பன்னிரண்டுமணி.*
*கோபுரத்து மணிகளின் நாத அஞ்சலி.*
*நெஞ்சத்து நெருப்பு நெய்விளக்கில் பற்றி*
*எரியத் தொடங்க*
*ஒரு பாட்டுக் கேட்கிறது.*
*'தாயகக்கனவுடன் சாவினைத்தழுவிய*
*சந்தனப் பேழைகளே - இங்கு*
*கூவிடும் எங்களின் குரல்மொழி கேட்குதா*
*குழியினுள் வாழ்பவரே'*
*மகளே!*
*மகனே!*
*கல்லறையில் தூங்கும் கண்மணிகள்*
*கண்திறந்து பாருங்கள்.*
*இலக்கு தூரத்தேதான் இருக்கிறது.*
*என்றாலும்*
*பாதை தவறாத பயணம் தொடரும்.*
*எவருடனாவது கைகுலுக்கி*
*பேச்சுவார்த்தை மேசைக்குப் போகும்போது*
*உங்கள் முகங்களே கண்களில் தெரியும்*
*இது உறுதி.*
*அமைதியாகத் தூங்குங்கள்.*
□□

*வெளிச்சம்*
*கார்த்திகை 1994*

# பேசாமற் கிடக்கின்றாய்

*மெல்ல இமை திறந்து
வானரசன் சிரிக்க
கலவி மயக்கம் கலையாத
பூமியின் மேனி
புல்லரித்துப் போகிறது.
ஆசைநாயகனின் வருடலில்
நிலமடந்தை*

நாணிக் கிடக்கின்றாள்.
'போதும் எழும்பு' என்று
கோவில்மணி தட்டிக்
கேலி செய்கிறது.
மார்கழி மாதக் குளிர்மேகம் வந்து
மஞ்சள் பூசிக் குளிப்பாட்டிவிட
நீர் சொட்டும் கூந்தலிலே
முற்றத்தில் பூத்த மல்லிகையை
அள்ளிச் சொருகி
அழகாய் வருகின்றாள்.
கண்ணுள்ள எல்லோரும் பாருங்கள்.
எங்கள் மண்
எவ்வளவு அழகானவள்.
உடல்கீறி விதைபோட்டால்
உரமின்றி மரமாகும்.
கடல் மீது
வலை போட்டால்
கரையெங்கும் மீனாகும்.
இவளின் சேலையைப்பற்றி
இந்தா ஒருவன்
தெருவில் இழுக்கின்றான்.
பார்த்துவிட்டுப்
படுத்துறங்குபவனே!
நீட்டிப்படு.
உனக்கும் நெருப்பூட்டிக் கொளுத்த
அவனுக்கு வசதியாக இருக்கட்டும்.
'ரோஷ' நரம்பை
யாருக்கு விற்றுவிட்டுப்
பேசாமற் கிடக்கின்றாய்?
□□

வெளிச்சம்
மார்கழி 1994

# பின்னேர மீன் வாங்க பொன்னாலை போகலாம்

யுத்த நிறுத்தமாமே
மெத்த மகிழ்ச்சி.
'வரத்து மீன்' வாய்க்கு ருசி.
இனி..
பொன்னாலைக் கடலுக்குச் சென்று
பின்னேர மீன் வாங்கலாம்.
பண்ணைப் பாலத்தில் நடந்தபடி
பால்நிலவேறும் அழகை ரசிக்கலாம்.
காவலரண் கம்பியில்

*தோய்த்த உடுப்பைக் காயப் போடலாம்.*
*மலையென உயர்ந்த மண்ணரணில்*
*பற்றிப்படர்ந்துள்ள அறுகம்புல்லில்*
*பசுமாட்டை மேயவிடலாம்.*
*ஊமையாகிப் போனது*
*எதிரியின் துப்பாக்கி வாய்.*
*கூவிய எறிகணைக் கழுகின் முட்டைகள்*
*குஞ்சுக்கு வைத்தபோதே கூழாகிப்போனது.*
*எல்லாம் சரி.*
*கையில் கிடைத்தளவு காணுமென்றா*
*பையிற் போட்டுக் கொண்டாய்?*
*யுத்தம் உனக்கும் நிறுத்தம் தானே!*
*அதையேன் மறந்தாய்?*
*போரை போரால் நிறுத்த முயன்றவன்*
*தோற்றுப் போனான்.*
*பேச்சால் நிறுத்த நினைத்தவன்*
*ஜெயித்து விட்டானா?*
*தட்டிலென்ன இருக்கிறது?*
*ஒன்றுமே இல்லை*
*வெறும் தராசும் படியும் தான்.*
*தங்கு வேட்டையில் இது சகஜம்.*
*தளராது இருப்போம்.*
*'சிங்க வேட்டையே' எங்களின் இலக்கு.*

□□

*ஈழநாதம்*
*23.12.1994*

# பாட்டுவரும் நேரம்

பின்னிரவு நேரம் பொன்னிலவு ஏறும்
போதினிலே பாட்டுவரு மாமே.
தென்றல் விளையாட சின்னக்கொடியாட
தேடியொரு பாட்டுவரு மாமே.

வெள்ளியலை துள்ளி மெல்லநுரை தள்ளி
வீழவொரு பாட்டுவரு மாமே.
கொள்ளை யழகோடு முல்லை சிலிர்க்கின்ற
கோலமதில் பாட்டுவரு மாமே.

காதலர்கள் பேசும் போதைமொழி மீதில்
கண்திறந்து பாட்டுவரு மாமே.
நாதவொலி மேவி வேதவொலி யாகும்
நாழிகையில் பாட்டுவரு மாமே.

வேட்டுவரும் நாட்டில் பாட்டுவருமாகில்
வேதனையில் பாட்டுவரு மோடா?
காட்டுநெருப்பாகிப் பாட்டுவருமாகில்
கண்ணெதிரே மூட்டுவொரு பாட்டு.

நஞ்சணிந்த சின்னப் பிஞ்சுபகை வென்று
"நம்புதமிழ் ஈழமெனும்" போதில்
நெஞ்சிலுணர்வாகிக் கொஞ்சவில்லையாயின்
நீயெழுதும் பாட்டையெவர் கேட்டார்?
□□

வெளிச்சம்
தை 1995

# அகதிமுகம் அல்லது அகதிமுகாம்

*ஓரிரவு தூங்குகின்ற நேரம் 'ஆமி' பாய்ந்தனர்.*
*ஊரிருந்து நாங்களெல்லாம் வேரிழந்து சாய்ந்தனம்.*
*காரிருளில் நாய்தொடர நாம்நடந்து வந்தனம்.*
*காலையிந்த ஊரிலுள்ள கோயில்வந்து சேர்ந்தனம்.*

விறகுவெட்டப் போன அப்பன் வீடுவந்து சேரலை.
வீடுவந்து சேர்ந்துமென்ன அடுப்புமூட்ட வழியிலை.
உறவை ஊரைத் துறந்துவந்து அதிகநாட்கள் ஆகலை.
அகதியென்ற பேரெடுத்தும் அரிசி சீனி காணலை.

பள்ளிக்கூடம் போனபிள்ளை படிப்பை நிறுத்திப்போட்டுது.
பாணுமின்றிக் கூழுமின்றிப் பட்டினியாற் சாகுது.
வெள்ளைக்காரர் மாதம்ரண்டு வேளைவந்து பார்ப்பினம்.
வெளிச்சமற்ற குடிசையென்று எழுதிக்கொண்டு போவினம்.

மறைப்புஅற்ற கிணற்றடியில் உடுப்புமாற்றிக் குளிக்கின்றோம்.
மலசலங்கள் கழிப்பதற்கும் இடங்களின்றித் தவிக்கின்றோம்.
அறைக்குள்காணும் அந்தரங்கம் அம்பலத்தில் கிடக்குது.
அகதிமுகாம் வாழ்க்கையிலும் பிரசவங்கள் நடக்குது.

மொட்டைக்கறுப்பன் சோறுதின்று முறுக்கெடுத்த உடலிது.
முரல், திரளி, திருக்கைசுறா நெய்பிடித்த உடலிது.
சுட்ட கருவாடு, முயல், உடும்பு தின்ற உடலிது.
சும்மா 'அம்மாப்பச்சை' தின்று சுரணையற்றுக் கிடக்குது.

சாக்கிலெங்கள் உடல் சரித்து சாமம்வரை தூங்கிறோம்
சாமம்வரை தூங்கிவிட்டுப் பாரமேற்றப் போகிறோம்.
ஏற்றிவரும் விறகுவிற்றே எங்கள் வாழ்வு ஓடுது.
என்று மீண்டும் 'அந்த வாழ்வு' எம்மைவந்து கூடுமோ?
□□

வெளிச்சம்
தை 1995

# கற்பனைக் குழந்தையைக்
# கருவிற் சுமந்து
# பத்தியத்துக்கு உள்ளிப்பூடு தேடுகிறாய்.

*உன்முகத்தில்*
*ஆயிரம்மத்தாப்பு விரிந்த அழகு.*
*என்ன நடந்தது?*
*'தூங்கு மூஞ்சி' மரத்தின் கிளையாய்*
*சோர்ந்துபோய்க் கிடந்தாயே*
*திடீரென உன்னில்*
*வெளிச்சம் பரவிய விசித்திரம் என்ன?*
*நேற்றுவரை அலுத்தபடி*
*காற்றுக்கெதிராய் சைக்கிள் உழக்கினாய்.*
*இன்று பாட்டுப் பாடியபடி பறக்கின்றாயே*
*என்ன நடந்தது?*
*வானத்துத் தேவதை*
*உன்வீட்டுக் கோடிக்குள்*
*வந்திறங்கினாளா?*
*ஆட்டுப்பட்டி 'அட்டாளையை' அரக்கும்போது*

• புதுவை இரத்தினதுரை

பூமிக்கடியில் புதையல் கிடைத்ததா?
மண்சட்டியில் அவித்த மரவள்ளிக்கிழங்கு
தங்கக் கட்டியான அதிசயம் நிகழ்ந்ததா
உனக்கு என்ன நடந்தது?
வானவில்லின் அழகில் வசமிழந்து போனாய்.
நொடிப் பொழுதில்
கலைந்து போகும் நூதனத்தில்
உன்னையிழந்து உருகிப் போனாய்.
கற்பனைக் குழந்தையைக் கருவிற் சுமந்து
பத்தியத்துக்கு உள்ளிப்பூடு தேடுகிறாய்.
நீ குளிக்க நினைக்கும் குளம்
நச்சுப்பொய்கை
வேட்டியோடு இறங்கினாலும்
அம்மணமாகவே வெளியே வருவாய்.
நூறு விழுக்காடு
சேற்றில் அமிழ்ந்து செத்தே போவாய்.
ஆரோ உடுக்கடிக்க ஆடுகிறாய்
ஆட்டம் முடியும்போது
உடுக்கடித்தவன் ஊருக்குப் போய்விடுவான்.
நீ படுக்கையிற் கிடந்தபடி
பழைய கணக்கா பார்க்கப் போகின்றாய்?
கால் நடையாகக் கதிர்காமம் புறப்பட்டால்
வெருகலோடு வீடு திரும்பக் கூடாது.
உச்சிக் கிளையில் சுற்றும் 'மச்சயந்திர'த்தை
குறிவைத்து நாணேற்று
இலக்கு விழும் வரை எய்து கொண்டிரு.
இடையில் வரும் 'மாரீச மோகினி'களின்
கடைக்கண் பார்வையில் கலங்கிவிடாதே.
மீண்டும் இருளாத விடியலிற்தான்
உனக்கு நிரந்தர வெளிச்சம்.
□□

*ஈழநாதம்*
*20.01.1995*

# ஏனிந்த மௌனம்

*நிலம் இருண்டு கிடக்கிறதே*
*நிலவு எங்கே போனது?*
*மரங்களெல்லாம் மொட்டையாகிக் கிடக்கிறதே*
*பூக்களுக்கு இன்றென்ன கதவடைப்பு?*
*எறிகணைகள் வந்து வெடித்தபோது*
*இருந்த உறவும்*
*ஒருவருக் கொருவரான உசாவலும்*
*இன்றேன் இல்லாதழிந்தன?*

•

அவரவர் வேலியடைக்கத் தொடங்கினர்.
உடைந்த ஓடுமாற்றக் கூரையேறினர்.
'அன்ரனா' உயர்த்திக் கட்டி
அலைவரிசை தேடுகின்றனர்.
இதுதானா "மீண்டும் தொடங்கும் மிடுக்கு?"
மேசையில் பேச உட்கார்ந்த உடனேயே
இப்படியென்றால்
விடுதலை கிட்டும் நாளில்
குயில்கூட கூடுகட்டத் தொடங்கிவிடுமா?
எனக்கு நீ உனக்கு நானென்ற
உறவு நூலிழை உக்கி அறுந்துபடுமா?
வீதிசுற்றிய தேர் இருப்பிடம் வருமுன்னர்
மேற்கு வீதியில் வைத்து
இழுத்த வடத்தைக் கைவிட்டு
சுவாமியை இறக்குவதை
சுதந்திரம் என்பதா?
கால்கள் கொஞ்சம் களைப்பாறுகின்றன
அதற்காகப் பயணம் முடிந்துவிட்டதென்றா
அர்த்தம் கொள்வது?
ஏனிந்த மௌனம்
எவராயினும் வாய்திறந்து பேசுங்களேன்.
□□

வெளிச்சம்
மாசி 1995

# நானோர் அகதி

*நானொரு மனிதன்! நானோர் தமிழன்!*
*நாடெனக் கிருந்தும் நானோர் அகதி*
*எனக்கொரு நாடும் எனக்கொரு மொழியும்*
*இருந்திடும் போதும் நானோர் அகதி.*

*'எந்தையும் தாயும்' மகிழ்ந்த இந்நாட்டில்*
*எனக்கெனச் சுதந்திரம் எதுவுமே இல்லை*
*மந்தைகள் கூட மகிழ்வுடன் தூங்கும்*
*மகிழ்வொடு நானோ தூங்கியதில்லை.*

*"தமிழனைக் கொல்வோம்! தமிழனைக் கொல்வோம்!*
*தாரக மந்திரம் இதுவெனச் சொல்வோம்!"*
*ஶ்ரீலங்காவின் சுதந்திர கீதம்*
*இப்படியான வரியுடன் தொடங்கும்.*

*இனவெறியாட்டம் 'தேசிய நடனம்'*
*இருபது தமிழனைக் கொல்பவன் 'மேதை'*
*பிணங்களைத் தின்னும் பேய்களின் உருவம்*
*பொறித்தது லங்கா தேசியச் சின்னம்!*

*பள்ளிகள் மீதும் குண்டுகள் பொழியும்!*
*படிப்பகம் மீதும் குண்டுகள் பொழியும்!*
*காலையிற் சென்று கரைவலை இழுத்தோர்*
*மாலையிற் பிணமாய் மறுகரை ஒதுங்குவர்.*

*பயங்கர வாதிகள் பதுங்கிய இடங்களை*
*ஆயுதப் படையினர் அழித்தனரென்று*
*'வாஹினிச் செய்தி' காரணம் சொல்லும்.*

*நானொரு மனிதன்! நானோர் தமிழன்!*
*நாடெனக் கிருந்தும் நானோர் அகதி*
*எனக்கொரு நாடும் எனக்கொரு மொழியும்*
*இருந்திடும் போதும் நானோர் அகதி.*
□□

*தேர்ந்த கட்டுரை*
*1995*




# காற்றும் கவிஞனும் பூக்களும்

நேற்றுவரை அழகாயிருந்தது அண்டவெளி.
பொசுக்கென்று யாரோ தீக்குச்சி தட்டியதால்
முகில்கள் தீப்பிடித்து முளாசுகின்றன.
அதற்குள்ளே நிலவும் அகப்பட்டுக் கொண்டது.
கலவிக்கு
முகில்களைக் கலைத்த காற்றுக்கூட
எரியட்டும் என்று விட்டு விட்டு
தான் தப்பிவிட்டது.

தண்ணீருற்றித் தணிப்பாரின்றி
இப்போது வானமே பற்றியெரிகிறது.
பூமியிலிருந்து பார்த்த கவிஞனுக்கு
கோபம் வந்தது.
வார்த்தைகளை வரவழைத்துக் கொண்டான்.
ஆத்திரத்தில் அண்ணாந்து பார்த்தபடி
பாட்டெழுதினான்
பின்னர் படுத்துவிட்டான்.
தப்பியோடிய காற்றும்
சும்மா இருக்கவில்லை.
பனி விழும் தேசத்திலிருந்து
முகிலுக்காகவும்
வானத்துக்காகவும்
அஞ்சலிக் கூட்டங்கள் நடத்தியது.
வெள்ளிப் பூக்கள்
நெருப்பணைக்கத் தொடங்கின.
கருகி ஒவ்வொன்றாய் கல்லறைக்குப் போயின.
பூப்பதும் கருகுவதுமாக
பூக்கள் தீயணைக்கின்றன.
காற்றும், கவிஞனும் கவிதை எழுதிவிட்டு
மீண்டும் தூக்கம்.
முன்னேறும் வெள்ளிப் பூக்கள்
முகிலைக் காப்பாற்றும்.
□□

*ஈழநாதம்*
*03.03.1995*

# அது நிகழ்ந்திருக்கக் கூடாது

*நேற்றடித்த மஞ்சள் வெய்யிலும்*
*உடல் வருடிய இளவேனிலும்*
*இன்றேன் இல்லாமற் போயின?*
*பருவம் தவறாத மாரியும்*
*பூம்பனியும்*
*பொய்த்துப் போனதேன்?*
*முற்றத்தில் பூச்சொரிந்த வேம்பின்*
*துளிர்கருகி,*

• புதுவை இரத்தினதுரை

*இலைகருகி,*
*கிளைகளில் ஈரம்வற்றி*
*வேர்கள்கூடக் காய்ந்து கிடக்கிறதே.*
*வைகாசி மாதத்துக் குயில்கள் எங்கே?*
*தட்டிவிட்டுப் படுக்கக்கூடிய*
*தார்வீதிகள்*
*அம்மைத் தழும்பு முகமானதேன்?*
*அம்மன் கோவில் அசையாமணிக் கோபுரம்*
*ஏன் இடிந்துளது?*
*சிரித்தபடி கையசைத்துப் போகும்*
*அந்தச் சீருடைச் சிறுவனின்*
*வலதுகரமேன் மொட்டையானது?*
*கூப்பிட்ட குரலுக்கு குரைக்கின்ற*
*நாய்களைக்கூட யார் கடத்தினர்?*
*எவரிடமாவது கேட்கலாமென்றால்*
*வீதியெல்லாம்*
*வெறிச்சோடிக் கிடக்கின்றன.*
*அகலத் திறந்து கிடக்கும் படலைகளை*
*எவன் பூட்டினான்?*
*அன்று*
*நான் வெளியேறியிருக்கக் கூடாது.*
*வெளியேறியிருக்கவே கூடாது.*
□□

*வெளிச்சம்*
*பங்குனி 1995*

# ஊருக்குத் திரும்புதல்

*கால்களில் வேகம் பூட்டி*
*காற்றாய் விரைவோம்.*
*மகளே!*
*கால்கள் வலிக்கிறதா?*
*கலங்காதே.*
*ஊருக்குத் திரும்பும் மகிழ்ச்சியில்*

தூரம் குறுகிவிடும்.
இன்னும் சொற்ப தூரம்தான்.
மகளே! எட்டி நட.
எம்மைப் பிடித்த பீடையொழிந்தது.
இருட்டு அழிந்தது.
எங்களூரில் வேர்விட்டிருந்த
கள்ளியும் நாகதாளியும்
இல்லாதழிந்தனவாம்.
நெருஞ்சியும் நாயுருவியும்
நீறாகிப் போயினவாம்.
இனித் தென்றல் வந்து
தோளிலேறி விளையாடும்.
மேய்ச்சல் முடிந்து வீடுதிரும்பும்
மாடுகளின் மகிழ்ச்சியல்லவா எமக்கு?
மகளே!
நின்று; விழிகளைத் தூரவீசு.
அதோ ஊரின் எல்லை தெரிகிறது.
அந்த வயல்வெளியைக் கடந்து விட்டால்
அதற்கப்பால் பனைக்கூடல் ஒன்றுவரும்.
அதையும் கடந்து நடந்தால்
மணிப்புறாவும் ஆட்காட்டியும்
கௌதாரியும் குடியிருக்கும்
பரந்தவெளி விரிந்து கிடக்கும்.
அதையும் கடப்போம்.
அதற்கப்பால்
வெள்ளைமணல் விரித்த
கடற்கரை வரும்.
ஈரம் சுவறிய கரையின்மீது
பாதம் நனைய நடந்து போனால்
'பூதவராயர்' கோயில் வரும்.
அந்தக் கோயிலின் பக்கமாகவே
முன்னரெம் குடியிருப்புக்கள் இருந்தன.
மகளே!
அப்போது உனக்கு இரண்டு வயது.

*திடுமென ஒருநாள்...*
*எங்களூருக்கு 'இயமன்' வந்தான்.*
*அவனோடு ஆயிரம் 'கிங்கரர்' வந்தனர்.*
*ஊர்முழுதும் தீக்குளித்தது.*
*எண்ணையூற்றி எரித்ததால்*
*ஊரின்முகம் கருகிப் போனது.*
*வீடு - வயல் - தோட்டம் - துரவு*
*கோயில் - பசு - கன்று - மரங்கள்*
*ஆண்கள் - பெண்கள் - சிறுவர் - கிழடுகள்*
*எல்லாமே எரிந்து போயின.*
*கோயிற் கிணற்றில்*
*தண்ணீரள்ளப்போன*
*உன்தாயும்,*
*நெசவடிக்கப் போன உன் அக்காவும்*
*அன்று வீடு திரும்பவில்லை*
*மீண்டும் வரவேயில்லை.*
*அன்று உன்னை வாரியெடுத்து ஓடிவந்தேன்.*
*அதன்பிறகு இன்றுதான்*
*வீடு திரும்புகின்றோம்.*
*மகளே! எங்கள் வீடு*
*பத்து வருடங்கள் நாங்களிருந்த*
*அகதிமுகாம் போன்றதல்ல*
*மகளே! அது அழகான வீடு.*
*அத்திவாரத்திலிருந்து கோப்பிசம் வரையும்*
*என் வியர்வையில் நனைந்தவீடு.*
*முற்றத்தில்*
*உன் அக்கா வளர்த்த பூங்கன்றுகளின்*
*முகங்கள் தினசரி சிரிக்கும்.*
*விதம் விதமான நிறங்களில்*
*கொள்ளையழகு குடியிருக்கும்.*
*கிணற்றடியில்*
*செவ்விளனீர்க் கன்று குலைதள்ளியிருக்கும்.*
*வீட்டுக்குப் பக்கத்தில் இரண்டு வேப்பமரங்கள்*
*தலையாட்டிச்சுகம் கேட்க*

• புதுவை இரத்தினதுரை

*ஜில்லென்று காற்று வீசும்.*
*குயில்கள் வந்திருந்து கூவும்.*
*மைனாக்கள் ஏதேதோ பேசும்.*
*உன் வீடு அழகானதென்பதை*
*பார்த்ததும் ஏற்றுக்கொள்வாய்.*
*மகளே!*
*ஐயோ என்மகளே!*
*பூதவராயர்கோவிலைக் காணவில்லையே!*
*என்னயிது?*
*பூமி பிளந்து என்னை விழுங்குகிறதா?*
*மகளே!*
*இதுதான் எங்கள் வீடிருந்த இடம்.*
*இங்கேதான் அந்த வேப்பமரங்கள் நின்றன.*
*அப்போ எங்கள் வீடு எங்கே?*
*என் மனைவி எங்கே?*
*உன் உடன்பிறப்பு எங்கே?*
*பன்னிரண்டு வயதான*
*என் சின்னமகளே!*
*விடுதலைக்கு நாங்கள்*
*பெரிய விலை கொடுத்துவிட்டோம்.*
*வா மகளே*
*இந்த இடத்தில்*
*இனியொரு கொட்டில்கட்டிக் குடியிருப்போம்.*
□□

*வெளிச்சம்*
*பங்குனி 1995*

## கோடி எழில்

வைகறையில் கோடியெழில் வாங்குகின்ற ஊரும்
வாழையிலை மீதிருந்து வீழும்பனி நீரும்
ஐயனவன் ஏறிவரும் அழகுமணித் தேரும்
அற்புதமாம் கற்பனைக்கு ஒப்பனைகள் பாரும்.

பச்சைநிறப் பட்டுடுத்த பரந்தவயல் வெளியும்
பால்நிலவிற் பண்ணெடுத்துப் பாடுகின்ற மொழியும்
உச்சிமரம் மீதிருந்து உரசுகின்ற கிளியும்
ஊற்றெடுக்கும் கற்பனையின் உட்புகுந்து வழியும்.

• புதுவை இரத்தினதுரை

ஒற்றையடிப் பாதையது ஏறுகின்ற மேடும்
ஓரவிழியால் உள்ளத்தைக் கீறுகின்ற பேடும்
புற்தரையில் உண்டுநடை போடுகின்ற மாடும்
புத்தமுதக் கற்பனையிற் புகுந்துவிளை யாடும்.

நள்ளிரவில் தூரயிருந் தோடிவரும் பாட்டும்
நல்லநிலா வேளையிலே ஆடுகின்ற கூத்தும்
வெள்ளிகளும் வெண்ணிலவும் சேர்ந்தவொரு கூட்டும்
விந்தைமிகு கற்பனைகள் தந்துளத்தை ஆட்டும்.

கற்பனைக்கு ஒப்பனைகள் கட்டியநம் ஊரை
கார்த்திகையில் நாமிழுத்த கண்ணகியாள் தேரை
அற்புதமாய் எம்கிணற்றில் அள்ளியுண்ட நீரை
அந்தரிக்க விட்டெடுத்தோம் அகதியென்ற பேரை.

தென்றல்விளை யாடுகின்ற சோலையுடன் வயலும்
சொந்தமென நாமிருந்து சோறுதின்ற அயலும்
இன்றுபறி போனதினி என்றுவந்து சேரும்
ஈரநிலம் காயமுன்னர் போய்விடலாம் வாரும்.
□□

வெளிச்சம்
சித்திரை 1995

# ஒரு சின்னக்கிராமத்தின் பெரிய கதை



சித்திரை மாதம்.
சூரியனும் சுடுமணலும் சுட்டெரிக்க
நீளுமொரு பாதை.
அடுத்த கிராமத்துக்கு இதுதான் கிட்டிய வழி.
நேர்வகிடாய் நீண்டு கிடக்கும்
ஒற்றையடியில் ஊர்மிதித்து நடக்கும்.
பக்கமெலாம் முந்தி விளைந்த நிலம்
பாலையெனப் படர்ந்து கிடக்கும்.
பூக்களும் கொடிகளும் பொலிவிழந்து,
காய்ந்து கருவாடாகி
முள்ளியும் கள்ளியும் முகம்காட்டும்.
என்றாலும் பயணம் தொடரும்.
இடையிடையே குடைவிரிக்கும் மரநிழலில்
ஊர் இளைப்பாறும்.
மீண்டும் நடை தொடரும்.
பட்டணத்திருந்து
பக்கத்து ஊர்வரையும்தான் பஸ் வரும்.
சந்தையும் சாய்ப்புக் கடைகளும்,
பத்தாம் வகுப்பு வரையான பள்ளியும்,
துயரத்தைச் சொல்லியழுதால்
அள்ளியணைக்குமென நம்பும்
அம்மன் கோயிலும்,
அடைக்கல மாதா சொரூபமும்,
இன்னும் இன்னும் எல்லாமும்
அடுத்த கிராமத்திலேயே அடக்கம்.

தேவையிருப்பதால்
இந்தவூர் அந்தவூருக்கு
தினசரி சென்று வரும்.
வழிச்செலவுக்கு வசதியுள்ளோர்
சுற்றிப் போகும் வண்டிக்குக் காத்திருப்பர்.
மிதிவண்டிக்காரர் பறந்து விடுவர்.
புத்திசாலிகள்
உதயத்துக்கு முன்பே
ஒற்றையடியைக் கடந்து விடுவர்.
மற்றவர்கள்தான் மாபாவிகள்.
தாகத் தவிப்புடன்
செருப்பற்ற கால்களால் தீமிதிப்பர்.
முந்தி ஐந்து வருடத்துக்கு ஒருதடவை
'ஐயா' வருவார்.
அவருக்குக் குடை பிடித்தபடி
எடுபிடிகள் வருவார்கள்.
பேச்சியம்மன் கோயில் வீதியிற்போட்ட
மேடையில் நின்று முழங்குவர்.
பஸ்வரும்,
பாலம்வரும்,
பத்தாம் வகுப்புவரை பள்ளிக்கூடம் வரும்,
தாயே தமிழுக்கு ஆபத்து தாலியைக் கழற்று;
மடிப்பிச்சை போடு;
கத்திவிட்டு
பிடியரிசி வாங்கிப் போய் விடுவர்.
கானல் நீருக்குக் கைநீட்டியபடி
ஊர் காத்துக் கிடக்கும்.
பின்னர் பத்து நாளில் அத்தனையும் மறந்து
உதறிக் கட்டிக் கொண்டு
ஒற்றையடியில் ஊர் நடக்கும்.
இன்று ஊரின் நடுவே ஒரு 'மாவீரர் படிப்பகம்'
பக்கத்தில் 'சோதியா பாலர்பள்ளி'
முச்சந்தியில் சில மாவீரர் படங்கள்
அடுத்தவூர் அம்மன் கோயிலுக்கு
வரம் கேட்டுப் போவோர் மிகக் குறைவு.

*காலையில் பள்ளிக்குச் செல்லும் சிறிசுகள்*
*படங்களுக்குப் பூவைத்துப் போவார்கள்.*
*தண்ணீரள்ளப் போகும் பெண்கள்கூட*
*படங்களுக்கு எதிரே வந்தால்*
*நின்றுதான் நடப்பார்கள்.*
*ஊரின் கனவு இப்போ உயர்ந்து விட்டது.*
*பாலம்,*
*பஸ் வண்டி,*
*பள்ளிக் கூடமென்று*
*எவருக்கும் எதிர்பார்ப்பில்லை.*
*ஊரைச் சேர்ந்த ஓரிரு பொடியள்*
*சீருடையில் வந்து திரும்புகின்றனர்.*
*இடையிடையே வித்துடல்கள்*
*இறுதி அஞ்சலிக்காக இங்கு வரும்*
*அப்போது மட்டும் ஊர் அழும்.*
*பின்னர் துடைத்து விட்டு எழும்.*
*குருதி வழியும் கொடுவாய்ப் பற்களுடன்*
*அடிக்கடி சுடுகாட்டுப் பேய்கள்*
*அந்த ஊரைச் சுற்றிவளைக்கும்.*
*"காட்டித்தா" என்று கைமுறிக்கும்.*
*வீட்டை உடைக்கும்.*
*என்றாலும்*
*தோற்றுப்போய்த் திரும்பும்.*
*கலைந்து பறந்த கூட்டுக்குருவிகள்*
*ஒவ்வொன்றாய் வீட்டுக்கு வரும்.*
*சீருடைச் சிறுவர்களுக்காக*
*ஏதேனும் ஆக்கி வைத்தபடி*
*அந்தச் சின்னக் கிராமம் காத்திருக்கும்.*
□□

*ஈழநாதம்*
*21.04.1995*

# எல்லாமுமாகி நின்றாள் என் சக்தி

**நேற்று**

அன்பே!
நேற்றென் பக்கத்தில் நீயிருந்தாய்.
காற்றுக்குன் கேசம் கலைய
என்விரல்கள்
மேகக்கூந்தலை ஆற்றுப் படுத்தியது.
நீயென் தோளில் முகம் சரித்துச் சிரித்தாய்.
அக்கணத்தில்
அணுக்குண்டு வீழ்ந்தாலும்
அசைந்திருக்க மாட்டேன் காண்.
கையாற் பிடித்து
கடைவாயுள் வைத்திருப்பேன்.
அன்பே!
காதற் சுகத்தைக் காண
நாமிறந்து
மீண்டும் பிறப்போம்.
மீண்டும் நாம் காதலிப்போம்.

**இன்று**

சற்றேதிரும்பு 'என்சக்தி'
தலையிற் சில நரைமயிர்கள்.
அற்புதமாய்
அதுவும் அழகாய் இருக்கிறது.
என்றாலும்

கொஞ்சம் இளைத்துள்ளாய்.
குடும்பச் சுமை தாங்கல்
சும்மாவா?
உன்னைச் சுருக்கி எனக்காக
என் அன்பே!
அடுத்த ஜென்மத்திலும்
நீயும் நானும்தான்.

**நாளை**

எழுபது வயது எனக்கா?
உனக்கென்ன?
அறுபத்தி நான்கு அகவையா?
எப்படி நம்புவேன் என் நாயகியே!
காற்றாகிக் காலம் கரைந்தாலும்
நெஞ்சத்தே
நேற்றுப் போலெல்லா நிகழ்வும் இருக்கிறதே.
தள்ளாப் பருவத்தே
தாங்கும் என் கொழுகொம்பே!
எங்கேயென் கைத்தடி?
எடுத்துக் கொடு.
கொஞ்சம் காலாற நடந்து
கோவிலுக்குப் போய் வருவோம்.
பேத்தியைக் கூப்பிட்டுச் சொல்லு.
படலையைச்
சாத்தி நட
மாடேதும் வந்து
மாங்கன்றைக் கடித்து விடும்.
என்தாயே!
ஈரேழு ஜென்மங்கள் எடுத்தாலும்
நீயே என்மனைவி.
□□

*சிரித்திரன்*
*சித்திரை - வைகாசி 1995*

# நிமிர்ந்த காலம்

அதிஷ்டம் எப்போதும்
என் பக்கமில்லை.
என்றாலும்
அன்று என்னோடிருந்தது.
அப்போது இராஜவீதியில் இருந்தேன்.
வானத்தில்
மின்னலடித்தது.
மேலே பார்த்தேன்.
காலையில் யாரோ
கதைத்துக் கொண்டது

காதில் உறைத்தது.
விசயம் விளங்கியது
ஆகாய ஊர்தியை
தமிழன் சுட்டு விழுத்துவதை
பார்க்கும் பாக்கியம் சித்தித்தது.
மேனிச்சுமை குறைந்து மிதந்தேன்.
காற்றில் கைவீசி நடந்தேன்.
முகிலைக் கடந்து நிலவைத் தொட்டேன்.
என்ன நடந்தது என்னில்?
அசாதாரணம்தான்
என்னால் முடிந்தது அப்போது.
சுட்டது நானில்லை
சுட்ட இடத்திலும் நானில்லை
என்றாலும்
நானே விழுத்திய நடப்பு எனக்கு.
என் இளவல் ஒருவனாலும்
இயலுமென்பதே
என்திமிர்.
இனி எவருக்கு நேரேயும் நிமிர்வேன்.
அந்நாளில் நானும் இருந்தேன்.
என் ஜீவிதத்துக்கும் அர்த்தம் உண்டு
அதுபோதும்.
□□

வெளிச்சம்
வைகாசி 1995

# இருள் விலகி விடிகிறது இனி நிலம் வெளிக்கும்

*இரவு முழுவதும் மழை*
*சோனாவாரியான சொரிவு.*
*போர்வைக் கணப்பில் தூக்கம்*
*ஆனந்தமானது இரவு.*
*விடிந்து வெளியே வந்தபோது*
*முற்றம் வெள்ளம் நிரம்பி*
*விறைத்துக் கிடந்தது.*
*போர்வையை விலத்தியபோது*
*ஊசிபோல் குத்தியது குளிர்.*
*மனைவி மூட்டிய அடுப்பருகே*
*குந்தியிருப்பதில் சுகம்.*
*வெளியே இறங்க வெய்யிலுக்குக் காத்திருந்தபோது*
*'ஷெல்' ஒன்றின் கூவல் திடுக்கிட வைத்தது.*
*எவர் வீட்டுக் கூரையில் இது விழும்?*
*யாரைக் கொல்லும்?*
*மரங்களின் மேலோ*
*மாடுகள், ஆடுகள் மேலோ*
*வெற்றுத் தரையின் மேலோ விழும்?*
*எங்கோ உயிர்பறிப்பை இது செய்யும்.*
*இந்த அடைமழைக்குள்ளே*
*அந்த வீடு எத்தனை வதைப்படும்.*
*கூடி அழும்*

எவரையாவது இழந்து தனித்துப் போகும்.
அடுத்த குண்டு என்பிள்ளை மீதிலும்
என் வீட்டின் மீதிலும் விழலாம்
ஏன்; நானே அதற்கு இலக்காகலாம்.
இது என்ன அவலம்?
இந்த வாழ்வுக்கு என்ன பெயர்?
நேற்றுப் பாடசாலைக்கு வந்து
'போர்க்காலக்கருத்தரங்கு' நடத்திய பெடியன்
'அடிமை வாழ்வு' என்றானே
அது இது தானா?
இரவு முழுதும் நான் தூங்கினேன்
ஒரு மழைத்துளிகூட என்னில் விழவில்லை.
இந்த இரவை அந்தச் சின்னக் குருத்துக்கள்
எப்படிக் கழித்திருக்கும்?
எதிரியின் வரவை எதிர்பார்த்தபடி
மழைக்குள்ளும், குளிருக்குள்ளும்
காவலரணில் விழித்திருப்பார்கள்.
எனக்கு முழுதாய் விளங்கவில்லை
ஆயினும் போராடும் வாழ்வு பெரியது.
அதில் அழகும் அர்த்தமும் உண்டு.
அடுத்தவருக்காகச் சிலுவை சுமப்பதற்கு
எல்லோராலும் இயலாது.
காவலரண்களில் கண்விழித்திருந்த
சின்னப் பூக்களுக்குச் சிரம் சாய்த்து
சயிக்கிளேறி வெளியே புறப்பட்டேன்.
நல்ல மீன் வாங்க வேண்டும்.
முடியுமானால் இறைச்சி வாங்குவோம்.
ஓரிரண்டு போராளிகளை வீட்டுக்கழைத்து
இன்று விருந்து கொடுக்க வேண்டும்.
என்னால் முடிந்தது இதுதான்.
□□

வெளிச்சம்
வைகாசி 1995

# பரம்பரைபற்றி நமக்கென்ன கவலை மரங்களை வெட்டுவோம்

*ஆதிமனிதன் பேசமொழியற்று*
*ஆடைகளற்றுத் திரிந்த*
*அந்நாளில்*
*எல்லாம் இருந்தன.*
*அண்டவெளி அழகாயிருந்தது.*
*பூமி ஆடைகட்டிப் பூரித்திருந்தது.*

பச்சை நிறத்தில் பாவாடை
நீலநிறத்தில் மேலாடை
பூவாடை கட்டிய பூமித்தாய்
நீராடையும் கட்டியிருந்தாள்.
மரங்களை விறகுக்காக வெட்டாத
கோடரி பாவனைக்கு வராத காலம்.
காடுகள் கற்பழிக்கப் படாது
காயங்களின்றிக் கிடந்தன.
குயில்களின் பாட்டை
எல்லோரும் கேட்டனர்.
எவரும் கல்லெடுத்து அடிக்கவில்லை.
கந்தகக் கலப்பிலாத காற்றும்,
அமிலமற்ற ஆற்றுநீரும்,
கிருமிநாசினியற்ற கிழங்குவகையும்
பேசா மனிதனைப் போஷித்தன.
இயற்கை மாசற்ற மனிதனை
உருவாக்கியது.
பேச மொழியற்றிருந்தபோதும்
மனிதன் சிரித்தான்.
யானையை வாலிற்பிடித்துத் தூக்கும்
வல்லமை அவனுக்கிருந்தது.
கூட்டமாக நகர்ந்தான்.
குதுகலித்தான்.
காதல் செய்து களித்தான்.
பசிய இலைதடவும் காற்றும்,
நிலவும்,
நீலக் கடலும்
யாருக்கும் தலைகுனியாது
நிமிர்ந்து நின்றன.
அன்று
கிணற்று நீரை ஒட்ட இறைத்து
எவரும் ஒத்தியெடுக்கவில்லை.
மரங்களை வெட்டித் தறித்து
யாரும் மொட்டை அடிக்கவில்லை.

பிச்சைக்கார நாடுகளின் கடலோரம்
எந்த வல்லரசும்
அணுக்கழிவுகளைக் கொட்டவில்லை.
கிருமிநாசினிகள் என்ற
கவர்ச்சிக் கன்னிகள்
ஓரவிழி உருட்டவில்லை.
மனிதன் மனிதனாக இருந்தான்.
இயற்கை இயற்கையோடிருந்தது.
மழை பொழிந்து கொண்டிருக்கும்
நிலம் நனைந்து கொண்டேயிருக்கும்
அனற்காற்று வீசும்,
காட்டுத்தீ மூட்டும்.
என்றாலும் கவலையற்றிருந்தது உலகம்.
மனிதன் ஆடைகட்டினான்.
பேச மொழிகளை உருவாக்கினான்.
வீடு கட்டினான்.
நாடுகளென்று எல்லையிட்டான்.
வானவூர்தியில் வலம்வந்தான்.
உற்பத்திகள் கழிவுகளை எச்சமிட்டன.
தேவை அசுரப் பசியான போது
இயற்கை சமநிலை தளம்பியது.
பசுமைக்கு வறுமை வந்துற்றது.
இன்று
குண்டுப் புகையும்
அணுக் கதிரும்
அண்ட வெளியை ஆட்சி செய்கிறது.
யாருக்கு என்ன கவலை?
அடுப்பெரிக்கப் பனை தறிப்போம்.
கூட்டிய குப்பையை
அடுத்தவன் வீட்டு வாசலிற் கொட்டுவோம்.
உலகம் ஒதுக்கிய உரங்களையெல்லாம்
வளரும் பயிர்களுக்கு வாரியிடுவோம்.
காலளவு மொத்தத்தில் கத்தரிக்காய்,
விரலளவை விட்டு

• புதுவை இரத்தினதுரை

உரலளவில் வெண்டிக்காய்,
வாழைப்பழம் இப்போ நீளப்பழம்.
எவருக்கு என்ன கவலை
புற்றுநோய் வந்தாலும்
மற்றவனுக்குத் தானே
நிறுவைக்கு நின்றால் நிறைந்த காசு
அதுபோதும்.
கோடிபனை நிமிர்ந்த நாட்டில்
மாடிமனை நிமிர மரம் தறிப்பவனே!
மழையற்றுப் போனதடா மண்.
நிற்க நிழலற்ற நெடும் பாலையாவதற்கு
குற்றமென்ன செய்தாளெம் தாய்.
பூட்டன் நாட்டிய பனைமரம் காய்க்கிறது
பாட்டன் நட்ட பலாமரம் பூக்கிறது.
வெட்டி எரித்ததன்றி
நீயென்ன நிழல் வைத்தாய்?
மாசடையாச் சூழல்
சாவடையா வாழல்.
□□

ஈழநாதம்
05.06.1995

# அவதாரமெடுத்த சோளகம்

*அவதாரமெடுத்தது சோளகம்
இனி
அடிவளவுப் பனைகளுக்குக் கலையேறும்.
காவோலை பறை முழங்க,
தலை விரித்தாடும்.
மரங்களுக்கு மட்டுமல்ல
இங்கு
மாறி மாறிவரும்*

• புதுவை இரத்தினதுரை

சிம்மாசனங்களுக்கும்
இது வழக்கம்.
யாரோ உருவேற்றிவிட
ஏவற்பேய்கள் கூரை பிரிக்கும்.
சூனியக்காரரின் தீச்சட்டியிலிருந்து
கொள்ளிவாற் பேய்கள் கூத்தாடும்.
கோழிச் சேவலும்,
சோமபானமும் கேட்கும்.
திருக்கைவாலெடுத்து விளாசினால்
மலையேறும்.
இது வழக்கமாகிப் போனது.
இன்று
புதிய சூனியக்காரி ஒருத்தி
'பெல்லி' விடுகின்றாள்.
கொம்பு சீவிய எமன் வாகனம்
நிலாவரையில் 'ஸ்வாகா.'
பயந்து போன
மந்திரக்கிழவி
ஓதி நூல் கட்டுவதற்கு
ஓடித்திரிகின்றாள்.
வரட்டும்
எதற்கும் தயார்.
திருக்கைவால் ரெடி.
□□

வெளிச்சம்
ஆனி 1995

# வெட்டிரும்புச் சுப்பர் விழாவில் இன்று பட்டிமன்றம்

'கொத்திவயல் அம்மன்' கொடியேறி
இன்று பத்தாம் திருவிழா.
பகலிரவு இருபொழுதும்
'வெட்டிரும்புச் சுப்பர்' விழா உபயம்.
இரவுக்கு
பட்டிமன்றம் என்று பத்திரிகை விளம்பரம்.
'நரை விழுந்தால் இருவரில் யாரழகு?
திரைகடலைத் தாண்டிய சீதையா
அல்லது
கரையாத கற்புடையாள் கண்ணகியா?'
இது தலைப்பு.
'நாவரசர் நல்லதம்பி' நடுவர்.
ஒருபக்கம்
'காப்பியத்திலகம் கனகசபை' தலைமையிலும்,
மறுபக்கம்
'வாக்கிய கலாநிதி வடிவேலர்' தலைமையிலும்
பேசிடுவர்.
சீதையணிக்கு மூன்றுபேர் வாதிடுவர்.
கண்ணகிக்காய் வாதிடவும் மூவர் வருகின்றார்.
பிறகென்ன 'அறிவுத் திலகங்கள்' அனல் மூட்ட

• புதுவை இரத்தினதுரை

செந்தமிழ்த் தீ
பொறிபறந்து அந்தப் புழுதிவயல் தீப்பிடிக்கும்.
சீதைக்கு என்ன நிறச்சேலை அழகென்றும்
வாதிடுவர்.
கண்ணகியின் காற்சிலம்பு செய்த
கடைப்பேரதையும் சொல்லிப் பேசிடுவர்.
பகிடியெலாம்
விடுவார் நடுவர்.
விடியும் வரை கேட்டாலும்
அலுக்காது.
அப்படியோர் 'அறிவுக்கடல்' அமிர்தம்.
வசந்த மண்டபத்து வாசலிலே
'வடிவழகி'
இருந்தபடி கேட்டு இன்புறுவாள்.
வீதியெல்லாம்
குவிந்து ஊர்ச்சனங்கள் குதுகலிப்பர்.
செந்தில் - கவுண்டமணி திரைப்படத்தைப் போலயிது
சந்தோசமான சமாச்சாரம்.
இம்மண்ணில்
போர் நடந்தாலென்ன? 'புலி' இறந்தால் நமக்கென்ன?
வேரறுந்தாலென்ன? வீடிழந்து மக்களெல்லாம்
ஆவிகலங்கி அலைந்தாலும் நமக்கென்ன?
காவியமே பெரிது,
கண்ணகியே கற்பரசி,
சீதையவள்தானே திருச்செல்வி
மேடையிலே
வாதிடலே எமக்குரிய வரலாற்றுக் கடமை.
ஆதலினால்
கட்டாயம் பட்டிமன்றம் காணல் புண்ணியமாம்
எட்டுமணிக்கே எழுந்தருள்வீர் ஜெகத்தீரே!
□□

ஈழநாதம்
16.06.1995

# நவாலி நரபலி 1995

அதிகாலை விழிதிறந்த போது
எமன் ஊருக்குள் புகுந்தான்.
அசுரப்பறவைகள்
இரைதேடி வானத்தில் அலைந்தன.
பீரங்கி பூட்டிய இயந்திர யானைகள்
குருதி வடியும் பற்களுடன் நிலமுழுது வந்தன.
கையில் எடுத்தவை மட்டுமே எடுத்தவையாக
ஊர்துறந்து ஓடியது ஒரு கூட்டம்.
பின்னாற் துரத்தி வந்தன எறிகணைகள்.
வாயுலர்ந்து போனது.
நீருக்குத் தவித்தன நாக்குகள்.
ஆயினும் வேகத்தைக் குறைக்கவில்லை கால்கள்.
கூடுகலைந்த குருவிகள் 'நவாலி' வந்தடைந்தன.
வரவேற்றது 'சென் பீற்றர்ஸ் தேவாலயம்'.
இனிக் கொஞ்சம் ஆறலாமென
சுவாசம் சீரானது.
"வருத்தப்பட்டுப் பாரம் சுமப்பவர்களே
என்னிடம் வாருங்கள்
நானுங்களுக்கு ஆறுதல் தருவேன்" என்றது அசரீரி.
வாருங்கள் என்று அகலத் திறந்து கிடந்தன
தெய்வத் திருச்சபையின் கதவுகள்.
அச்சமில்லை அமருங்களென்று
கட்டளையிட்டது கூரைச்சிலுவை.
"பேதுருவானவரே!
நாம் செய்த தவறென்ன?

*ஏனெங்கள் கூடு கலைந்து போனது?" என்றபடி*
*எல்லோரும் அறியிருந்த போதுதான்*
*அது நடந்தது.*
*இரைச்சலிட்டபடி வந்த கொலைப்பறவை*
*ஆறுகுண்டுகளைப் பீச்சிவிட்டுப் போக*
*"ஐயோ!" புழுதி மேகத்துள்ளே*
*உலகத்தை உலுக்கியது கதறல்.*
*உணர்வு திரும்பிய போது*
*உலகமே இருண்டு கிடந்தது.*
*குப்பென்றடித்தது பிணவாடை.*
*நொடிக்குள் நூறு உடல்கள் குதறப்பட்டு*
*சிதறிக்கிடந்தன அவயவங்கள்.*
*அந்தச் சதைக் குவியலுக்குள்ளேதான்*
*ஒரு தாமரைப் பூவும் கிடந்தது.*
*புழுதி பூசப்பட்டு குருதி வழிந்தபடி*
*அழகிய கவிதையொன்று கிடந்தது.*
*பஞ்சுப் பொதி போன்ற பிஞ்சொன்று*
*பிளந்து கிடந்தது.*
*கருப்பை வாசல் கடந்து வந்து*
*ஆறுமாதங்கள் கூட ஆகாத 'கற்பகப்பூ'*
*கருகிக் கிடந்தது.*
*உலகமெங்கும் அரசோச்சும்*
*மனித உரிமைகளின் மனச் சாட்சிகளே!*
*என்ன செய்யும் உத்தேசம்?*
*ஏவிவிட்ட பாவி இன்னும் இருக்கின்றாள்.*
*'ரீவி' யில் முகம் காட்டுகின்றாள்.*
*குளிர்ந்த நிலவின் பெயர் அவளுக்கு .*
*அவளும் கருப்பை சுமந்தவள்.*
*அடையாளம் தெரிகிறதா?*
*அவளுக்கு என்ன தீர்ப்பு எழுதுவீர்?*
□□

*வெளிச்சம்*
*ஆடி - ஆவணி 1995*

# ஆளும் போதே அழகு!

அரவமற்றிருந்தது இரவு.
அடித்துப் போட்ட கருநாகமாய்
நீண்டு கிடந்த 'இராஜவீதி'
எட்டிப் பார்க்க எவருமிலர் என்ற துணிவில்
நிலாவொளியில் ஆடைகளற்று நீராடியது.
யாழ்ப்பாணத்தில்
எல்லாத் தெருக்களுக்கும் படுக்கைப்புண்.
அம்மைத் தழும்பு போல
முகமெல்லாம் குன்றும், குழியும்.
'இராஜவீதி'யின் தேகத்தில் மட்டும் காயங்களில்லை.
தமிழர் வீரத்தின் சக்கரம் உருண்டதெரு,
உள்ளே ஏதுமற்ற பெருங்காயப் பானையாகி
மௌனத்தில் உறைந்து கிடந்தது.
நந்திக் கொடி பறந்த தேரும்,

நல்லூர் இளவரசியின் பல்லக்கும்,
திறைகொண்டுவரும் சிற்றரசர் குதிரைகளும்,
விரைந்தோடும் வில்லு வண்டில்களும்
அந்த வீதியிற்தான் உலாவந்தன.
இராஜதானியின் தலைவாசல் வரையும்
இராஜவீதிக்கு அநுமதியிருந்தது.
இருமருங்கும் அப்போது இப்படியில்லை.
மந்திரி மனைகளும்,
பிரதானிகளின் பெரியவீடுகளும்,
ஆங்காங்கே 'சின்னவீடுகளும்'
தொடர்ச்சியாகக் கிடந்தன.
காவல் வீரர் வீதியுலா வருவர்.
வேறொருவரின் பாதச்சுவடும் வீதியிலிருக்காது.
மாலை வேளையில்
மந்திரிகுமாரி பல்லக்கிலேறி
இராஜகுமாரியைத் தேடிச் செல்வாள்.
சங்கிலிகுமாரன் தம்பதிசமேதரனாய்
ஏழுகுதிரைகள் பூட்டிய தேரிலேறி
வல்லிபுர ஆழ்வாருக்குப் பட்டுச் சாத்தப் போவான்.
கவிதையூறும் அருவியான 'அரசகேசரி'
காலாற நடந்து வருவான்.
இராஜவீதிக்கு கர்வம்.
எத்தனை கம்பீரம்!
இன்று எல்லாமிழந்து போனது.
இருந்த சைக்கிள் கடையும் இல்லாமற் போக,
தேடுவாரற்றுக் கிடக்கிறது.
ஆளும் போதே எல்லாம் அழகு!
□□

வானோசை
ஆவணி - புரட்டாதி 1995

• புதுவை இரத்தினதுரை

# இழந்த வசந்தமும்
# எரிக்கும் கோடையும்
# இனிவரும் காலமும்

கூடுகலைந்து நாளான குருவி
மரம் மாறிமாறி அலைவது போல
என் நாட்கள் எரிந்து போகின்றன.
இரவுக்கும் பகலுக்கும் பேதமற்று
இரண்டும் ஒன்றான இருப்பு.
ஓடிவரும் போது எடுத்துவந்தவையுடன்

ஒருவகை மட்டுப்படுத்திய வாழ்வு.
எண்ணைப் பொரியலுக்குத் தாச்சி இல்லை,
இடியப்ப உரல் இல்லை,
புட்டுக்குழலுக்குச் சில்லு இல்லை,
உரப்பையிற் கொண்டுவந்த பட்டுச்சேலைகளுக்கு
சட்டைகள் இல்லை,
இல்லையே இல்லையென்றான வாழ்வு
இல்லாமற் போச்சு.
பிள்ளைகளுக்குக் கொஞ்சம் புரிகிறது
மனைவிக்குத்தான் கருகிய வாழ்வு.
பொச்சம்தீராத புறுபுறுப்பு.
தம்பி பெஞ்சாதியின் தமையன் வீட்டில்
இரவில் பாய்விரிக்க எங்கு இடமிருந்தாலும்
அங்கு உடல்சரிப்பு.
வீட்டுக்காரரின் தூக்கம் கலையுமென
இருமலைக்கூட உள்ளே புதைப்பு.
களவுக்கு வந்தவன்போல மனைவியுடன் கதைப்பு.
கிணற்றுவாளி தட்டுப்பாட்டாலே படபடப்பு.
ஒண்டுக்கிருத்தல்,
குண்டிகழுவுதல்
ஒவ்வொன்றையும் பயந்தபடி ஒப்பேற்றல்.
எம்மால் மற்றவருக்கேன் இடைஞ்சல்?
வயதான காலத்து வாத்தி நான்
அந்திமகாலத்தில் ஏனிந்த அவலம்?
ஊரொத்த கொள்ளைக்கு நானென்ன செய்யலாம்?
ஊரில் பத்துப்பரப்புக் காணிக்குள்
அப்பு கட்டிய எட்டறை வீடு,
சுண்டிப் பார்த்துப் பூசிய சுவர்,
முட்டுப்படி நிலை,
வில்லுக் கிளாம்புக் கதவு,
தேக்கு மரத்தில் தீராந்தி,
சாமியறைக் கதவில் சந்தனக்குமிழ்,
அடிவளவுக்குள் ஐம்பது தென்னை,
கிணற்று நீர் தேவாமிர்தம்,

• புதுவை இரத்தினதுரை

சுற்றுமதில்,
முற்றத்தில் மல்லிகைப் பந்தல்,
பத்துப் போத்தல் கறக்கும் பால்மாடு
வெள்ளிக்கிழமை விடிந்தாற் போதும்
சொல்லி மாளாத சுகம்.
எல்லோரும் விரதம், ஏழெட்டுக் கறிசோறு
குறட்டையுடன் ஒரு குட்டித்தூக்கம்.
கோயில் மணி கேட்கக் கும்பிட்டெழுதல்,
காலாற ஒருதடவை கடைப்பக்கம் உலாத்தல்
"குளத்தடிப் பிள்ளையாரப்பா!
கொழுக்கட்டை தின்னி!
எல்லாம் முடிஞ்சுதையா. என்றழியும் இத்துயர்?
ஊர்திரும்பல் எப்போது?"
வீடிழந்ததுக்கே
எனக்கு இந்த வில்லங்கமெண்டால்
நாடிழந்து போனது எந்தப்பெரிய இழப்பு.
நாடு எம் கைக்கு வரும் போதே
வீடு என்கையில் வரவேண்டும்
அப்போதே சுகம்.
மற்றதெல்லாம் அரைச்சுகம்.
□□

வெளிச்சம்
புரட்டாதி 1995

# நன்றி கெட்டதுகளல்ல நமது சனம்

நல்லூர் திருவிழா முடிந்தது.
காற்றுக்கூட நேற்றுடன் காணாமற்போக
தேடுவாரற்றுக் கிடக்கிறது தேர்வீதி.
இருபத்தைந்து நாட்களின் இனிமையை
நெஞ்சுக்குள் பொத்தியபடி
ஏக்கம்வழியும் விழிகளுடன் இளசுகள் சிலர்
'தேரடி பார்க்கத்' தினமும் வந்து போகின்றனர்.
பதிலெறிந்த விழிகளைப் பறிகொடுத்த துயரம்
அனுபவித்தவர்களுக்கே புரியும்.
மஞ்சம், மகரம், கைலாயவாகனம்
எல்லாம் உள்ளே போயின.
தேர்முட்டியைச் சுற்றித் தகரத்தட்டிகள்.
இனி அடுத்தவருடமே கலசம் தெரியும்.

● புதுவை இரத்தினதுரை

*நாவலர் மண்டபக் கதவில் பூட்டு.*
*மேற்கு வீதியில்*
*சட்ட விளக்கில் ஒருதிரி எரிய*
*முத்து விநாயகர் மௌனவிரதம்.*
*மனோன்மணியம்மன் வாசலில்*
*வழமையான ஓரிருவரைத் தவிர*
*இனி நானும், நாய்களும்தான்.*
*ஈசற்கூட்டமாய் எங்கிருந்து வந்தது சனம்?*
*கடல்வற்றியதுபோல இன்றேன் கலைந்து போனது?*
*ஆலய வீதியில் ஊர்கூடுவது அழகு.*
*நான் தனியனல்லன்*
*பக்கத்தில் பல்லாயிரவர் என்பதை உணர்த்த*
*வெள்ளம்போல் விரிந்த சனத்திரள்*
*உள்ளத்துக்கு ஊட்டம்.*
*தேரும், திருக்கல்யாணமும் பார்க்காது*
*ஊர்வாசலில் யார் காவலிருந்தனர்?*
*பட்டுடுத்த காற்சலங்கைகள் இங்கே வர*
*பகைவரவை எதிர்பார்த்து யாரிருந்தார்?*
*ஆசையறுத்த ஞானிகள்போல*
*காவலுக்கிருந்தவர் எவர்?*
*பூட்டியெடுத்த திறப்புக்களுடன் திருவிழாவுக்கு வந்தவர்*
*ஊரை யாரிடம் ஒப்படைத்தனர்?*
*தலைவாரி முகம்கூடக் கழுவாமல்*
*துப்பாக்கிகளுடன் காவலிருந்தனர்*
*'எல்லையம்மன்கள்'.*
*வெட்டரிவாளுடன் சில வீரர்கள்.*
*திருவிழாவுக்கு வந்த பட்டுச்சட்டைகள்*
*இவர்களுக்காகவும் நேர்த்தி வைத்திருப்பார்களா?*
*வைத்திருப்பார்கள்.*
*நன்றிகெட்டதுகளல்ல நமதுசனம்.*
□□

*வெளிச்சம்*
*புரட்டாதி 1995*

# இனிப்பொறுத்தல் இழிவு

*மனசுக்குள் ஆயிரம் மத்தாப்பு விரித்த*
*ஆனந்த வாழ்வே!*
*மீண்டும் என்னில் படர்ந்து கொள்வாய்.*
*என்று என்னைத் துறந்து போனாயோ*
*அன்றிலிருந்து நான் அனாதையானேன்.*
*கண்திறந்து பாராய்*
*அழகுக்கோலம் வற்றிய சடமாய்*

• புதுவை இரத்தினதுரை

உயிர்சுமந்த கூடாய் உலவுகின்றேன்.
எனக்கென் ஊர்வேண்டும்.
வீடும், வயல்வெளியும் வேண்டும்.
கந்தகக் கலப்பில்லாத காற்றுவேண்டும்.
எந்தை எனக்களித்த
முத்துமாரியம்மனின் 'பத்தாம் திருவிழா' வேண்டும்.
ஊர்கூடி உட்கார்ந்து பார்க்கும்
கூத்தும் கும்மாளமும் வேண்டும்.
பசிக்கு ஏதேனும் கடித்து
படுத்துறங்கவா நான்பிறந்தேன்?
எங்கேனும் என்றாலும் பரவாயில்லை
உயிர்வாழ்தல் போதுமென
வேரிழந்த வாழ்வு வேண்டாம்.
பச்சைத் தண்ணீர்மட்டும் குடிக்கும்
பஞ்ச வாழ்வானாலும்
அது எந்தன் சொந்தவீட்டில் இருக்கட்டும்.
என்னை விட்டொதுங்கிய இனிய வசந்தமே!
மீண்டும் வருக!
உயிர்க்குருவி உடற்கூடுவிட்டுப் பறக்கமுன்னர்
ஒருமுறை ஊரிற்களிக்க வரமருள்.
எமதூரில் எமதூதர்களாம்.
மனைவியுடன் நானுறங்கிய கட்டில்,
பிள்ளையாடிய ஊஞ்சல்,
அப்புவின் சாய்மனைக்கதிரை,
புதிரெடுக்கும் அரிவாள்
எல்லாவற்றையும் எரித்திருத்தல்கூடும்.
இனிப்பொறுத்தல் இழிவு.
என்ன செய்யலாம்?
ஏதேனும் செய்தாக வேண்டும்.
□□

வெளிச்சம்
ஐப்பசி 1995

# இந்தளவேதான் நான்

*இன்றாகவும் நாளையாகவும் இருக்கலாம்.*
*இல்லையெனில்*
*இன்னும் சில நாட்களின் பின்னராவது*
*இது நடக்கும்.*
*அன்று மூச்சைத்துறந்து முடங்கிப்போவேன்.*
*கட்டிலில் வளர்த்திக் கதறி*
*சுற்றம் அழும்.*
*தெரிந்த சிலர் கூடியிருந்து*
*கற்பனைக்குத் தக்கபடி கதைப்பர்.*
*கோயிற் கொலு துறந்து வந்து*
*என்சீமாட்டி சூலில் உருவெடுத்த 'சூட்டி' மகள்*
*துடிப்பாள்.*

• புதுவை இரத்தினதுரை

அடைவைப்பின் கடைக்குஞ்சு
அப்பா எனக் கத்தும்.
கொள்ளிக்கு நான் வளர்க்கும் பிள்ளை
ஊனுருகி ஒழுக அழுதபடி
என் சிதைக்குத் தீயிடுவான்.
அந்தரித்துப் போவாள் மனைவி.
அவள் பாவம்
எந்த நிழலும் இளைப்பாற இருக்காது.
அஞ்சாறு நாள்வரைக்கும்
ஆரேனும் பேசுவர்.
பின்னர் பெஞ்சாதிவாய்மட்டும் பேசும்.
அதுவும் கொஞ்சநாள் வரையும்தான்
அதன்பிறகு என்ன நடக்கும்?
எதுவும் நடக்காது.
காலமழையிற் கரைந்து
என் நாமம் அழிந்து
மெல்ல மெல்ல இல்லாது போவேன்.
மாரிவரும்
பொன்னாவரசும், என்வீட்டுப் பூவரசும்
பூத்துச் சொரியும்.
கோடை வரும்
எல்லாம் ஆடையிழந்து அலங்கோலமாகும்.
முதிர்ந்தவை உதிரும்.
புதிய தளிர்கள் பிறந்து பேசும். சிரிக்கும்.
என்னையெவரும் நினைவிருத்த மாட்டார்கள்.
வந்ததுக்கும்,
இருந்ததுக்கும்,
போனதுக்கும்கூட
எந்தச் சுவடுமின்றி 'இவன் வாழ்வு' முடியும்.
எனக்குத் தெரியும் இந்தளவேதான் நான்.
□□

வெளிச்சம்
ஐப்பசி 1995

# ஊர் நினைவில் உருகல்

*என் ஊரெனும் தாய் மடியே!*
*நேற்றுவரை உன்னைப் பிரிந்தறியேன்.*
*இன்னோர் மடியில் உறங்கியறியேன்.*
*உன் உள்ளூறும் அமுதத்தைத் தவிர*
*வேறொன்றில் வாய் நனைத்தறியேன்.*
*இன்றிவைகள் எல்லாமே பொய்யாகிப் போக*
*உன்னைப் பிரிந்துள்ளேன்.*

மீண்டு உன் காலடிக்கு வருவேனெனும்
நம்பிக்கைத் துளிர்ப்பிலே தான்
உயிர்க்கூடு அசைந்தென் நாட்கள் கழிகின்றன.
முடியாது தாயே!
ஒரு நாளும் பிரிந்தறியா என்னால்
உயிர்தாங்கி வாழ இயலாது தாயே!
என் தலைவணங்கா 'நாட்டாண்மை' குனிந்து
இங்கோர் 'நரகில்' நான்படும் துயர்
நீயறியாய்.
உனக்கும் எனக்குமான உயிர்ப்பொருள் உறவை
சுட்டெரித்தவன் எவன்?
என்னூர்ச் சுடலையில் எரிவேனென்ற எதிர்பார்ப்பை
இல்லாதழித்தவன் யார்?
அவன் அழிந்து போகட்டும்.
'அரக்கர்படை' வருவதாய் ஒரு அவசர அறிவித்தல்.
புறப்பட்டு விட்டோம்.
உன்னை எவரும் பொருளாய்க் கருதவில்லை.
ஊர்பிரிந்தோம்
ஏதும் எடுக்கவில்லை.
அகப்பட்ட கொஞ்சம் அரிசி,
பருப்பு,
இரண்டுபாய், இருமல் மருந்து,
மனைவியின் மாற்றுடுப்பு மூன்று,
காற்றுப்போய்க் கிடந்த சைக்கிள்,
காணியுறுதி,
அடையாள அட்டை அவ்வளவே.
புறப்பட்டு விட்டோம்.
இப்போ உணருகிறேன்.
உலகிற் தாளாத துயரெது?
ஊரிழந்து போதல் தான்.
வசதியற்றுப் போன வருத்தமல்ல இது.
மழை நனைந்தும்,
வெய்யிலுலர்ந்து போவதும் துயரல்ல.
விடுதலைக்கு என்ன விலையேனும் கொடுக்கலாம்.
உயிர்கொடுக்கும் போராளிகளைவிட

துயர் பெரிதல்ல.
போராளிச் செல்வங்களுக்குப் பொட்டிடுவேன்.
ஊர் வீதியெல்லாம் ஓடிமகிழ்வேன்.
வயல்வெளியிற் காற்றாய்ப் பறப்பேன்.
மீண்டும் ஊருள மதில்களெல்லாம்
மாவீரர் பேரெழுதுவேன்.
இந்தளவும்
அரக்கர்படை என்னூரில் இருக்கும் போதல்ல.
பேய்கள் தொலைந்தபின்பே புறப்படுவேன்.
கைகட்டி வாழ்தல் வாழ்வன்று.
என் இருப்புக்கு எவரும் இடையூறெனில்
அது வாழ்வல்ல, அடிமைப்பொறி.
பொறிக்குள் அடங்கிப்போக
எனக்குப் பிடிக்கவில்லை.
என்னூர் விடுதலையாகும் போதே
வீடு வருவேன்.
அதுவரை எம்போராளிப் பிள்ளைகளுக்கு
ஏதேனும் செய்தபடி என் வாழ்வுகழியும்.
அவர்கள் என்னூர் மீட்டுவருவர்.
செம்மணி வீதியாற்தான் திரும்பிவருவேன்.
கிட்டுபூங்காவுக்குக் கிட்ட வரும்போதே
குரல்வைத்து உன்னைக் கூப்பிடுவேன்,
காத்திரு.
விரைவில் வீடு வருவேன்.
□□

வெளிச்சம்
கார்த்திகை 1995

# ஒன்றும் அறியாத உலகம்

வெளியே
வராத உண்மைகள்
உவமைகள் தோற்று ஊமையாகிவிடும்
பெருமையிற் பெரிது.
அகழ்ந்தெடுத்தாலும் அடியறியமுடியாத
பாதாளம் வரை பரவியவேர்.
பலனெதிர்பாராத கோடைமழை.
போராட்டத்தேரின் சக்கரம்

*புதையுறும்போது*
*கைகொடுத்துதவும்*
*'பெரிய சக்தி'.*
*நெருங்கமுடியாத பகைநெருப்பின்*
*கதை முடிக்கும் ஊழிக்காற்று.*
*எம்மோடிருந்து பேசிக்களித்துவிட்டு*
*வார்த்தையேதும் பேசாமல்*
*வழிநடந்தவர்களுக்கு*
*இந்நாளில் விளக்கேற்ற*
*துயிலுமில்லத்தில் கல்லறைகளைத் தேடுவோம்.*
*அங்கும் இல்லையென அறிந்து*
*காற்றிலவர் பாடலைக் கலக்கவிடுவோம்.*
*முகமும், முகவரியும் தெரியாமல்*
*பூமியின் பாரச்சுமையை*
*பஞ்சாக்கியவரை எண்ணி*
*வாய்விட்டுத் தாய்கூட அழமுடியாததுவே*
*கொடியதிற் கொடிது.*
*பக்கத்திருப்பவர் ஏனழுதாய் என்றால்*
*நேற்றிரவு 'அரக்கனை' அழித்தவன்*
*என்மகனென்று எப்படிச் சொல்வது?*
*காலநதிகூடச் சருகுகளைத்தான்*
*கரையொதுக்கும்.*
*அவர்கள் கட்டிப்போட்ட கருங்கற்களாச்சே*
*என்னென்று வெளிவரமுடியும்?*
*'தெரிந்தவர்களுக்கே*
*தெரிந்தவர்களாக'*
*உயர்ந்து நிற்கின்றனர்.*
*உலகம் ஒன்றுமறியாது சுழல்கின்றது.*
□□

*வெளிச்சம்*
*கார்த்திகை 1995*

# தலைமுறைக்கான
# சுமைகளைத் தாங்குவோம்

தோழனே!
வீதியில் உன்முகம் பார்த்துளேன்
வார்த்தையேதும் பேசியறியேன்.
என்றாலும் வருவாயென்ற நம்பிக்கையுடன்
பாசறை வாசலில் காத்திருக்கின்றேன்.
இன்றில்லாவிடில் நாளை
நாளையும் இல்லையெனில் மறுதினம்
என்றோ ஒருநாள் வருவாயென
எனக்குத் தெரியும்.
அன்றுன் தாயழுவாள்.
குடும்பம் இடிந்ததெனக் குமுறுவாள்.
காதலி கண்ணீர் சிந்துவாள்.
எல்லாம் ஓரிரு நாட்களுக்கே
பின்னரெலாம் வழமையாகிவிடும்.

*இதுதானே வழக்கம்.*
*உனக்கொரு வழி சொல்வேன்*
*கொஞ்சம் இறுக்கமாக இரு.*
*தாய்க்கு முன்னே சென்று தலைநிமிர்த்தி*
*அம்மா! உன்னை நேசிக்கின்றேன்*
*என்னிலும் மேலாக*
*என்தாய் நிலத்தைப் பூசிக்கின்றேன்*
*உன்னிலும் மேலாக*
*என்று மட்டும் சொல்லிவிட்டு எழுந்து வருக.*
*காதலி முன்னே சென்று கண்திற.*
*என் பிரிய உயிரே!*
*சுவாசக் குழலின் சுடுமூச்சே!*
*தாய்நிலத்தைப் பகையிடம் விடேன்.*
*நான் போராடப் போகின்றேன்*
*விரும்பினால் நீயும் வருக.*
*விடுதலைக்குப் பின்னர் வீடு திரும்புவோம்*
*இல்லையெனில் காத்திரு.*
*பிரிவோம் மீண்டும் சந்திப்போம்.*
*இந்தளவும் போதும் வந்துவிடு.*
*பாசறை வாசலில் காத்திருக்கின்றேன்.*
*நீ தவழ்ந்த மண்ணில் தீயெழவிட்டு*
*மாற்றானை எம்மடியில் மலம்கழிக்கவிட்டு*
*அள்ளிக்குடித்த 'அமிர்தவர்ஷினி'க் கிணற்றில்*
*பகையள்ளிக் குடிக்கவிட்டு*
*எப்படித் தோழா! பொறுத்திருக்கலாம்?*
*அவலத்தையெண்ணிக் கலங்கினால்*
*விடுதலை வீடுவர மாட்டாதே!*
*தலைமுறைக்கான சுமைகளைத் தாங்குவோம்*
*உயிர்கொடுத்தாயினும் விடுதலையை வாங்குவோம்.*
*வருவாயெனும் நம்பிக்கையுடன்*
*பாசறைவாசலில் காத்திருக்கின்றேன்.*
□□

*ஈழநாதம்*
*24.11.1995*

# சிற்றிபேக்கரியும் சீனிச்சம்பலும்

*நாக விகாரையில் பூசை நடந்ததாம்*
*'ரூபவாஹினி' சொல்லிற்று.*
*இனி என்ன?*
*'காமினி ரீ றூம்' கதவுகள் திறக்கும்.*
*'சிற்றி பேக்கரியும்'*
*சீனிச் சம்பலும்*
*நகரப் பகுதியில் அறிமுகமாகும்.*
*புத்தன் கோவிலுக்கு அத்திவாரம் போட*
*'ரத்வத்த' வரக்கூடும்.*

*சிங்கள மகாவித்தியாலயம் திரும்ப எழும்மா?*
*எழலாம்.*
*வெசாக் கால வெளிச்சக் கூட்டை*
*எங்கே கட்டுவர்?*
*ஏன் இடமாயில்லை?*
*வீரமாகாளியின் வெள்ளரசிற் கட்டலாம்.*
*முனியப்பர் கோவில் முன்றலிற் கட்டலாம்.*
*பெருமாள் கோயில் தேரிலும்*
*பிள்ளையார் கோயில் மதிலிலும் கட்டலாம்.*
*எவர்போய் ஏனென்று கேட்பீர்?*
*முற்ற வெளியிற் 'தினகரன்விழா'வும்*
*காசிப்பிள்ளை அரங்கில் 'களியாட்டவிழா'வும்*
*நடைபெறலாம்.*
*நாகவிகாரையிருந்து நயினாதீவுக்குப்*
*பாதயாத்திரை போகும்.*
*'பிரித்' ஓதும் சத்தம்*
*செம்மணி கடந்துவந்து செவிவிழும்.*
*ஆரியகுளத்துத் தாமரைப் பூவுக்கு*
*அடித்தது யோகம்.*
*பீக்குளத்துப் பூக்களும் பூசைக்குப் போகும்.*
*நல்லூர் மணி துருப்பிடித்துப் போக*
*நாகவிகாரையில் மணியசையும்.*
*ஒரு மெழுகுவர்த்திக்காக*
*புனித யாகப்பர் காத்துக் கிடக்க*
*ஆரியகுளத்தில் ஆயிரம் விளக்குகள் சுடரும்.*
*எம் இனத்தின் இளைய தலைமுறையே!*
*கண்திறக்காது கிடக்கின்றாய்.*
*பகைவனுன் வேரையும், விழுதையும் வெட்டி*
*மொட்டை மரமாக்கி விட்டான்.*
*நீ நெட்டிமுறிக்கக் கூடப் பலமற்று*
*நீள் துயிலிற் கிடக்கின்றாய்.*
*தேவாரப் பண்ணும்,*
*சங்கும், சேமக்கலமும் எங்கு போனது?*
*எங்காயினும் ஒரு மூலையிற் கிடக்கும்.*

*உன்னை உலுப்பியெழுப்பவும்*
*படுத்துக் கிடக்கின்றாய்.*
*திருவாதிரைக்காயினும் வருவாயா?*
*'எம்பாவாய் பாட' எம் ஊர்புகுவோம்.*
*ஊர்பிரிந்து வந்து ஒருமாதம் ஆயிற்று.*
*நகர்புகும் கழுகுகளைக் குதறி*
*குருவிகள் கொத்துகின்றன.*
*சுடுகாடான எம் வீதியெல்லாம்*
*சுதந்திரப்பண் பாடியபடி*
*'விடுதலைப் போராளி'களின் வீதியுலா.*
*என்ன நினைப்பில் இன்னும் இருக்கின்றாய்?*
*எம் இளைய தலைமுறையே!*
*தோளிலிருப்பது சுடுகருவியா?*
*அட! கொட்டில் கட்டும் கிடுகும், தடியுமா?*
*நல்லது.*
*பனிக்குளிருக்குள்ளே முகம் காட்டாதே*
*தடிமல் வரும்.*
*யாரோ சிலபேர் போரிடுவர்.*
*நீ பேசாமற் கிட.*
*ஊர் திரும்பும் ஒரு காலை விடியும்.*
*அன்று*
*நீயே முதலாளாய் வீதியில் இறங்கி*
*செம்மணிப் பக்கமாய் வறுகு.*
*அதுவரை*
*தும்மும் இருமும் தெருவில் இறங்காதே.*
*கொஞ்சம் புரண்டு படு*
*காலிற் கறையான் ஏறிவிடும்.*
*□□*

*உதயன்*
*06.12.1995*

# முற்றுப் பெறவில்லை முயற்சிப்போம்

*இருள் போச்சு எழுகவென என் வீட்டு வேலியில்*
*ஒரு கோழி கூவும்.*
*உறங்காதே விழியென*
*நல்லூர்மணி வந்தெழுப்பும்.*
*பாற்காரன் வந்து படலையிற் தட்ட*
*என் மனைவி*
*காற்சதங்கை கலகலக்க நடப்பாள்.*
*நான் தூக்கம் கலைந்தும் கிடப்பேன்.*
*சுதியான விடிகாலைப் பொழுதை*
*தொலைத்தாச்சு.*
*இனியெப்போ கிடைக்குமென்ற*
*ஏக்கமே என் நெஞ்சை எரிக்கிறது.*
*தாளமுடியாத துயருற்று*
*நேற்றுப் பகல்*
*நாவற்குழி வரையும் நடந்தேன்.*
*போராளிப் பிள்ளை ஒருவன் வழிமறித்தான்.*
*சின்னப் பொடியன்*
*என் நடுவிலானளவு இருப்பான்.*
*"ஐயா!*
*இனி அங்காலை போகேலாது" என்றான்.*
*சரி தம்பி.*
*எனக்கும் தெரியும்.*
*என் செய்வேன்?*

*வீட்டைப் பார்த்துவரும் விசரில் புறப்பட்டேன்.*
*என் ஊர்,*
*என் வீடு,*
*ஈச்சாரில் இருந்து எழுதிய கவிதைகள்*
*போச்சுதய்யா.*
*பொல்லாப் பேய்வாய் விழுந்து*
*எல்லாமே போச்சு என்றேன்.*
*அவன் சிரித்தபடி*
*"எல்லாமே போச்சா?" என்றான்*
*தன்வாயால்.*
*பின்னர்*
*"முற்றுப் பெறவில்லை முயற்சிப்போம்" என்றான்.*
*திடுக்குற்றுப் போனேன்.*
*நம்பிக்கைத் துளிரே!*
*நான் மடையன்.*
*நீயெனக்கு*
*மெய்ப்பொருள் உணர்த்திட்ட முருகன்.*
*இடிந்து போனவனுக்கு வாழ்க்கை துயரம்.*
*எழுந்து நடப்பவனுக்கு எல்லாமே மதுரம்.*
*திரும்பி வரும்போது*
*அந்தப் பிள்ளையைப் பார்த்தேன்*
*சிரித்தபடி நின்றான்.*
*என் நம்பிக்கைத் துளிரே!*
*உனக்கென் வாழ்த்து.*
*மீட்டு வருவாய் என் ஊரை நீ.*
*முடியும் உன்னால்.*
*காத்திருப்பேன் பிள்ளாய்.*
*ஊர் திரும்பும் சேதியுடன் நீ வருவாய்.*
*அதுவரையும்*
*உன்போன்றவர்களுக்கு உதவியபடியே*
*என் பொழுது கழியும்.*
□□

*ஈழநாதம்*
*08.12.1995*

# எதிரி எனக்கு அளித்த வரம்

*இடர் சூழ்ந்த வாழ்வே இன்னும் வருக.*
*என்னை விட்டகலாதே.*
*நீ வரும்போதே*
*நான் புதிது புதிதாகப் பிறக்கின்றேன்.*
*இருளையும் பகலையும்*
*இனம்காணுகின்றேன்.*
*மேலும் மேலும்*
*எழவேண்டுமென்ற எண்ணம்*

• புதுவை இரத்தினதுரை

என்னுள்ளே பெருகுகிறது.
துயரம் அழுவதற்காக வருவதல்ல
எழுவதற்கென்று இப்போதுணர்கின்றேன்.
இன்னலிடை இருக்கும்போதும்
இன்பமறிகின்றேன்.
போரிடுமெண்ணம் பிறக்கிறது.
ஊர்விட்டகலாது இருந்தவரை
உலகம் இவ்வளவு விரிந்ததென்று
விளங்கவில்லை.
இடம்பெயர்ந்து செல்லச் செல்ல
திசைகளும் நீண்டு செல்கிறது.
இதுகாலவரை
முட்டைக்குள்ளிருந்தேனென அறிகின்றேன்.
உறவு நரம்புகளில்
புதிய குருதி பாய்ந்து
எவரெவரின் கோடியெல்லாம்
எனக்கு உரிமையாகிறது.
"சாப்பிட்டாச்சா"
நேற்றுவரை மனைவியே கேட்டாள்.
இன்று எவரெவரெல்லாம் கேட்கின்றனர்.
"செலவுக்குப் பணமுண்டா?"
தேவையெனிற் தருகின்றேன்.
வழிமறித்துப் பலவாய்கள் குரல் வைக்கின்றன.
நான் தனியனல்லன்
பாலைவனத்தில் வழிதவறிய பயணியுமல்ல
பெரிய சொந்தங்கள் கூடிய சந்தைக்கு
குத்தகைக்காரன்.
எதிரி எனக்களித்த வரமிது.
□□

*ஈழநாதம்*
*18.12.1995*

# விளக்கேற்றும் நேரம் புறப்பட்டோம்

இன்னும் ஆயிரம் வருடங்களுக்குப் பின்னர்
எம் மண்ணிலிருந்து வாழப்போகும்,
இல்லை, ஆளப்போகும்
இளைய தலைமுறைக்கு இது.
உம்மை அரியணையமர்த்த
'இருபதாம் நூற்றாண்டு'க்கு மங்களம்பாடும் வயதில்
எம் மண் கொடுத்த விலையிருக்கே
அது பெரிது.
எல்லாவற்றையும் எழுத்திற் பொறிக்க முடியாது.
வார்த்தைகளுக்குள்ளே அவை வந்தும் குந்தாது.
எப்படி எடுத்து விரித்தாலும்
அளந்தறியாத 'துயர நிலாவரை'.
மொழிபெயர்ப்புக் கவிதையைப் போல
மூலத்தின் முழுமையும் முகம் காட்டாது.
நாங்கள் சுமந்த துன்பச் சுமையை

உங்கள் தோளறியாது.
அன்றடித்த எங்கள் இதயத் துடிப்பை
காலம் கடந்தெவரும் கணக்கெடுக்க முடியாது.
ஆயிரம் வருடங்கள் கழிந்து
ஆருக்கிது புரியப்போகிறது?
கல்லடித்த வேதனை காலுக்கே தெரியும்
அது கைகளுக்கு விளங்காது.
பிரசவ வேதனை புருஷனுக்குப் புரியாது
குத்திய வயிற்றுக்கே கொடுமை தெரியும்.
ஒருநாள்
கருத்தரித்த மேகங்கள் சூரியனை மறைக்க
மாரிமழை பொழியும் ஐப்பசி மாதம்
30.10.1995 அன்று
திங்கட்கிழமை.
வெய்யோன் படுவான்திசை வாய்க்குள்
இரையாகும் வேளை
சந்தியா நேரம்
ஐந்து மணி
'பேய்கள்' வருவதாகப் பேசப்பட்டது.
'பிசாசுகள்' எம்நிலம் புகுந்து
கோரப்பசிக்குக் குடிநிலங்களை விழுங்கியபடி
புத்தூர்,
சிறுப்பிட்டி,
நீர்வேலி,
கோப்பாய் என்று விழுங்கிவிட்டு
இருபாலைப் பக்கம் எழுவதாய் அறிந்தோம்.
பேய்கள் ஏவிய எறிகணைகள்
கூவிவந்து
ஊருக்குள் உயிர்குடிக்கத் தொடங்கின.
நின்று நிதானிக்க நேரமிருக்கவில்லை.
அகப்பட்டதை அள்ளிக்கொண்டு
ஆண்டாண்டு காலம் பற்றிப்படர்ந்த
சொந்தத்தைப் பிரிந்தோம்.
ஊர்வெள்ளம் கூடி ஒருகுளத்தில் நிறைவதுபோல்




'வலிகாமம்' ஓடிவந்து
'செம்மணி'யிற் திரண்டது.
பொழுது கருகத் தொடங்கியதும்
'முத்திரைச்சந்தை'க்கு மூச்சுத் திணறியது.
செம்மணித் தெருவில்
எடுத்தகால் வைக்க இடமின்றி நின்றோம்.
பின் ஊர்ந்தோம்.
இட்டகாலுக்கும், எடுத்த காலுக்கும் இடையில்
இரண்டங்குல வெளியில்
நாங்கள் நடந்தோம்.
இல்லை மெல்ல நகர்ந்தோம்.
பத்துமைல் நீளத்துக்குப் பாம்பென நெளிந்தது
சனத்திரளின் வரிசை.
தரவைக்கடலின் மேலே அவலக்குரலெழுப்பி
'ஆட்காட்டிகள்' எமக்காகக் கத்தின.
முன்னிலவு நெடுமூச்செறிந்து
சின்ன வெளிச்சம் சிந்தியது.
கூதற்காற்றும் குழறியது.
மழைமேகம் விழிபனித்து
சொட்டுச் சொட்டாகத் தோளில் விழுந்தது.
நாங்கள் நடந்தோம்.
உள்ளே சின்ன உயிர் சுமந்து
வயிறூதிய தாயரும் வரிசையில்,
பக்கவாதத்தால் படுக்கையிற் கிடந்த
பெற்றோரைக் காவிகளும் வரிசையில்,
தள்ளாத வயதில் தடுமாறிய
மூப்படைந்த முதியோர்,
பூப்படைந்த குருதிப் பெருக்குடன்
புதிய குமர்கள்,
கைத்தடியுடன் காலிழந்தோர்,
வெள்ளைப்பிரம்புடன் விழியிழந்தோர்,
இன்னும் உயிர்காக்கத் துடித்தோரெல்லாம்
அதே வரிசையில் அணிவகுத்திருந்தோம்.
கையிற் சுமையுடன், தலையிற் சுமையுடன்

நெஞ்சிற் கனத்த துன்பச் சுமையுடன்
நாவற்குழிப் பாலமேறி நகர்ந்தோம்.
கையிற் பிடித்து இழுத்துவந்த
முதுமைசில மூச்சைத் துறந்தன.
கரையிற் கிடத்தி வந்தோம்.
மூச்சுத்திணறிய சின்னப்பூக்கள் சில
பேச்சுக் குரலடங்கிப் போயின.
தூக்கியபோது பிள்ளையாகவும்
கிடத்தியபோது பிணமாகவும் இறக்கினோம்.
உப்பேரிக்குள் ஒரு பாதை உருவாக்கி
இறங்கிய சிலர்
கழுத்தளவு நீரிற் கரைந்தனர்.
பின்னர் கைதடியில் இணைந்தனர்.
சிலர் சேற்றில் அமிழ்ந்துபோயினர்.
பேரும் தெரியாத அந்தப் புதியவரை
யாரும் தேடவில்லை.
தேடும் நிலையிலுமில்லை.
பத்துமணிக்கு நிலவு பட்டுப்போக
எத்தனை இடர்பட்டோம்.
எவருக்கும் எவரையும் தெரியவில்லை.
ஒரு கைக்கணக்கில் ஊர்ந்தோம்.
கணவனின் கைபிடித்து வந்தவள்
இன்னொருவனிடம் இடம்மாறிப் போனாள்.
பேச்சுக் குரலில் பின்னர் இனம்கண்டு
பெயர் சொல்லிக் கூப்பிட்டாள்.
பெருவெளியில் எதிரொலித்தது சத்தம்.
நாமங்கள் சொல்லிக் கூவிய குரல்கள்
நாவற்குழியையே நடுங்க வைத்தது.
பாலுக்கழுதன வாய்கள்.
முலையிருந்தும் முடிச்சவிழ்க்க முடியாது
தனக்குள் அழுதது தாய்மை.
பசிக்குதென்று சொல்லிற்றுப் பிள்ளை.
பெற்றவள் வயிறு பற்றியெரிந்தும்
பேசாமல் வாவெனச் சொல்லி நடந்தது.

*தண்ணீர் கேட்டன தளிர்கள்.*
*என்ன செய்ய முடியும்?*
*கடல் நீரையா காட்டலாம்?*
*காதில் ஏறாத பாவனையில்*
*யாரும் வாயே திறக்கவில்லை.*
*பயணம் தொடர்ந்தது.*
*ஊரழுத கண்ணீரால்*
*உப்பேரி ஒரு அங்குலம் உயர்ந்தது.*
*மழைநீரும் விழிநீரும் கலந்து*
*தமிழீழம் நனைந்தது.*
*போயாறும் இடமின்றிப் புறப்பட்டோம்.*
*எங்கு போய்த் தங்குவது?*
*வழிநெடுக இதுவே கனத்தது.*
*கொட்டும் மழை,*
*குதறும் குளிர்,*
*கும்மிருட்டு,*
*கையிற்சுமை,*
*வயிற்றிற் பசி*
*எனினும் நடந்தோம்.*
*பெருமைக்குரிய வாழ்வுக்கதிபதிகள்*
*எச்சில் இலைபோல*
*தெருவில் எறியப்பட்டோம்.*
*தலைமுறை தலைமுறையாக வாழ்ந்த விசாலமான வீடு.*
*தலைவாசலில் மட்டும்*
*நூறுபேர் உறங்கலாம்.*
*முற்றத்தில் பந்தலிட்டால்*
*மூவாயிரம்பேர் அமரலாம்.*
*பால்சுரக்கும் பட்டிக்கறவைகள்.*
*ஆழக்கிணறு அதனுள் அமிர்தம்.*
*ஆரதக்கறி சமைக்கும் அடுப்படி.*
*அடிவளவில் ஐம்பது தென்னை.*
*குடைவிரித்து நிழல்பரப்பும் வேப்பமரம்.*
*மெல்லத்தழுவிச் சுகம்கேட்கும் காற்று.*
*வந்தமர்ந்து கூவும் வசந்தக்குயில்.*

• புதுவை இரத்தினதுரை

முற்றத்துத் துளசிமாடம்.
இன்னும் பலவாய் எல்லாமுமிருந்த வாழ்வுதறி
இனிய கனவேதுமற்ற மனதுடன்
நாம் நடந்தோம்.
மூன்றிரவும், இரண்டு பகலும் முடிய
வலிகாமம் வழித்துத் துடைக்கப்பட்டது.
அந்தளவு சனமும்
தென்மராட்சியில் அடைக்கலம்பெற்று
ஆறியது.
எந்தப் பெரிய துயரேற்றோம்.
எனினும் தளரவில்லை.
வந்த மறுநாளே
எம் வாழ்வு மீண்டும் துளிர்த்தது.
கொட்டில் கட்டக் கப்புகள் தேடினோம்.
கிடுகு பறித்தோம்.
ஆங்காங்கு முளைத்தன குடிசைகள்.
தலைகுனிந்து செல்லும் சிறுகொட்டிலானாலும்,
நீட்டிப்படுக்க நிலமில்லையானாலும்,
'பேயிடம் பிடிபடாதோர்' என்ற பெருமை
எம் தலைமுறை கொண்டது.
பூமிப்பந்து எம்மைப் புதிதாய்ப் பார்த்துப்
புல்லரித்துக் கொண்டது.
'ஆற்றலின் வடிவ'மென்று ஆமோதித்தது.
தமிழீழத்தின் ஒரு தலைமுறை
விடுதலைக்குக் கொடுத்த விலையிது.
என்றோ ஒருநாள்,
எத்தனை வருடங்களானாலும்
எங்கள் பரம்பரை தெரிந்துகொள்ளும் இதை.
அது போதும்.
விளக்கேற்றும் நேரம் புறப்பட்டோம்.
துயருற்ற போதும் மகிழ்வுற்றோம்.
□□

*உதயன்*
*18.12.1995*

• புதுவை இரத்தினதுரை

# ஒரு சாமானியனின் சங்கற்பம்

மார்கழியும் பிறந்தாச்சு
இனியும் ஊருக்குப் போகேனெனில்
என்னில் உயிர் தங்காது.
'கூவின பூங்குயில் கூவின கோழி
குருகுகள் இயம்பின இயம்பிய சங்கம்'
பெருந்துறைப் பெருமானை
வாதவூரன் இப்படித் துயிலெழுப்பினான்.

என்னூர் இறைவனை
இந்தவருடம் எப்படி எழுப்புவேன்?
என் மனைவிபோல் மார்கழியும் வடிவு.
கொள்ளை அழகு.
மார்கழி வைகறை குன்றா இளமை
ஒப்பனையற்ற எழில்.
மனதுக்கு இதம்.
'எம்பாவாய்' பாடும் நாட்களில்
என்னூரிருத்தல்
இந்திரனுலகில் இருத்தலுக்கு நிகர்.
தூறல் மழையைச் சுகித்து,
குளிரில் கொடுகிக் குளித்து,
ஆண்டாள் பாசுரத்தை மென்றபடி,
முற்றத்துச் செவ்வரத்தம் பூவை
நோகாமற் கிள்ளியெடுத்து
என்னூர் கோயில் புகுவேன்.
கதவும் திறக்காது காத்திருப்பார் குருக்கள்.
கூடிய அயலும் பார்த்திருக்கும்.
நான் 'பாவாய்' பாடப்பாடப் பூசைநடக்கும்.
'மெய்தானரும்பி விதிர்விதிர்த்து'
மண்டபம் நிறைந்த ஊர்த்திரளின்
கண் பனிக்கும்.
அலங்காரியாக அம்பாள் சிரிப்பாள்.
புட்டும், களியும் பிரசாதமாக
கைநிறைய வீடு வருவேன்.
வாசலில் நின்று வாங்கி மகிழ்வாள் மனைவி.
இந்த மார்கழிக்கு என் செய்வேன்?
என்னூர் புக இயலாது.
கோயில் பூட்டிக் கிடக்கிறதாம்.
குருக்களை நேற்றுக் கொடிகாமத்திற் கண்டேன்.
அவரும் அகதி.
நானும் அகதி.
எல்லோர் வாழ்வும் அவதி.
பேயுலாவும் ஊராகிப்போச்சே
என் தாய்வயிறு.

*உயிரற்ற தெருவும், மதவும்*
*ஊர்வனவும் மட்டும் உள்ளேயுளது.*
*மற்றனைத்தும் வெளியேறிவிட்டன.*
*எனக்கென் ஊர் வேண்டும்.*
*எம்மூர்க் கோயில் வாசலில் நின்று*
*பள்ளியெழுச்சி பாடவேண்டும்.*
*பகைதுரத்தும் பலம் வேண்டும்.*
*தோளுக்கு வலுவும்,*
*இருபது வயது இளமையும் வேண்டும்.*
*போராடி என்னூர் புக*
*எனக்கு வரமருள் தாயே!*
*களமாட இளசுகள் தேவையென*
*விளம்பரம் வெளியாகியுள்ளது.*
*விண்ணப்பிப்பேன்.*
*விடுதலைக்கு ஆட்தேடும் விசித்திரம்*
*இங்கே மட்டும்தான்.*
*எல்லோருக்குமான இனிய வசந்தத்தை*
*சிலர் மட்டும் ஏன் தேடவேண்டும்?*
*அனைவருக்குமான சுமையை*
*சிலர் மட்டும் ஏன் காவவேண்டும்?*
*போரில் எனக்கென்ன பணியுளது*
*அதைச் செய்வேன்.*
*போதும்.*
*பேய்துரத்தி ஊர்புகுவேன்.*
□□

*உதயன்*
*22.12.1995*

# வரம் நல்காய்

*இழவு வீட்டில் இருத்தலென*
*இது என்ன கோலம்?*
*அட பைத்தியக்காரா!*
*அழுவதை நிறுத்து.*
*இனி*
*மீதமுள்ள காலமெல்லாம் இருளென*
*யார் சொன்னது?*
*வசந்தத்துக்கு முந்திய*
*இலையுதிர்ப்பை*

*வரட்சியென்றா எண்ணினாய்?*
*பட்டுப்போய் மொட்டை மரமாக*
*நமக்கென்ன வேரறுந்து போச்சா?*
*இது புதிய துளிர்ப்புக்கான உதிர்வு.*
*எரிதாங்கக் கூடியது*
*எம் மண்.*
*இடிதாங்கக் கூடியது*
*எம் மனை.*
*பாறை பிளந்து ஊற்றுக்கண் தேடிய*
*பரம்பரையல்லவா நீ?*
*அழிவுன்னை என்ன செய்யும்?*
*ஊர் திரும்பும்போது*
*வீதியெல்லாம்*
*கள்ளி முளைத்திருக்கும்.*
*கதவின்றி வீடு*
*ஓவென்று கிடக்கும்.*
*அதனாலென்ன*
*வியர்வைத் துளிர்ப்பில்*
*மீண்டும் எல்லாம் வெளிச்சமாகும்.*
*இப்போ ஊர் திரும்ப வேண்டுமே.*
*பகை துரத்துவதும் உன் பணியே.*
*பலம் வேண்டும்.*
*வரம் நல்காய்!*
□□

*வெளிச்சம்*
*மார்கழி 1995 - தை 1996*

# இருளிலிருப்பது விடியலுக்காகவே

*நேற்றிரவும் இப்படித்தான்*
*இன்றும் இதுவரையும்*
*எனக்கேனோ தூக்கம் வரவில்லை.*
*கூடியிருந்து பேச யாருமிலர்.*
*இப்போது நேரமென்ன?*
*சாமம் இருக்கும்.*
*பேயுலாவும் பொழுதென்று*
*ஆச்சி முன்னர் அறிவித்த வேளையிது.*

● புதுவை இரத்தினதுரை

திண்ணையில் இருமியபடி
என் மனைவி.
அவள் கையணைப்பில் பிள்ளைகள்
தூக்கமோ?
விழிப்போ?
நானறியேன்.
வெளியே பனி கொட்டுகிறது.
யன்னலூடாகக் குளிர் குத்துகிறது.
போர்வையற்ற மேனி சில்லிட்டுப் போக
இரவற் திண்ணையில் எப்படி உறக்கம் வரும்?
நாளை விடியப் போகிறதே.
என் இருப்பைத் தொலைத்து
எங்கே கிடக்கின்றேன்?
விடிந்ததும் எத்தனை சுமையழுத்தும்.
வீடு தேடவேண்டும்.
நிவாரணத்துக்கு
கிராம சேவையாளரைக் காணவேண்டும்.
A.G.A எங்கே இருப்பாரோ
அங்கே சென்று அத்தாட்சிப்படுத்த வேண்டும்.
மனைவிக்குப் பனிகால முட்டிழுப்பு
மருந்துக்கு அலைய வேண்டும்.
திரும்பி வீடு வர
ஏக்கம் வழியப் பிள்ளைகள் இருப்பர்.
ஏனென்று கேட்டாலும் பதில்வராது.
என்றாலும் முகத்தை இழுத்தபடி மூச்சுவிடுவர்.
இதுகள் பிள்ளைகளா?
இல்லை பிசாசுகள்.
கோபம்வரும் பின்னர் ஆறிப்போகும்.
பாவம் அவர்கள்.
தலையிலடித்துக் கதறத் தோன்றும்.
வெட்கத்தை விட்டு அழவாமுடியும்?
தெரு நாயாய் விரட்டப்பட்டு
எந்தப் பெரிய வாழ்வுதறி
இந்த இரவற்திண்ணை புகுந்தோம்.

*வந்தன்று இராஜ வரவேற்பு.*
*வரவரக் குறைந்து இப்போ புறுபுறுப்பு.*
*எனக்கு மட்டுமா இந்த இழிநிலை?*
*ஊரொத்த கொள்ளையாய்ப் போச்சு.*
*வீட்டுக்கு வீடு வாசற்படி.*
*எவரை எவர் தேற்றுவது?*
*“அப்பாவுக்கும் அம்மாவுக்கும்*
*நான் இயக்கத்துக்குப் போகிறேன்*
*கவலைப்படவேண்டாம் விரைவிற் சந்திப்பேன்.”*
*துண்டுக்கடிதம் தந்துவிட்டு*
*மூத்தவள் போய் மூன்று வருடங்களாச்சு.*
*அவள் பாதை சரியென்று இப்போது உணர்கின்றேன்.*
*இன்னும் எத்தனை நாளுக்கு இந்த அவலம்?*
*எவர்வந்து இல்லாமற் செய்வாரென்று*
*எதிர்பார்த்திருப்பது?*
*ஐ.நா.சபைக்காகவா காத்திருப்பது?*
*தோளின் சுமையை நாமே இறக்க வேண்டும்.*
*தேவதூதரை எதிர்பார்க்க முடியாது.*
*பிள்ளை மட்டுமல்ல*
*நானும் போகவேண்டும்.*
*இரவற் திண்ணையில் இருந்துகொண்டு*
*உலக விடுதலைபற்றிய உசாவல் அவமானம்.*
*விடியட்டும்.*
*முடிவெடுத்தாச்சு.*
□□

*ஈழநாதம்*
*10.01.1996.*

# எடுத்து வருக!

*ஓரிரவில்*
*வெறுங் கையனாய் வெளியேறி*
*தெருவில் இறங்கினேன்.*
*ஏதும் எடுக்கிலேன்.*
*சூரியதேவே!*
*என் ஊர்மேல் உலவில்*
*விட்டுப்பிரிந்த என் வீட்டுமுற்றத்தில்*
*கட்டிய தலைவாசற் கூரைக் கிடுகின்கீழ்*

எடுக்கத் தவறிய திறப்பிருக்கும்
கொண்டு வருக.
அது என் பூட்டனின் பெட்டகச்சாவி.
பரம்பரைக்குரிய காணி உறுதிகள்,
காளியம்மனின் மேனி நகைகள்,
கலை வந்தாடிய போதில்
என் பேத்தியெடுத்துப் பேய்விரட்டிய
வெள்ளிச் சிலம்பு,
தண்டையும் வாளும்,
செஞ்சந்தனக் கைப்பிரம்பு,
அந்திம காலத்தில்
ஆத்தை ஏற்றிய பித்தளை விளக்கு,
மந்திரமெழுதிய ஏட்டுச் சுவடிகள்,
யந்திரத் தகடும், நாகபடமும்,
செப்புக் காசுகள் சிலவும்
வேண்டும் இவையெனக்கு.
இது உன் பூமியெனவும்
இவையுன் வேர்களெனவும்
நாளையென் பேரனுக்கு
ஒப்புக் கொடுத்தென் உயிர்பிரிதல் வேண்டும்.
சூரியதேவே! இவை கொணர்க
என் வேர்கள் எனக்கு வேண்டும்.
நாளை நான் போவேனெனினும்
இன்றெனக்கு வேண்டும்
எடுத்து வருக.
□□

வெளிச்சம்
மாசி 1996

• புதுவை இரத்தினதுரை

# பறக்க இறக்கை தருக

என் பரம்பரையின் மூத்தோன்
பாரதியின் கூரைவந்திறங்கி
பாட்டுக்குப் பொருளான பறவையே!
சிட்டுக்குருவி!
கிட்ட வருக.
எட்டயபுரத்தரசின் இளவல்
ஆசை மிகக்கொண்டு அழைத்தேன்.
அச்சம் தவிர்
அருகில் வருவாய்.
ஒருமணி நேரத்துக்கோர் உதவி
உன் இறக்கையை இரவல் தருக.
தருவாயெனில்
சிறகையென் முதுகிற்கட்டி
பறப்பேன்.
விர்ரென்றெழுந்து விரைந்து
என் ஊர்புகுந்துலவி
கால்பட்டு நாளான தெருவில் நடந்து

திரும்பி வந்துன் சிறகை வழங்குவேன்.
துப்பாக்கி சுமந்த காடேறிகளின் கையில்
இப்போது என் ஊர்.
எப்படியுளதோ?
கண்டவர் வந்திலர்
வந்தவர் கண்டிலர்.
காற்று வழியில் வருவன
நெஞ்சில் ஏறி மிதிக்கின்றன.
இருண்டுளதாம் கிராமம்.
இடிந்துளதாம் வீடு.
மண்ணிலெம் கண்மணிகள் உறங்கும்
மாவீரர் துயிலுமில்லமும்
சிதைவுற்றதாய் ஒரு சேதி.
எனக்குன் சிறகு வேண்டும்.
நம்பிக்கை உண்டு
பிள்ளைகள் என்னூர் போக
வழிசமைப்பார்.
உயிரூற்றி வளர்க்கும் பயிரல்லவா?
காய்க்க நாளாகும்.
அதுவரைக்கும் காத்திருக்க முடியாது.
பார்த்து வரவேண்டும்.
இனி இலையுதிர் காலம்.
முற்றம் முழுவதும் சருகாகி
அழகிழந்து போகுமே.
கூடாது
கூட்டிக் குப்பையிற் போட்டுவர
சிறகளி பறவையே.
□□

வெளிச்சம்
மாசி 1996

# எங்கே அவர்கள்

*நிலவு நேராகத் தலைக்குமேல் நிற்க*
*ஓவென்று இரைகிறது காற்று.*
*தூரத்தே*
*இரணைமடுக்காடு பனியில் நனைகிறது.*
*பழைய முருகண்டித் தனியன் யானையாய்*
*அருகில் ஒருவரின்றி நான்.*
*சுற்றமிழந்து எத்தனை நாளாச்சு?*
*அயல் வீட்டில் குடியிருந்த அவர்களை*

• புதுவை இரத்தினதுரை

*எங்கு தேடுவேன்?*
*சிதறி ஓடியது தெரியும்*
*பிறகு என்னானார்கள் அவர்கள்?*
*வாய்க்கால்நீராய்ப் பெருகிவழிந்து*
*வந்தடைந்தது ஓரிடமல்லவே.*
*திக்கொன்றாய் சிலும்பிப் போனோம்.*
*மீண்டும் ஊர்புகும்நாளில்*
*எவரெவர்கூடி உள்நுழைவோமோ?*
*உயிரோடிணைந்த உறவுகளே!*
*என் அயலிருந்தோரே!*
*எங்கே போய்விட்டீர்?*
*காண ஆசைமிகுதி ஓடிவருக.*
*இரணைமடுக்காடு அதிரக் கத்தவேண்டும்போல*
*உள்ளே ஒரு வேட்கை.*
*இன்று பங்குனித்திங்கள்*
*பொங்கலுக்கென்றே பிறக்கும் நாள்.*
*உச்சி வெய்யில் உருக்கிலும்*
*தார் உருகும் தெருவில் நடப்போம்.*
*காலிற்செருப்பும் இருக்காது.*
*காவடியும் பாற்செம்பும் சுமந்து*
*ஊரின் ஓரிருவர் நடப்பர்.*
*உறவெல்லாம் முன்னும் பின்னும் அணிவகுத்து*
*கோயில்புக மணிச்சத்தம் வரவேற்கும்.*
*இன்றெங்கே அந்த ரத்தங்கள்?*
*ஒரு முகத்தையாவது காணும்வரை*
*இந்தக் குளக்கரையில் குந்தியிருப்பேன்.*
□□

*வெளிச்சம்*
*பங்குனி 1996*

# ஒரு சின்னஞ்சிறிய கதைக்குள் வாழும் பெரியபுராணம்

*சுக்குப் புக்கு*
*சுக்குப் புக்கு*
*சுக்குப் புக்கு.... கூ.... கூ....*
*சுருதி கலையாத தாளலயத்துடன்*
*முன்னர் எம் வயல்வெளியை வகிடெடுத்து*
*ஊர்புகும் றெயில்.*
*தூரத்திருந்து பார்த்தால்*

பாம்பாய் நெளிந்து பயணம் போகும்.
குளத்திற் குளிக்கும்
உரிஞ்சான்குண்டிச் சிறுவர்
ஓடிவந்து கையசைக்க வேகமெடுக்கும்.
அதிசயமென திகைப்பூண்டில் மிதிப்பர் சிலர்.
இருமருங்கும் சணல்விளைந்த வயலூடு
மஞ்சள்பூவிடை மறைந்தும் எழுந்தும்
அது வரும்.
அறுவடை முடித்த வயலூடு போகும்.
வெறும் இரும்புக்கூடெனினும்
எத்தனைநாள் பார்த்தாலும் அலுக்காது.
தொட்டுப் பார்த்தால் சுகமிருக்காது.
எனினும்
புகைவண்டிமீது எமக்குப் பகையில்லை.
இன்றேன்
தண்டவாளங்களிருந்த தடயங்களற்று
விதவைக்கோலத்தில் புகையிரதப் பாதை?
'சிலிப்பர் கட்டை'க்கும்
'சிக்னல் மரத்து'க்கும்
என்ன நடந்தது?
எவர் பிடுங்கிச் சென்றார்?
இரும்புப் பாதையேன்
இல்லாமற் போச்சு?
ஸ்ரேசன் கட்டிடங்கள் கூரையற்று
குட்டிச் சுவரானதேன்?
சொந்தமற்றுப்போன தேசத்துடனான
உறவைத் துண்டித்தது ஓரினம்.
இனத்தின் முகத்தைச் சிதைத்தவரின்
இரும்புப்பாதை இல்லாமற் போனது.
நூலறுந்த பட்டத்துக்கு வாலெதற்கு?
பகையற்றிருந்தவரை
ஊர்களைப் புகைவண்டி இணைத்தது.
உறவற்றுப் போனதும்
தொடர்பற்றுப் போனது.

தாண்டிக்குளத்தைத் தங்களுரென்று
எங்களுக்குத் தடைபோட்டார்கள்.
ஓமந்தை எங்களுரானது.
தண்டவாளத்துக்கு என்ன தெரியும்?
அது பேசாமற்கிடந்து
துருப்பிடித்துப் போனதால்
பிடுங்கி எடுத்துக்கொண்டோம்.
'யாழ்தேவி'
'உத்திரதேவி'
'இன்ரர்சிற்றி'
'மெயில்'
அசுமாத்தமேதுமின்றி வந்துபோன
'கூட்ஸ்' என
எத்தனை நாமங்களோடு
உறவு இழை பின்னி
முந்தியெம் மண்ணிற் சக்கரங்கள் சுழன்றன.
அவர்கள் சக்கரச் சுழற்சியைத் தடுத்துவிட
நாங்கள் தண்டவாளத்தை
பெயர்த்துக்கொண்டோம்.
ஒரு காலத்தில்
அழகாயிருந்தனதான் எல்லாம்.
இந்துசமுத்திர மாங்கனியை
'அந்த'
அணில்கள்தான் அரித்தன.
நாங்கள் எமக்குரிய பாதியைப் பவுத்திரப்படுத்த
காம்பாய்க் கிடந்த இரும்புக்கம்பிகள் கழன்றன.
'சிலிர்ப்பர் கட்டை'க்கும்
'சிக்னல் மரத்து'க்கும்
நடந்தது இதுதான்.
□□

வெளிச்சம்
பங்குனி 1996

# எல்லாமே கனவா

ஓடிக்கொண்டே திரும்பிப் பார்த்தேன்
துரத்தி வந்தார்கள்.
கைகளில் வெட்டரிவாள்,
கண்டகோடாலி,
ஒருவர் கையில் உலக்கை
இன்னும் வேகமெடுத்தேன்.
தோளிருந்த துணிப்பை விழுந்தது.

நின்றெடுக்க நேரமில்லை.
என்னூரின் எல்லை வந்தாச்சு.
இன்னும் என் பின்னால் அவர்கள்.
என்னை ஊர்விட்டுக் கலைக்க
இவர்கள் யார்?
கோபமெழுந்து யாரென்றேன்.
குரல் வயல்வெளியில் எதிரொலித்தது.
பதிலில்லை.
இப்போது ஆட்களெவரும் இல்லை
காலடிச் சத்தமே கலைத்தது.
மீண்டும் மூச்சிரைக்க ஓடினேன்
பக்கத்து ஊரின் எல்லைக்கும் வந்தாச்சு.
பெரிய மதவடியில் பெருங்கூட்டம்
அப்பாடா.... ஒரு ஆறுதல் மூச்சு
துணைக்கொரு கூட்டம் கிடைத்தது.
என்ன இது?
இப்போது இவர்களேன் ஓடுகிறார்கள்?
கூட்டத்தில் ஒருவனாய் நானும்.
தோளிலேதோ தொட்டது
திடுக்குற்று விழித்தேன்.
அட... எல்லாமே கனவா?
என்ன இழவடா இது.
பயந்தொழிக்கும் வாழ்வில்
உறக்கமும்,
விழிப்பும் ஒன்றாகிவிட்டதா?
அவர்களை நான் கலைப்பதுபோல
கனவிலாவது காணக்கூடாதா?
வெளியிற் சொல்வதா?
வேண்டாம்
வெட்கம்.
□□

வெளிச்சம்
சித்திரை 1996

# வேண்டும் தாண்டவம்

கண்ணைப் பறிக்கும் மின்னல் வெட்டுக!
கருமேகங்கள் கட்டிப் புரள
இடி எழுக!
பூமி குளிர மழைபொழிக!
கோபுர மணிகள்அதிர
குத்துவிளக்குகள் ஒளிர
கருவறைக் கதவுகள் திறந்து
தெய்வங்கள் தெருவில் இறங்குக!
தம்புரா, வீணை,
மத்தளமேந்திய
சாந்த சொரூபங்கள் சந்நிதிக்குள்ளேயே
தூங்கிக் கிடக்க.




*வேலும், வாளும் சூலமுமேந்திய*
*வீரத்தெய்வங்கள் வெளியே வருக!*
*புழுதியெழுந்துபோய்*
*சூரியனைத் திரையிட*
*கோபவிழிகள் குருதிநிறமாக*
*தண்டையும், சிலம்பும் சப்திக்க*
*சக்திகள் தாண்டவமாடுக!*
*ஊழிக்கூத்து இதுவென*
*உலகம் வேகமெடுத்துச் சுழலுக!*
*'பகைவனுக் கருள்செய்'*
*பாடுவோர் வேண்டாம்.*
*'நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்'*
*பாடிய நாவுக்கரசரே வருக!*
*சகடை*
*தண்டிகை*
*சாமரம் யாவும் எழுக.*
*குடை, கொடி,*
*ஆலவட்டம்,*
*தீவட்டி,*
*வாகனக் கொம்பு,*
*கொடிமரமெல்லாம் குதிக்க*
*பூசையற்றுப் போனது*
*உம் திருக்கோயில்.*
*நேரத்துக்குணவு யார் தருவார்கள்?*
*விளக்கேற்ற யாருமற்றபோது*
*இருட்சிறைக்குள் ஏனிருத்தல் வேண்டும்?*
*'புனலில் ஏடெதிர் செல்லெனச் செல்லவும்*
*புத்தனர்தலை தத்தெனத் தத்தவும்'*
*செந்தமிழ்ப் பதிகம் பாடிய*
*திருக்குரவர் யாவரும்*
*வந்தெம் இடர் களைய*
*கோளறு பதிகம் பாடுக!*
*அனந்த சயனத்திருக்கும் ஆதிமூலத்தின்*
*கருடவாகனமே காற்றிலெழுக!*

• புதுவை இரத்தினதுரை

*குண்டு வீசவரும்
யந்திரப் பறவையைக் குதறுக!
கூந்தல் கலையக் கொற்றவை வருக!
உன் கோயிலெரித்த
கொடியவர் குருதியை
தலையிற் தடவி நீராடுக!
தெய்வப் பொருளெலாம்
பொய்யுரையெனவே பேசவும் அறிவிலோம்.
உண்மைப் பொருளென
உணரவும் தெளிவிலோம்.
இருதலைக் கொள்ளியாய்
ஞானம் கைவராது
எம் நாட்கள் கழிகின்றன.
உண்மைப் பொருளென உணர
ஒரு வரம் தருக!
போரிடப் புறப்படுக!
வலிகாமம் இன்னொரு
திருச்செந்தூராகட்டும்.
சூரர் படையழிக்க
வேலாயுதம் எழுக!
ஊருள் நாம் புகுவோம் ஒருநாள்.
விளக்கேற்ற வீடு வருவோம்.
அதுவரை
எண்ணை தண்ணீரற்று எப்படியிருப்பீர்?
கருவறை விட்டுத் தெருவிலிறங்கி
களமாடுவீர்.
இன்னும் எம் பாலகர்
உள்ளே உள்ளனர்.
அடிக்கடி பகையுடன் மோதுவதறிவீர்.
அவர்களுக்கருள்வீர்.*

□□

*வெளிச்சம்
சித்திரை 1996*

# காலம் இன்னும் கடந்துபோகவில்லை எழுக!

தனக்கென்றோர் தனிக்கூடும்
கூட்டைச் சுற்றிய
கிடுகுவேலியுமாக
எட்டப் பார்வைக்கு ஒன்றாகவும்
தொட்டுப் பார்த்தால் பலவாகவும்
முட்டைக்குள் கருவாக அந்தரத்திலாடும்
வித்தியாசமானவராக இருந்தோம்.
எதிலும் ஒட்டாத தனியுலகம் எமது.

● புதுவை இரத்தினதுரை

*சீட்டு,*
*வட்டி,*
*சீதனம்,*
*கிணற்றுப்பங்கு,*
*நடுத்திண்ணை, செம்புதண்ணீர்*
*வாய்நனைத்தல்*
*தேசவழமைச் சிறைக்குடிகள்.*
*தலைகுனிந்து வெட்கப்பட வேண்டியவற்றுக்கு*
*தலைப்பாகை கட்டிச் சபையிருத்தினோம்.*
*நெருப்பெரிக்கவேண்டிய நீசத்துக்கு*
*பட்டாபிஷேகப் பவிசளித்தோம்.*
*வெள்ளைக்காரனைத் 'துரை'யென்ற பழக்கத்தில்*
*எல்லோரையும் 'சேர்' என்றோம்.*
*எமக்கு*
*கூண்டுக்கிளிக்குப் பேச்சுப்பழக்கப் பிடிக்கும்.*
*சிட்டுக்குருவியை ரசிக்கத் தெரியாது.*
*நிமிர்ந்தசெருக்கு கொஞ்சமும் பிடிக்காது.*
*அடிமை வாழ்வே ஆனந்தம்.*
*குனிந்து கொள்வதே குபேரவாழ்வு.*
*காக்கொத்தரிசியிலும்*
*பிடியரிசியள்ளும்*
*கஞ்சத்தனத்துக்குத் தாலிகட்டியவர்*
*வேறெவருமிலர் நாங்கள்தான.*
*எதற்குமொரு எல்லையிட்டு*
*அதற்குளொரு வாழ்வமைத்த பரம்பரைக்கு*
*என்னாச்சு இன்று?*
*எதிரி வேட்டைநாய்களாகத் துரத்த*
*ஒவ்வொரு ஊராக ஓடும்*
*நரகல் வாழ்வில் நாம்.*
*ஆயினும் புத்தி கைவரப் பெற்றோமா?*
*அதுதானில்லை.*
*விடியாத திசையாக இருளில் இருக்கின்றோம்.*
*யார் கைநீட்டினாலும்*
*ஓடிப்போய் தோளிற்குந்தும் சிறியராய் நாம்.*

வெளியிற் சொன்னாலே வெட்கம்.
கங்கை கொண்டான் தமிழன்
கடாரம் வென்றான் தமிழன்.
சொல்லிவிட்டுக் கிடாரத்தை இறக்கி
சோற்றுக்கு ஊறுகாய் தேடினோம்.
கறிக்குப் பெருங்காயம் போட்டோமன்றி
சுதந்திரத்துக்குச் சுவைசேர்க்க மறந்தோம்.
எல்லாவற்றுக்கும்
வட்டியும் முதலுமாய்
வாசலுக்கு வந்தது பலன்.
ஓட ஓட விரட்டுகின்றான் பகைவன்
நாக்கிழுக்க ஓடுகின்றோம் நாம்.
என்றாலும் ஞானம் விடிந்ததா நமக்கு?
அதுதானில்லை
நாயினும் கடையராய்க் கிடக்கின்றோம்.
உப்புப்போட்ட கருவாடாய் உயிர்ப்பின்றி
இப்போதும் இருக்கின்றோம்.
சித்திரைச் சிறுமாரிக்கு
பிஞ்சுதிர்ந்த மாமரத்து அடிபோல
நிலத்தில் சிதறிக்கிடக்கவா பிறப்பெடுத்தோம்?
யாரோ அடுப்பெரிக்க
அதிலே குளிர்காய நினைக்கின்றோம்.
கூடாது.
காலம் இன்னும் கடந்து போகவில்லை
எழுக!
□□

வெளிச்சம்
வைகாசி 1996

# நம்பிக்கைதான் மடியில்

பெர்லின் சுவரை இடித்தெறிந்துவிட்ட
பெருமகிழ்ச்சியில் திரும்பிப் பார்த்தால்
இங்கே நீரேரி பெருஞ்சுவரானது.
கண்ணுக்குக் கடலாகத்தான் தெரியும்
எனினும் கடக்க முடியாது.
இருகரையிலும் உறவுகள்
துண்டாடப்பட்டன.

*கணவன்,*
*மனைவி,*
*தாய்,*
*தந்தை,*
*பிள்ளை,*
*உடன்பிறப்பு,*
*நண்பன்,*
*தோழி என்ற உறவையெல்லாம்*
*ஒன்று அக்கரையில்*
*இல்லையேல் இக்கரையில்விட்டு*
*பிரித்துக்கொண்டது கடற்சுவர்.*
*வன்னியிலாவது ஒரு நம்பிக்கையில்*
*புதுவாழ்வுக்கு அத்திவாரமிடலாம்.*
*தொடக்கத்திலிருந்தாவது தொடங்கலாம்.*
*ஆனால் அக்கரை?*
*காற்று மட்டும் ஒன்றும் பேசாது*
*போவதும் வருவதுமாக*
*குடாநாடு இருட்சிறையானது.*
*உறவைத் தேடப்போன ஐ.சீ.ஆர்.சீயும்*
*முகவரியில் ஆட்களில்லையென*
*பெருமூச்சு விடுகிறது.*
*ஏன்?*
*எங்கு போனார்கள்?*
*என்னவானார்கள்?*
*ஒன்றும் தெரியவில்லை.*
*நம்பிக்கை மட்டும்தான் நமதுமடியில்.*
*□□*

*வெளிச்சம்*
*வைகாசி 1996*

# நின்றீர் நெருப்பானீர்
# வென்றீர் வாழ்கின்றீர்

விண்ணிலம் பூத்த விரிகடலாய்,
மரமசைத்துப்
பண்பாடும் தென்றற் பசும்காற்றாய்,
யுகக்கழிவில்
தோன்றும் ஊழித்தீச் சுடராய்,
பேரிடியாய்,
வேண்டும் பொழுததிரும் வெடியாய்
எம்மண்ணின்
வீரமுரைக்க விளைந்த கரும்புலிகாள்!

*ஈரவிழி சொரிய இன்றுங்கள் நினைவுடனே*
*விளக்கேற்றி வைத்து விம்முகின்றோம்.*
*எம்மாலே*
*அளவெடுக்கவொண்ணா அக்கினியின் நாவுகளே!*
*முழுவதிலும் யுத்த முறைமைதனையழித்து*
*புதிய வரவொன்றின் போர் வடிவமானீர்கள்.*
*தொட்டுணரமுடியாத சோதிப் பொருளாகி,*
*கற்பனைக்கு அப்பாலும் கடந்த வியாபகமாய்,*
*அற்புதத்தில் அற்புதமாய் ஆன அதிசயங்காள்!*
*வந்தெம் மண்தொட்டு வளைப்போன்*
*எவனெனினும்*
*'கந்தகக்கணைகள்' கருக்குமென நடுங்க*
*செய்தவரே!*
*உங்களுக்கெம் தேசம் தலைவணங்கும்.*
*எமையடக்கும்*
*பொய்மைப் பொருளுக்குப் பொய்யாய் இருந்துவிட்டு*
*எய்யும் கணைகளுக்கே இலக்காகிப் பணிமுடித்தீர்.*
*வெய்யவரை வீழ்த்த வெடிசுமந்து சென்றாலும்*
*உள்ளூறும் உங்கள் ஊற்றின் இதம்பெரிது.*
*கள்ளூறும் பூவின் மென்மை*
*இதயத்தில்*
*நீக்கமறவெங்கும் நிறைந்த விடுதலைத்தீ*
*தாய்நிலத்தின்மீது தளராத காதலுடன்*
*நின்றீர்,*
*நெருப்பானீர்,*
*நீங்களெங்கள் நெஞ்சமதை*
*வென்றீர்,*
*வாழ்கின்றீர்.*
*விடிபொழுதின் ஒளியானீர்.*
□□

*ஈழநாதம்*
*05.06.1996*

# இனி இரவிலும் வெளிச்சம்

உச்சிவெய்யில் உடலைத் தகிக்கிறது.
அட, மத்தியானம் ஆச்சா?
இரவில் மட்டுமா இருட்டு?
இப்போ பகலும் இருளாச்சு.
வீட்டுக்குள்ளிருந்து என்னதான் செய்வது?
வெளியே வந்தும் வெட்டியா கிழிப்பது?
நேற்றுப் போல் இன்றும்
இன்று போல் நாளையும்
எந்த மாற்றமுமின்றி
நாட்கள் நகருகின்றன.

*நிர்க்கதியாக நான்.*
*நிவாரண வரிசையில் மனைவி.*
*ஐந்துவயதுப் பிள்ளைக்கு*
*என்ன தெரியும்?*
*அது அழுவதும் சிரிப்பதுமாக.*
*இரவல் காணி,*
*இரவல் வீடு,*
*இரவல் சோறு.*
*ஆழ வேரோடிய வாழ்வழிந்து*
*என் சுயமே தகர்ந்துவிட்டதா?*
*எம்மை மீட்க வந்ததாய்*
*ஊர்புகுந்தார் யமர்.*
*அமைதிக்கான வருகையென*
*அன்று அயல் நாடு.*
*சமாதானத்துக்கான யுத்தமென*
*இன்று சிங்கள நாடு.*
*துயர் சுமப்பது மட்டும்*
*எம் முதுகுகளா?*
*என்ன பொல்லாவிதி நமக்கு.*
*வந்தவர்கள் திரும்பியது*
*நாம் விரட்டியதாக எழுதட்டும் வரலாறு.*
*சேதணைக்கு மண்சுமந்த*
*அணிலாக நானும்*
*மனச்சாட்சிக்கு விரோதமற்ற தமிழனாய்*
*கடமை வழுவாத கால மனிதனாய்*
*இருப்பதே சுகம்.*
*பகலிலும் இருளென யார் சொன்னது?*
*அது நேற்று.*
*இனி இரவிலும் வெளிச்சம்.*
□□

*வெளிச்சம்*
*ஆனி 1996*

# இலுப்பை மரம் பூத்து
# இலவ மரம் காய்த்து
# இலந்தை மரம் பழுத்து

நாமில்லை எனினும்
எம்மூர் எழிலிலங்குமெனில்
அது போதும்.
இதமாகும் எம் மனசு.
வயல் வெளியடுத்த
சிறுகாட்டில்
இலுப்பைமரம் பூத்து
இலவமரம் காய்த்து
இலந்தைமரம்

பழுத்துளதென்றால்
நன்று.
நாயுருவி,
காண்டை,
நாகதாளியெல்லாம்
அப்படியே இருக்கணும் சாமி.
பற்றைக் காடெனிலும் அது எமது.
இன்னொருவன் எரித்தானெனில்
பொறுக்காதெம் நெஞ்சு.
காரையும், புல்லாந்தியும்
பழமாய் சிலிர்த்திருக்கட்டும்.
வேற்றொருவன்
வெட்டிச் சரித்தானெனும்
செய்திவந்து செவியேறில்
தாங்காதெம் உள்ளம்.
மணியொலியும்,
நாதஸ்வர மங்கலமும்
இனியுமெம் ஊரில் இருக்கட்டும்.
பூதவராயர்கோயிற் பொங்கலும்,
நல்லூர்த்திருவிழாவும் நடக்கட்டும்.
மொட்டை மரமாகாது
பூக்கட்டும் நம்மூர்.
எவரெனிலும் எம் சோலை புகுந்து
வேரறுக்க முடியாதென்று
உரத்துச் சொல்லட்டும் ஒழுங்கைகள்.
காமமுற்றெங்கள் பூக்களைத் தொட்டால்
நாசம் வந்துறுமென நம்பு பகையே.
அசுரவாகன அணிவகுப்புடன்
ஒருகாலை வந்தெம் ஊர்புகுந்தாய்.
புத்திசாதுரியமாய் விட்டுவிலகி
எட்டித்தொடும் தூரத்தில் இருக்கின்றோம்.
உடற்கூடு இங்கெனிலும்
உயிர்மூச்சு உங்கேதான் உலவுகின்றது.
உள்ளேயிருக்கும் உறவுகளே!

• புதுவை இரத்தினதுரை

நாங்கள் வரும்வரை நடுக்கமுறாது
தாய்மடியைத் தாங்குங்கள்.
பகைகுதறக் குஞ்சுகள் வரும்.
கைகளாற் பொத்திக் காப்பாற்றி
பசிக்குக் குறுமணி எறியுங்கள்.
கவனம்;
வலை விரித்திருப்பான் வேடன்.
பவுத்திரமாய்க் கூடு திரும்ப
குஞ்சுகளுக்கு
வழிசொல்லி விடுங்கள்.
எல்லாம் முடிந்ததென இடிந்து
எதிர்காலம் இருளென எண்ணாதீர்.
ஓரிரவு நாம் வருவோம்
ஒளிகொண்டு.
இங்கே புதுக்கூடுகள் கட்டுகின்றோம்.
கூடெங்கும் ஆயிரமாயிரம்
கருங்குளவிகள்.
எந்தப் பகையெனிலும் இவை கொட்டும்.
எல்லைவரை துரத்தித் திரும்பும்.
அக்கரைக்குப் போவதெனில்
ஆற்றுநீர் வற்றும்வரை
காத்திருக்க முடியாது.
நீந்திக் கடக்க நினைத்தோம்
குதித்துவிட்டோம்.
தொல்லையும்
துயரும் சிறுகாலம்.
வருங்காலம் நமது.
□□

வெளிச்சம்
ஆனி 1996

# ஒரு நிலவில்
# மிக விரைவில்

எனக்கு நானே சொந்தமற்றுத் தனித்து
கச்சதீவில் கரையொதுங்கி விட்டேனா?
என் கழுத்துக்கு மேலேதான்
இன்னும் தலையிருக்கிறது.
எனினும் தலையே எனக்கு
அந்நியமாகி விட்டது.
முதுகு அரிக்கிறது
சொறிய விருப்பம்.

*கைகளுக்கும் எனக்குமான உறவுதான்
அறுந்து விட்டதே.
ஒவ்வொரு உறவு இழைகளையும் சிதைத்து
திக்கொன்றாக கலைத்துவிட்டான் எதிரி.
யாழ்ப்பாணத்திலிருந்து வெளியேறியபோது
தேடிய தேட்டத்தை மட்டுமே
தொலைத்திருந்தோம்.
உறவுகள் அருகில் இருந்தன.
தென்மராட்சியிலிருந்து துரத்தப்பட்டபோது
பாதி உறவைப் பறித்துக்கொண்டான் பகைவன்.
வெறும் உயிர்க்கூடு சுமந்து
வன்னிக்கு வந்தோம்.
விட்டானா பாவி?
கிளிநொச்சியிலிருந்து மீண்டும் கலைத்தான்.
உறவுகள் வர வரக் குறைந்தன.
மெல்ல மெல்ல ஒவ்வொருவராகக் கரைந்தனர்.
என்னைத் தாங்கவே
எனது கால் வலுவற்றிருக்கும்போது
இன்னொருவரை எப்படித் தோளிற் சுமப்பது?
மடியிலெடுத்துக் கொடுக்க மனமுண்டு
மடியிற்தான் எதுவும் இல்லையென்றாச்சு.
நிவாரண வரிசையில் கையேந்த வைத்து
எம்மை நிர்மூலமாக்கி விட்டான்.
கலங்காதிரு மனமே!
மீண்டும் ஒன்றாகக் கூடுவோம்
ஒரு நிலவில்.... மிகவிரைவில்.
□□*

*வெளிச்சம்
கார்த்திகை 1996*

# நாமும் விழித்திருப்பதே நன்று

*நேற்றிரவு*
*வளவுத் தலையில்*
*நிலவு இருந்தது.*
*கூடவே என்னோடு காற்றும்.*
*அருகில் உருகிக்கரையும் வாய்க்காலும்*
*அதற்கப்பால்*
*நிலவிற் குளித்தபடி*
*காடும் கிடந்தது.*
*மௌனத்தில் உறைந்திருந்தது*
*செம்மண் புழுதித்தெரு.*
*இலக்கேதுமின்றி கால்போன போக்கில்*
*தெருவைத் தட்டியெழுப்பி நடந்தேன்.*
*மொட்டைப்பாலம்வரை வந்தாச்சு.*
*இனி எட்டிநடந்தால் இரணைமடுக்குளம்*
*எனக்கென்ன விசரா பிடித்துவிட்டது?*
*ஏன் நடக்கின்றேன்?*
*காலிற் செருப்பில்லை*
*மேலிற் சட்டையில்லை*
*எவரேனும் பார்த்தால் என்ன நினைப்பார்கள்?*
*'க்ளுக்....' ஏதோ சத்தம்.*
*தலையைத் திருப்பினேன்.*
*வாய்க்கால் நீரிருந்து மேலெழுந்துபோனது*
*ஒரு தனித்தபறவை.*
*என்னைப்போல் அதுவும் ஊர் பிரிந்திருக்கும்*
*தூக்கமின்றித் திரிகிறது போலும்.*
*ஒருவர் கூட தெருவிலில்லாது*

இப்படியேன் 'திருவையாறு' நித்திரை கொள்கிறது?
யாரேனும் ஒருவராயினும் வாருங்களேன்
பேசலாம்.
பகலில் எனக்கும் நேரமில்லை
உமக்கும் நேரமில்லை
இரவிலாவது பேசலாம் எழும்புங்களேன்.
காடதிரக் கத்தவேண்டும் போல
ஒரு தவனம்.
எம் ஊரெங்கும் பேய்கள்.
காடேறிகளின் காலில்
எம் கையளைந்த மண்.
இங்கும் 'யமர்' வரலாமெனும் அசுமாத்தம்
எப்படித் தூங்கலாம் நீங்கள்.
'டுடும் டும்....' எறிகணைச் சத்தம்
எந்தப் பக்கம்?
தட்டுவன்கொட்டியா?
பரந்தன் பக்கமா?
தொடர்ந்து துப்பாக்கிகள் கக்கின சத்தம்.
'பிள்ளை'களும் விழிப்புத்தான்.
'காவல் தெய்வங்க'ளுக்கு கோடி நமஸ்காரம்.
கனகாம்பிகை அம்மன் பக்கமாய்த் திரும்பி
ஆத்தாளே காப்பாற்று அவர்களை என்று
சொல்லி நடந்தேன்.
ஊர் உறங்கியது ஏனென்று விளங்கியது
'பிள்ளைகள் விழித்திருப்பார்கள்' எனும்
பெருநம்பிக்கை.
நம்பிக்கை பொய்யாகாதுதான்.
எனினும்
நாமும் விழித்திருப்பதே நன்று
விடியும்வரை.
□□

வெளிச்சம்
கார்த்திகை 1996

# மீண்டும் வேண்டும்

என்னூரிலும் இந்நாள் மழைபொழியும்.
ஒழுங்கையெல்லாம் நீர்வழிந்தோடிட
முழங்காலளவு வெள்ளத்தில்
தெப்பலாக நனைந்தபடி
கப்பல் விடுவர் சிறுவர்.
முற்றத்துச் சீமைக் கிளுவையிருந்து
சிலுநீர் சொட்டும்.
அடுக்குச் செவ்வரத்தை பூத்து
எடுத்துத் தொடுக்க ஒருவரின்றி

மாலையில் காம்பு கழன்று கீழேவிழும்.
வாரடித்த நிலத்தில் வரைபடங்களாக
மழைநீரோடிய தடயங்கள் இருக்கும்.
பார்த்துப் பரவசப்படத்தான் நானில்லை.
நானில்லாது இன்னொரு மார்கழியும்
வாசலுக்கு வரப்போகிறது.
பரவைக் குளமும்,
பண்டாரக் குளமும்,
தலங்காவற்பிள்ளையார் தரவைவெளியும்
நீரால் நிறைந்திருக்கும்.
பரமேஸ்வராச் சந்தி
'அபிராமி விலாஸ்' தோசையும்,
கோண்டாவிற்சந்தி 'பிள்ளையார் விலாஸ்'
போண்டாவும்
இனியென் நாவிற்படும் நாளெப்போ?
நல்லூர்மணிக்குக் கைகூப்பித் தொழுதெழும்
ஆனந்தம் இனியென்று வந்தடையும் என்னில்?
யாழ்ப்பாணத்துத் தெருக்களில்
என் உலா இனி எக்காலம்?
வசந்தம் தழுவாத மொட்டை மரமென,
வல்லூறுகளிடம் குஞ்சைக் கொடுத்த
தாய்க்கோழியென
உள்ளே நெருப்பெரிய உள்ளேன் நான்.
பேயிருக்கும்வரை ஊருக்குப் போகேனெனினும்
இழந்துபோன இனிமைகளை
நினைவு வேர்கள் உறிஞ்சுகின்றனவே.
வேண்டும் என் ஊர்.
வேண்டும் என் வாழ்வு.
மீண்டும் வேண்டும்
நானிழந்த அனைத்தும்.
□□

வெளிச்சம்
தை 1997

# தை மகளே! வந்தெங்கள் தலைவாசல் மீதமர்க!

*தைமகளே!*
*வந்தெம்*
*தலைவாசல் மீதமர்க.*
*கையோடு உந்தன் கணவன்,*
*ஒளித்தேவன்*
*சூரியனைக் கூட்டிவந்தெம் சுற்றத்துக்கறிமுகம் செய்.*
*ஊரிருந்து வேரை உதறி,*
*வெறும் கூடாய்*
*மூச்சிழுத்துக்கொண்டு முடங்கியுள்ளோம்.*
*எம்தாயே!*
*பாய்ச்சுன் விழிப்பார்வை*
*பாவமெலாம் கரையட்டும்.*
*ஒளிபாய்ச்சு;*
*இனியுமக்கு ஒரு துன்பமில்லையென*
*வழிகாட்டு;*
*வந்த துயர் வெள்ளம் வடியட்டும்*
*தஞ்சமென வந்தெம்மைத் தாங்கு.*
*திசையெங்கும்*
*அஞ்சற்க என்றோர் அசரீரி கேட்கட்டும்.*
*சென்ற வருடம்*
*திருவே! நீ வரும்வாசல்*
*வண்ணக் கலவைகொண்டு வாசலிலே கோலமிட்டு*
*உன்னை வரவேற்றோம்.*
*உதயப் பொழுதெழுந்து*

*பெண்ணேயுன் புருஷனுக்குப் பொங்கிப் படையலிட்டோம்.*
*விண்ணிருந்து வந்து விருந்துண்டான்.*
*இவ்வருடம்*
*எங்களுக்கோர் வீடோ*
*இருக்க மரநிழலோ*
*பொங்கிப் படைக்க புதுப்பானை, சர்க்கரையோ*
*எங்களிடம் இல்லையென இழிந்தோம்.*
*தைப்பாவாய்!*
*தங்க நிலமற்ற தமிழனிடம்*
*இன்றுதர*
*எந்தப் பொருளுமிலை.*
*ஏர்பிடித்து நாங்களன்று*
*உழுதநிலம் எல்லாம் ஊரில்.*
*ஊரெல்லாம்*
*அழுதபடியங்கே அடங்கிக் கிடக்கிறதாம்.*
*மீண்டுமெம்மூரின் முற்றத்தில்*
*நாம் பொங்கும்*
*ஆண்டிந்த ஆண்டாய் அமையட்டும்.*
*'பிள்ளைக'ளெம்*
*கூண்டுடைக்க*
*நாங்கள் குதித்தபடி ஊர்திரும்பும்*
*ஆண்டிந்த ஆண்டாய் அமையட்டும்.*
*தைமகளே!*
*அன்றெங்கள் முற்றத்தில் அடுப்பேற்றி*
*ஊர்கூடி*
*ஒன்றானோம் நாங்கள் உறவோடு*
*எனப்பாடி*
*புத்தரிசி குத்தி*
*பொங்கி மடைபரவி*
*சித்தம் மகிழ்ந்து சிரிப்போம்.*
□□

*வெளிச்சம்*
*தை 1997*

## என்று விடியும்?

அனுபவித்தறியாத ஒன்றுக்கு
ஆசைப்படுகிறது மனசு.
சுவை தெரியாத விருந்துக்கு
வீணீர் கொட்டுகிறது வாய்.
நூற்றாண்டுகளுக்கு முன்னர்
என் பரம்பரை பறிகொடுத்ததை
எட்டிப்பிடிக்க எண்ணுகின்றன கைகள்.
சாளரத்தை மீறியும்

என் பார்வை விரியும்.
வீதியிலும் இறங்கும் கால்கள்.
இது அவசரயுகம்.
வெறும் சுயநல யுகமுமா?
எல்லோரும் ஏதேதோ தேடுகின்றனர்.
மாரிகாலத்துக்கு முந்திய எறும்புகளாக
வரிசை வரிசையாக தீனிதேடுகின்றனர்.
நெஞ்சில் பற்றுகிறது நெருப்பு.
படுத்தால் படுக்கை நோகிறது.
எழுந்தால் வலிக்கிறது கால்கள்.
எதிலும் பிடிப்பற்றுப் போக
வாழ்வு சலிப்புற்று விடுகிறது
சிலநேரங்களில்.
அவாவுற்ற அந்தப் பொருள்
கிட்டாமலே வாழ்வு முற்றுற்று விடுமென
அச்சமுறும் இரவுகளும்
அடிக்கடி வரும்.
ஊருக்கு முன்னரே
எனக்குமட்டும் விடிந்து விடுகிறதா?
எல்லோரும் ஏன் உறக்கத்தில் கிடக்கின்றனர்?
பாரதியின் பாட்டுவரிகளுக்குள் மட்டும் கிடந்தது
என் தேசத் திசையெங்கும் வேண்டும்.
யாருக்கும் ஏவல் செய்யாத ஒருநாள்
என்று விடியும்?
□□

வெளிச்சம்
பங்குனி 1997

• புதுவை இரத்தினதுரை

# விரைவில் வருவேனென
# என் வீட்டிற்குச் சொல்லிவருக

*பரிவட்டம் கட்டிய நிலவே!*
*பார், என்னை.*
*விரியுண்ட வான விதானமே!*
*விழிதிறந்து பார், என்னை.*
*நள்ளிரவுக்கு மேலாச்சு.*
*எல்லோரும் உறக்கத்தில்*
*என்னைத் தவிர.*

*போகமற்றுக் கிடக்கிறது சாமப்பொழுது.
என் மேனி தழுவ மறந்து
எங்கே போனாய் காற்றே!
இரவுப் புட்களும் மௌனித்து
கரந்துறைகின்றனவா?
ஒருவர்கூட அருகிலற்ற இரவு
எத்தனை கொடுமையானது.
பல்லியொன்று உச்சரித்துப் போக
சில்வண்டின் சீழ்க்கையொலி
கேட்கிறது தொலைவில்.
என்ன ராகமாக இருக்கும்?
நிச்சயமாக எனக்காக சிந்துபைரவியையே
சில்வண்டு வாசிக்கும்.
மேகமுந்தானைக்குள்ளே நிலவு சரசம் செய்ய
பங்குனிமாத இரவில்
ஆடை களைகிறது முற்றத்து வேம்பு.
இரவில் இதுகூடச் சங்கீதம்.
விழிகளுக்குள்ளே வரமறுக்கிறது உறக்கம்.
எப்படிவரும்?
முடிசூடி உலாவரும் நினைப்பில்
தலை நிமிர்த்தி நடந்த வீதிகளின்றி,
எனக்குன் மேனி சொந்தமென்ற மகிழ்வில்
புரட்டியெடுத்த வயல்களின்றி,
பொங்கிப் படைத்துக் கும்பிட்டு நின்ற
பெருமாட்டியின் திருவாசல் தரிசனமற்று,
சுரந்தூறிவரும் அமுதக் கரைசலை
அள்ளிக் குடிக்கக் கிணறுகளற்று
எத்தனை நாள் துயருற்றிருப்பேன்?
மார்கழி மழையை,
தைமாதப் பனியை,
பங்குனி வெய்யிலை,
வைகாசி மாதத்து வசந்தத்தை
என் வீட்டு முற்றத்தில்
காண்பதே இனிமை.*

• புதுவை இரத்தினதுரை

இரவுக் குருவியே!
ஒரு எக்கு எக்கி எழும்பு.
கடற்சுவர் தாண்டி
கச்சாயில் போயிறங்கு.
அப்பால் நடந்து
செம்மணி கடந்து
நல்லூரைச் சென்றடைவாய்.
வள்ளி மணாளனின்
வாசல் வணங்கி
தேர்வீதி வலம்வரும் போது
மேற்கு வீதியால்
திரும்பி நேரே செல்.
மங்கல நாயகி மனோன்மணி அம்மன்
சட்டவிளக்கில் முகமொளிரத் தனித்திருப்பாள்
கும்பிட்டுத் திரும்பு.
மூடிச் சாந்திட்ட கிணறிருக்கும்
அருகில் ஒழுங்கையொன்று
உள்ளே போவெனத் தள்ளும்
உள்ளே போ.
இரும்புப் படலையா?
அதையும் திற.
வாசலில் செவ்வரத்தை வரவேற்கும்.
நிமிர்ந்து பார்.
"என்னைப் பார்
என் கண்ணைப்பார்" என்று
கண்ணூறு கழிக்கும் படமொன்று தொங்கும்.
அந்த வீடுதான்.
இரவுக் குருவியே!
விரைவில் வருவேனென
என் வீட்டுக்குச் சொல்லி வருக!
□□

வெளிச்சம்
பங்குனி 1997

# நரகத்துழலல்

ஊருக்குப் போனவை ஒவ்வொன்றாய்த் திரும்பின.
ஒப்பாரிவைத்தபடி ஓடிவந்தது காற்று.
வழிமறித்து ஏனென்றேன்.
என்னால் முடியாது இனிப்படமுடியாதென்று
கேவி அழுதழுது தலையிலடித்தது.
நேற்று, போறேனெனச் சொல்லிப் பறந்த காகம்
கத்தியபடி முற்றத்தே வந்திருந்து
நெடுமூச் செறிந்தது.
ஏன் போகவில்லையா? என்றேன்.

முகத்தைத் தொங்கப் போட்டபடி
போனேன்; வந்து விட்டேனென்றது.
இரவு முற்றத்தில்
நிலவு வந்திருந்து அழுதது.
நிமிர்ந்து பார்த்தேன்.
எடுத்த 'பாஸ்'சைக் கிழித்தெறி
எதற்குப் போகிறாய் அங்கென்று கொதித்தது.
ஏனென்றேன்.
எல்லாமே பொய் சுத்தப் பம்மாத்து
அங்கே போனவர்கள் அகப்பட்டுக் கொண்டனர்.
அவரவர் வீட்டில் சிறையிருக்கின்றனர்.
தோளில் காவடியுடன் சுற்றம்.
நீளக்கயிற்றிற்கட்டி ஆடவிட்டுள்ளான் அவன்.
எல்லோரும் மூச்சுவிடும் பிணங்களாக,
விலங்குகளற்ற கைதிகளாக
மின்சாரத்தில் மினுங்குகின்றனர்.
வயிற்றுக்குச் சோறும்
வாகனத்துக்குப் பெற்றோலும் உண்டெனினும்
வேலியைக் கறையான் அரிக்கும் சத்தத்துக்கே
மிரண்டு
முகம் வெளிறி
வேண்டாம் நரகம்.
□□

வெளிச்சம்
வைகாசி 1997

# முகம் கொள்ளல்

*கண்ணீரில் கரைவதே வாழ்வென*
*எவரெழுதினார் எம்தலையில்?*
*அந்தரித்துப் போகுமெம் நாளாந்தத்துக்கு*
*யார்தான் பொறுப்பு?*
*எமக்கு சோளகமுலுப்பும் மரங்களென*
*வேரையறுக்கும் வேதனையும்,*
*காலாறமுடியாத கலைப்பும்*
*அடி விழுகிறது முதுகில்.*
*தோலுரிந்துபோக ரணமாச்சு மேனி.*

*மீண்டும் தொடர்ந்து அடி.*
*புண்ணே புண்ணாகி*
*தாங்க முடியவில்லையே சாமி.*
*"ஊர்ந்துபோகும் உயிருக்கும் ஊறுசெய்யாதே" என*
*வேதாந்தம் பேசும் வெள்ளரசிற்தான்*
*தமிழன் தொங்கவிடப்படுகின்றான்.*
*தப்புவதற்காயினும் திருப்பித் தாக்கலாமெனில்*
*வன்முறையாகாது என வசனம் பேசுகின்றன*
*மனித உரிமைகளின் வாய்கள்.*
*நொந்தறியாதவர்களுக்கு எம்பாடு புரியாது.*
*குருதி சொரிவது பாவகாரியமாம்*
*சமாதானமே சந்தோஷமெனச் சொல்லப்படுகிறது.*
*எவர் மறுத்தல் கூடும் இதை.*
*புதைகுழி விளிம்பில் ஒரு இனம்.*
*மரணக்குழியிருந்து மீள உயிர்க்கூடொன்று நிமிர்கிறது.*
*இது எப்படிப் பிழையாகும்?*
*பூதகி பாலூட்ட வரும்போது*
*முலையறுத்தல் வன்முறையானதா?*
*பதில் சொல்லுங்களேன்.*
*முகமூடிக்குள் இன்னும் எத்தனை நாட்களுக்குத்தான்*
*முகத்தை மறைப்பீர்கள்?*
□□

*வெளிச்சம்*
*ஆடி 1997*

# சாமானியன் ஞானம்பெற்ற ஒரு சாமப்பொழுது

*வெடிக்கும் எறிகணைகள் ஒவ்வொன்றுக்கும்
விரல் மடித்துக் கணக்கெடுத்தபடி இருந்தேன்.
இடையிற் கண்ணயர்ந்து போனேன்.
விழிப்புற்ற போதும்
வந்து வெடித்தன குண்டுகள்.
மீண்டும் எண்ணத் தொடங்கினேன்.
இடையிற் சிரிப்பு வந்தது, சிரித்தேன்.
விளையாட்டாகிவிட்டது யுத்தம்.
கொல்ல எய்யும் கணைகளைக்கூட
எண்ணிக் கணக்கெடுத்தேற்கும் ஒருவாழ்வு.
முற்றத்தில் நான்,
விறாந்தையில் பிள்ளைகள்,
அறைக்குள்ளே மனைவி.
என்னையும் நாயையும் தவிர
எல்லோரையும் தூக்கம் சுகம் கேட்கிறது.
பதுங்குகுழி பாழடைந்து கிடக்கிறது
வெட்டியவன் வெட்டியபோது இறங்கியதுதான்.
ஒதுங்கிக் கொண்டவனுக்குத்தானே பதுங்குகுழி.
ஏற்றுக் கொண்டாச்சு இனியெதற்குக் குழி?
நேரம் என்னவாயிருக்கும்?
சாமம் கடந்திருக்கும்.
சிவராத்திரிகூட ஒரு ராத்திரிதான்*

*எமக்கு மட்டும் விழிப்பு வருடம் முழுதும்.*
*படுக்கும்போது மனைவியிடம் கேட்டேன்*
*சத்தம் கிட்டவாய்க் கேட்டாற் தட்டியெழுப்பவா? என்று.*
*வேண்டாம் அதுவிழாது.*
*வெள்ளிக்கிழமை விரதத்தின் நம்பிக்கை*
*வார்த்தையில் தொனித்தது.*
*நம்பிக்கையே*
*அசைவின் அச்சாணி.*
*பிடிமானத்தின் பெரும்பொருள்.*
*நம்பிக்கையற்றுப் போகுமெனில்*
*இருட்டு விலகாது.*
*திட்டுத் திட்டாய்*
*இறுகிக் கிடக்கும் அன்றாடம்.*
*குறுகித் தலைகுனியும் வீரம்.*
*குண்டு விழாதெனும் நம்பிக்கையில்*
*ஆனந்த சயனம் அவளுக்கு.*
*விழுமெனும் எண்ணத்தில் எனக்கு விழிப்பு.*
*அப்பாடா விடிந்து வருகிறது.*
*இரவு எத்தனை குண்டுகள்?*
*என்றாள் மனைவி.*
*எழுந்தமானத்தில் எழுபது என்றேன்.*
*நேற்று?*
*எண்பது.*
*ஏன் பத்துக் குறைந்தது? என்றாள்.*
*நெடுங்கேணியிற்தான் நிற்கிறான் கேட்டுப்பார்.*
*"விரைவில் கேட்காமலா விடுவோம்?"*
*நம்பிக்கை மீண்டும் எட்டிப்பார்த்தது.*
*நம்பிக்கையே*
*அசைவின் அச்சாணி.*
*பிடிமானத்தின் பெரும் பொருள்.*
□□

*வெளிச்சம்*
*ஆடி 1997*

# ஊமையானது கோயில் மணி
# உறைக்குள்ளே போனது நாதஸ்வரம்

*இது என்ன சிறையிருத்தல்.*
*அசோகவனத்துச் சீதையென*
*அரக்கரிடையே இன்னும் எத்தனை நாட்கள்?*
*பேய்களுக்கும் புன்னகைத்துப் போகும் ஒப்பனை.*
*பறக்கமுடியாமல் இறக்கை வெட்டப்பட்டு*
*கூண்டுக்குள்ளேயே குடியிருப்பு.*
*பகலில் பார்த்துப்பார்த்து நடுங்கியபடி,*
*வெளியே ஓரிரு அடிகளேவைத்து,*

*இரவானதும் கதவிலே காதைச்சொருகி*
*காத்திருப்பு.*
*சப்பாத்துச் சத்தமே சங்கீதமாகி*
*நாய்குரைக்க குருதியுறைந்து*
*வாயுமுலர்ந்து போக*
*இது என்னவதை?*
*பேசமறந்து ஊமையானது கோயில்மணி.*
*நாலுமணியுடன் உறைக்குள்ளே போனது நாதஸ்வரம்.*
*உள்வீதியுடன் உற்சவம் முடிய*
*நேரத்துடனேயே அர்த்தஜாமப் பூசை.*
*எனக்கு மட்டும் ஏன் சோலியென்று*
*கடவுளும் கண்டுகொள்வதில்லை.*
*அடுத்தநாள் கதவு திறக்கும்வரை*
*எம்பிரானும் வெளியே வருவதில்லை.*
*காலையில்*
*சோடிப்புறா வேலைக்குப் புறப்படும்.*
*தாலியைக் கண்ணிலொற்றி*
*வழியனுப்பும் மற்றப்புறா.*
*மாலையில்*
*வருவேனென்று சொல்லிப்போக என்ன உத்தரவாதம்?*
*அரும்பொட்டுச் சீவியம்.*
*கல்லூரி வாசலில் வீட்டுக்கிழம் காத்திருக்கும்*
*பள்ளி முடிந்ததும் பேரப்பிள்ளையை கூட்டிச்செல்ல.*
*அடுத்த 'கிரிசாந்தி' யாரென்று*
*யாருக்குத் தெரியும்?*
*எவரெனினும் ஏளனம் செய்து போகட்டும்*
*பரவாயில்லை.*
*இதுகாலவரை*
*வேலிகளால் சுற்றி வளைக்கப்பட்ட வளவுக்குள்*
*மட்டுப்படுத்தப்பட்ட வாழ்விலொரு மகிழ்விருந்தது.*
*போலி ஆசாரங்களாயினும்*
*ஊசிப்போன உறவுகளாயினும்*
*வாழ்வு உன்னதமாக நெடிதுயர்ந்திருந்தது.*
*செத்தவீடு,*




காடாத்து,
எட்டுச்செலவு,
அந்திரட்டி,
ஆண்டுத்திவசமென
சோகத்தையும் சேர்ந்தனுபவிக்கும் முறைமைக்குள்
முழுமை பெற்றிருந்தது ஜீவிதம்
எல்லாமும் கைநழுவிப் போச்சே.
உச்சிவெய்யிலில் துடிக்கும் புழுபோல
இப்போ அந்தரிப்புக்குள்ளானது நாளாந்தம்.
முன்னரெனில்
இரவிலும், ஏமச்சாமத்திலும்
சின்னம்மன்கோவிற் திருவிழா பார்த்து
வீடு திரும்பலாம்.
வீதியில் வெளிச்சமிருக்காது
எனினும் அச்சமிருக்காது.
இன்று
வீதியில் மட்டுமா
வீட்டிலிருக்கவும் பயம்.
கதவு தட்டப்படுமென்ற அச்சத்தில்
தூக்கமின்றிக் கழிகிறது நாட்கள்.
□□



ஈழநாடு
ஆடி 1997

● புதுவை இரத்தினதுரை

# விடுதலை

எமக்குவேண்டும் விடுதலை என்றதும்
என்னது? அதன்உட்பொருள் யாதெனச்
சுமக்கவேண்டிய சுதந்திரம் அறிகிலார்
சுதந்திரத்தை எங்கெலாம் தேடுறார்.
சிவக்கும் வைகறை வானத்தில் ஒளியெனச்
சிரிப்பதான நிலையது விடுதலை.
தமக்குவேண்டிய தனைத்தும் தான்பெறும்
சக்திகைவரல் விடுதலை என்பதாம்.

சிறகுவிரித்ததோ வானத்தில் ஏறியோர்
சிட்டுக்குருவி பறக்குதே அதுவிடுதலை.
உறவுகூடிச்சிற் றெறும்புகள் அணிவகுத்து
ஊருகின்றன வேயது விடுதலை.
இறைமையோடுநான் நானென இருந்திடும்
இருப்பு என்பதே விடுதலை எனப்படும்.
வறுமை வந்துறும் போதுமின் னொருவனின்
வாசல்நின்றிடா வாழ்வதே விடுதலை.

இரவுநேரம் பொன்வண்டொன்று பாடிடும்
இசைக்குள்ளி ருப்பதே விடுதலையென்பதாம்.
பரவுகின்ற காற்றதைப் போலொரு
பணிதலற்ற தன்மையே விடுதலை.
வரவுவைத்திட வரிசையாய் நகர்ந்திடும்
வாழ்விலாததோர் பெருமிதம் விடுதலை.
மரபுதித்தன மண்ணிலே மரபுடன்
மாண்புறுதலே விடுதலை யாகுமாம்.
□□

வெளிச்சம்
புரட்டாதி 1997

# இளமை

புன்னகை ஏந்திடா முகங்களை மறந்து
பூக்களைக் காதல்செய் மனிதா!
புல்லாங் குழலதின் வாயிலுன் இதழ்களைப்
பொருத்தியே இன்புறு மனிதா!
மன்னரென் றாகிடும் கனவினைத் தொலைத்து
மக்களை உறவுகொள் மனிதா!
மரங்கொடி வயல்களின் அழகினை மாந்தி
மனதினை இளமைசெய் மனிதா!

சலிப்புறும் வாழ்வினைப் புதுப்பொலிவாக்கிச்
சந்தனம் பூசலாம் வருக.
சாவரும் நாளினிற் சாகலாம்; அதுவரை
சந்தோஷம் கொள்ளலாம் வருக.
சிலிர்ப்புறும்படி மனம் திகழ்வுற, வாழ்வினைச்
செதுக்கலாம் வெளியினில் வருக.
சிறகினை விரித்துவான் திசையெலாம் பறந்து
திரியலாம்; சிரிக்கலாம் வருக.

இரவினிற் சூரியன் எழும்படி புதுவிதி
இயற்றவும் இயலுமென் றறிவோம்.
இனிவரும் நாட்களில் மழையினை வேண்டிய
இடங்களிற் பொழிந்திடப் பணிப்போம்.
மரங்களை நடந்திடச் செய்யலாம்; இவையெலாம்
மனிதனால் முடியுமென் றறிவோம்.
மதங்களை மட்டுமா நம்பினாய்? மானுடம்
மாபெரும் சக்தியென் றுரைப்போம்.
□□

வெளிச்சம்
மார்கழி 1997

• புதுவை இரத்தினதுரை

# பூக்கும் மனசு

இலை சொரியத் தொடங்கிறது இலுப்பைமரம்.
புதிய தளிர்
கலையுடுத்து நாளை கன்னியெழிற் கோலமதாய்
அழகொளிரும்,
பூக்கும்,
அதன் பிறகு காய்க்கும்,
பின் பழம் சொரியும்.
இப்போவென் படலையிலே உள்ள மரம்
ஆடை அவிழ்த்துதறி அழகாய்ப் புதிதுடுக்கும்.
கோடை வறுத்தெடுக்கக் குளிர்விக்கும்.
என் வீட்டு முற்றத்தெழுந்தமரம் முறுவலிக்கும்.
நானந்த
அற்புதத்தைக் காணா அழியும் விதியென் கொல்?
மூக்குத்திப் பூக்கள் மின்னும் கிளையிருந்து
தூக்கம் கலைத்து என்னைத் தொட்டெழுப்பும் குயிலினத்தின்
மாயக்குரலிலென்ன மந்திரம்தான் உள்ளதுவோ?
தாயாயெனைத் தழுவித் தம்பீ என மதுர
சொல்லாலென் காதுச் சோணையிலே உரசிவிட்டு
செல்லும் என்வீட்டுத் தென்றலுக்காய் ஏங்குகின்றேன்.
இடருருவிக் கிடக்கும் என்னை
இப்போ வந்(து)
எவர் தடவியென்ன என்மேனி ஆறாது.
வேண்டும் என்வீட்டு விருட்சம்.
அதனடியில்
ஆண்டிருந்ததனைத்தும் அடியேன் பெறவேண்டும்.
□□

வெளிச்சம்
தை - மாசி 1998

# துரத்திவரும் இரவு

இரவுப் பெண் எழிலென
எல்லோரும் எழுதுகின்றனர்.
நிலம் தபசியற்றும் நிசிப்பொழுது அழகெனப்
பாடாதார் எவர்?
அழகின் சிகரம் இரவெனச் சொல்லி
எழுதுதல் இலகு.
இரவுக்குள் வாழ்தல் எத்தனைசுமை?
வந்தணைக்கும் காற்று,
மோனத் தவமியற்றும் மரங்கள்,
பனிநீராடிய வயல்கள்,
சில்வண்டின் ரீங்காரம்,
பேரமைதி
அழகென்றுதானிருந்தேன் நானும்.
நேற்றிரவு
கூவிவந்தென் கூரைதடவி எதிர்வீட்டில்
வெடித்ததிர்ந்தது எறிகணை.
தூரத்திருந்து ஏவியபின் தூங்கியிருப்பான் பாவி
இங்கு ஏதுமறியாது துடித்தது குடிசை.
ஓலமிட்டது.
அச்சத்தில் உறைந்துபோன அயல் ஓடிவந்தபோது
எல்லாம் முடிந்திருந்தது.
உயிரடங்கிக் கிடந்தன பூவும், வேரும்.
இரவு வயற்காவலுக்குப் போன தந்தையே எஞ்ச்
தாயும் மகளும் அடங்கிப் போயினர்.
மகளெனப்படுவது எட்டகவைகண்ட சிறுபூ.
தாயெனப்படுவது யாதெனில்
இளமை மெருகு குலையா ஒருத்தி.
தலையிலடித்தபடி வந்தான் கணவன்.
குவிந்துகிடந்த சிதிலத்தைக் கட்டிக் குழறினான்.

புரண்டேதேதோ பிதற்றினான்.
சாபமிட்டான்.
பின் மூர்ச்சித்துக் கிடந்தான் மூலையில்.
பின்னரெலாம் வழமையென வரிசை கொண்டன.
கூட்டியள்ளியதற்குக் கொள்ளிவைத்து
மொட்டையடித்து முழுகியதும்
வழமைக்குத் திரும்பியது ஊர்.
குண்டதிர்ந்தது பகலெனில் அந்தரம் குறைவு.
ஏவுகுழலோடு அண்மித்ததாய் ஆக்கிரமிப்பு.
அதற்குள்ளேயே ஜீவிதமென்றான பின்பு
இரவு என்னைப் பாடாய்ப் படுத்துகிறது.
காலமினிப் பகலாய்க் கழியாதோ?
இரவு கலைக்கிறது.
அந்தியானதும் அச்சமும் கவிகிறது.
உன் வீட்டுக் கூரையிலும் இடிவிழுமென
அந்தராத்மா அடிக்கடி எச்சரிக்கிறது.
ஊரின் அழகு இரவில் உன்னதமென்று
எட்டயிருந்தெவரும் எழுதலாம், பாடலாம்.
வார்த்தைக் களிமண்ணால் வடிவான சிலையொன்றை
கவிதையென நேர்த்தியாய் வடிக்கலாம்.
பார்த்துக் களிக்கலாம்.
வல்லிபுரக் கோயிலுக்கு வண்டிகட்டிச் சென்ற
நினைவுகளை,
நிலாக்கால இரவுகளை
சொல்லி மகிழ்தல் சுகமான சொறிவு.
இன்று நெருப்புக்குள்ளே நீச்சலடிக்கிறது ஊர்.
இரவு வந்தெம்மை இடிக்கிறது.
பகலும்தான்.
கழிந்துபோன நிலவிரவுகளும்,
கவிதைகளும், தூரவிலக
துரத்திவருகிறது இரவு.
□□

வெளிச்சம்
தை - மாசி 1998

# தாய் மண்

*ஊரெல்லாம் தீயில் உழன்றன எனினும்*
*உயர்ந்தன தமிழரின் தலைகள்.*
*வேரறுந்தாடி விழுந்தன மரங்கள்*
*வியப்புறும்படி அடி மண்ணிற்*
*பீறின தளிர்கள்; பொசுங்கிய தனைத்தும்*
*பூத்தன; தீயின்வா யுண்டு*
*நீறின யாவும் நிமிர்ந்தன; பசிய*
*நிலமென வானது தாய்மண்.*
□

மரந்தடி குடிசை வாழ்ந்திடும் போதும்
மனந்தள ராதவர் நெஞ்சிற்
சுரந்திடும் உரிமைச் சுனையினிலாடிச்
சுதந்திர தேவியைத் தொழுதார்.
இரந்தறி யாதோர் நிமிர்ந்தனர்; சாவை
எதிர்கொளக் கூடவே துணிந்தார்.
வரந்தர எந்தத் தேவதை கூட
வரவில்லை; ஆயினும் வென்றார்.
□
நோய்நொடி பெருகி நுடங்கிய போதும்
நொண்டிட வில்லையெம் கால்கள்.
பேய்களெம் ஊரிற் புகுந்தன வெனினும்
போர்முகத் தாடினர் புலிகள்.
காயொடு பூவும் களத்திடை வரிசை
கண்டன; கனன்றன விழிகள்.
தாய்நிலம் வீரச் சரித்திர மெழுதச்
சத்தியம் வென்றது இன்று.
□
பாதை மீதேறிப் பரவியே வந்த
பகைவரைத் தடுத்தனர் புதல்வர்.
சீதளக் காற்றிற் தீயெழ வந்தோர்
திகைத்திடப் பொருதனர் மகளிர்.
பூதலம் வியந்து போனது; வீரம்
புலர்ந்திட நின்றது தாய்மண்.
மாதவம் செய்த மண்ணடா; அள்ளி
மார்பினிற் பூசடா தமிழா.
□□

வெளிச்சம்
பங்குனி - வைகாசி 1998

# பகைவரும் ஊர்திகள்
# யாவுமெரியப்
# பலம்தருக

*சூரிய தேவே! கோடி நமஸ்காரம்.*
*வைகறைவேளை*
*ஆழிக்கரையமர்ந்து உன்பாதக்கமலம் தொழுது*
*ஆயிரம் புஷ்பாஞ்சலி செய்தேன் ஆதவனே.*
*அக்கினித் தகிப்படக்கி*
*உன் செஞ்சுடர்க் கரங்கள் வீசி*
*என் தேசம் மீதில் இனி இரவிலும் சுடர்க.*

வேரடங்கா வீரியனே!
உன் தேரிழுக்கும் குதிரைகளுக்குத் தாகமெழும் போதில்
இரணைமடுக்குளத்தருகே அவிழ்த்து விடுக
நுரைவாய் அடங்க நீரருந்தட்டும்.
அருகே காவலரணில் எம் பிள்ளைகளுள்ளார்.
அசுவமூச்சு அவர்களைத் தழுவி
போரிடும் வீச்சுப் பெருகட்டும்.
கதிரவனே!
நீயும் களைப்புற்றிருப்பாயெனிற் தேர்விட்டிறங்குக.
கனகாம்பிகையம்மன் கோயில் மருங்கில்
நிழல் விரித்துள்ள ஆலமரத்தின் கீழே
காலாற அமரலாம் வருக.
மின்னலடிக்குமுன் திருமுடி ஜொலிப்பில்
போரிடும் பிள்ளைகளுக்கு வீரியம் பெருகட்டும்.
தேவரீர்! சிறு விண்ணப்பம்.
என் முந்தைய தலைமுறையின் மூத்தோன்
ஒரு ருஷ்ய கவிஞன்
உன்னைத் தேநீர் விருந்துக்கழைத்தான்.
நான் கூழருந்தக் கூப்பிடுகிறேன் வருக.
நாளாந்தமுன் தேருருளும் திசையிற் செல்லும்போது
மேலிருந்தவாறு என் தேசத்தை மேய்ந்திருப்பாய்.
இன்று கீழிறங்கி வருக.
கண்டி வீதியில் ஒருமுறை கால்பதிக்க.
எம் பிள்ளைகளுலவும் பெருந்தெருவில்
வந்திறங்கி வலிமை தருக.
உலகாளும் முதல்வனே ஒருமுறை வருக.
களமாடும் அக்கினிக்குஞ்சுகளை உன் கரம் தழுவிப்
பலமுற அருள் தருக.
திருவாய் மலர்ந்தேனோ சிரிக்கின்றாய்
பெருமானே இதன் பொருள்யாதோ?
சூரிய தேவே!
உலைமுகத்து இரும்பென உருகி
நீர்முழுகி
உருக்கெனவானவர் எம்பிள்ளைகள்.

*வென்றிட வாழ்த்துக வெய்யோனே.*
*உன் கண்ணின் ஒளிபரவி நிமிர*
*தேரை இறக்குக எம்தெருவில்.*
*நீயும் இறங்குக.*
*பகைவரும் ஊர்திகள் யாவுமெரியப் பலம்தருக.*
*உள்ளே புகுமெதிரி உடல்கள் சிதறி*
*மரங்களுக்கு "உரமாகிப்போகக் கடவது" என்றோர்*
*அசரீரி எழுக.*
*எம் பிள்ளைகளுக்கு மேனிவியர்க்கும் போதில்*
*ஒத்தியெடுக்க உன் உத்தரியம் தருக.*
*பெரிய தெய்வமே!*
*இனியுமா எரியுமெம் தேசம்?*
*இல்லையென்றொரு வாய்மொழி நல்குக.*
*இரணை மடுவருகே இருப்பேன்*
*கூழுக்கழைத்த புலவனைத் தரிசிக்க*
*தேரைக் கீழிறக்குக.*
*வென்றகளிப்பிற் பிள்ளைகளும் இருப்பர்*
*கண்டு மகிழலாம் வருக.*
*கட்டாயம்.*
□□

*வெளிச்சம்*
*பங்குனி - வைகாசி 1998*

# பொச்சம்

*இந்நேரம் என்வீட்டின் தென்னந்தோப்பில்*
*இளங்காற்று விளையாடும்; இரவுப் பூச்சி*
*சங்கீதம் அரங்கேற்றும்; அதனைக் கேட்டுச்*
*சடைத்தபெரு வேப்பமரம் தலையை ஆட்டும்;*
*செங்காரி இளநாம்பன் இரையை மீட்டித்*
*தினவெடுக்கும்; எனைப்பெற்ற கிழடு ரண்டும்*
*வந்தானா? வருவானா? எனத் துடித்து*
*வாசலிலே விழிவைத்துப் பழிகிடக்கும்.*
□




*ஊர்வீதி வெறிச்சோடிக் கிடக்கும்; பார்க்க*
*ஒருவரின்றி ஊர்வெளியில் நிலவு காயும்.*
*நீர்வேலிக் கப்பாலே நீளும் என்னூர்*
*நித்திரைக்கும் போயிருக்கும்; என்னைத் தூக்கி*
*மார்மேலே போட்டுலவித் தூங்கச் செய்த*
*மணிவயிறு நானின்றிப் பசி கிடக்கும்.*
*தேர்பூட்டி வாகதிரே! விடிவை எந்தன்*
*தேசமதிற் படரவிடு இருளோ டட்டும்.*
□
*கால்கொண்டு நடந்திட்ட ஊரும்; என்னைக்*
*கருக்கொண்டு சுமந்திட்ட தாயும்; கையில்*
*வேல் கொண்ட பேய்களிடம் விழுந்த பின்னர்*
*வெளியேறி ஊரூராய் நாயாய் ஓடி*
*வாழ்கின்றேன்; எனக்கென்னூர் திரும்பிச் செல்லும்*
*வழிவேண்டும்; நல்லூரின் வாசல் வேண்டும்;*
*நீள்கின்ற இரவகன்று என்னூர் சென்று*
*நிமிர்கின்ற நிலைவேண்டும் அருள்க தேவே.*
□□

*வெளிச்சம்*
*ஆனி - ஆவணி 1998*

# குரலெதுவும் கேளாத அந்தப் பெருவெளியில்

நாயன்மார்க்கட்டுக்கும்
நாவற்குழிப் பாலத்துக்குமிடையில்
நிலவு நிர்வாணமாகி முழுகும் நாளில்
செம்மணி சந்தனம் பூசி
சாமவிரிப்பில் காற்றைப் புணரும்.
வரவேற்பு வளைவின் கீழே
யாருமற்ற ராவிலும்
நுழைவாயிற் பிள்ளையார் காவலிருப்பார்.
அவலக் குரலெடுத்துக் கத்தும் ஆட்காட்டி.
வளைவிட்டு வெளியேறி வந்து

*விளையாடும் சிறுநண்டு.*
*உயிரணையும் ஒளியுமிழும் லாந்தர்*
*கிடாய்ப் பீஜமெனக் கீழேயாடக்*
*கிடுகேற்றி வரும் வண்டில்கள்.*
*சாக்கால் போர்த்திய சாரதியின் காத்தான்பாட்டு*
*ஊரெல்லைவரை வந்து உரசிப்போகும்.*
*எந்த நேரமும் தணல்பூத்துக் கிடக்கும்*
*அந்தச் சுடலை,*
*உப்புநீரிலவிந்த சாதாளை வெடில்*
*குப்பென்று மூக்கிலடிக்கும்.*
*எல்லாவற்றையும் ஏற்றந்தத் தெரு*
*தனியாகத் தபசியற்றும்.*
*இரவானால் எவருமிரார்.*
*ஓரிருவர் போவர் வருவர்*
*அவர்களும் அம்புருவும் வேகத்தில்.*
*ஊசிபோலேறும் மார்கழியிரவில்*
*வீசும் காற்றுமட்டும் பேசும்.*
*எட்டுமணிக்குள்ளே எல்லாமடங்கி*
*வீதி வெறிச்சோடிவிடும்.*
*இரவானால்*
*எவரையும் கொல்லவும், புதைக்கவும்*
*செம்மணியே சிறந்த இடம்.*
*கொல்களத்தின் குரலெதுவும் கேளாது*
*அந்தப் பெருவெளியில் அடங்கிவிடும்.*
*குழிவெட்டிப் புதைக்கவும் இலகு.*
*நாலு வெட்டு வெட்டினால்*
*நானூறுபேரைப் புதைக்கக்கூடிய*
*ஆழக்குழிவரும் ஈரப்பதம்.*
*செம்மணியைத் தெரிவு செய்தவனுக்கு*
*வீரப்பதக்கம் வழங்கலாம்.*
*சரியான தேர்வு.*
*அவர்களுக்கென்ன அடக்கம்முடித்த அசதி மட்டுந்தான்.*
*எங்களுக்குத்தான்*
*உறவுநூலிழை அறுந்த துயரம்.*

கொன்றுகொன்று வந்து புதைத்தபோது
கண்டிருப்பாய் காற்றே.
என்ன நடந்தது?
சிறுநண்டே! உனக்குத் தெரிந்திருக்கும்.
யார் யாரைப் புதைத்தார்கள் இங்கு?
வானத்திலிருந்தாயா நிலவே
ஏனெம் உறவுகளை இடுகுழியிட்டார்?
உள்ளே கொதிப்புறும் ஒருவன் கேட்கிறேன்.
சொல்லுங்கள் ஏன் புதைத்தார்?
வில்லங்கம் ஏனென்று நீங்களும் விடுவீரானால்
எல்லோரும் சேர்ந்து இதையும் மறைத்துவிட்டு
நல்லோராய் மீண்டும் நடமாடித் திரிவார்.
சொல்லுங்கள்.
எங்கு புதைத்தார்கள்?
எவரெவரைப் புதைத்தார்கள்?
என்னசெய்து புதைத்தார்கள்?
காற்றையும் ஆற்றப்படுத்தவல்ல கவிஞர்களே!
'வானம்பாடி'க்கு வரியெழுதி அனுப்புகின்ற
பென்னம்பெரிய புலவீரே!
துயிலெழும்பித் தொலைக்காதீர்
இன்னும் கண்வளர்வீர்.
அந்தரப்பட்டு அடித்தெழும்பித்தான்
என்னகாணும் ஆகும்?
நெடிய தூக்கத்திலிருந்து நீரெழும்பி
என்னகாணும் பண்ணுவீர்?
கவிதை எழுதுவீர்.
அவ்வளவுதானே.
அதற்கிப்போ என்ன அவசரம்?
எம்மால் முடிந்தது இவ்வளவுதானென்று
உரித்துக் காட்டிவிடாதீர்.
சிரிக்கும் உலகம்.
'செம்மணியில் நானூறு புதைகுழிகள்'
கவிதைக்குக் கருக்கிடைத்துவிட்டது.
ஊரடங்க வாழ்வும் உவப்பானது

எழுதத் தொடங்கிவிடுவீர்.
ஐயா சாமிகளே அவர்களை விட்டுவிடும்.
புதைந்தவர்கள் புதைந்தவர்களாகவே போகட்டும்.
தோண்டியெடுத்துங்கள் போலிக்கவிதைகளைப் போர்த்தி
மீண்டும் புதைக்காதீர்.
கவிதைக்கா்ரர்களே!
கையிற் காற்சிலம்புடன்
மதுரையெரித்தவளுக்கிருந்த மாகோபத்துடன்
முதலில் வீதியில் இறங்குங்கள்.
மண்வெட்டி பிக்கானுடன் தரவையைக் கிளறுங்கள்.
ரவைகளுக்குப் பயந்து இரவுகளுக்குள் ஒழிக்கும்
வாழ்வையுடைத்துத் தெருவில் இறங்குங்கள்.
கம்பிவேலிகளும் சென்றிகளும் சிதற
செம்மணித்தெருவை நிறையுங்கள்.
புதைகுழிக்கானது கவிதைதானெனில்
அதை முதலிற் தீயிடுங்கள்.
ஆட்காட்டிப் புள்ளே! கவிஞர்கள் வருவர்.
கூப்பாடு போட்டபடி ஒரு கூட்டமே வரும்.
அசுர விரிப்பை எரித்தபடி
விரைந்துவரும் கும்பல்.
புதைத்த இடங்களைக்காட்டு; தோண்டட்டும்.
கவிதைமட்டுமே இயலுமெனக் கூறில்
பாடவிடு
அவர்கள் பாடித் தொலைக்கட்டும்.
□□

வெளிச்சம்
ஆனி - ஆவணி 1998

## சுகம்

ஏரி நிமிர்த்தியும்
எடுத்துவைக்கும் காலடிப் புழுதி பரத்தியும்
நடக்கின்றன நாம்பன்கள்.
நிறைமடி சுரக்கும் நினைவுடன்
பாடி மீள்கின்றன பசுக்கள்.
துள்ளிக் குதித்து வருகின்றன கன்றுகள்.
மீண்டும் வீடுமீளும் பரவசத்துக்கு
ஏது நிகர்?

• புதுவை இரத்தினதுரை

ஒரு நாள்
மேய்ச்சலுக்காக வெளிக்கிட்ட காலைதான்
சுற்றிவளைத்து வழிமறித்து,
பிடித்துப் பட்டியடைக்கும் ஆவல்மீதுர,
கையில் கயிறுடன்,
கசாப்புக் கத்தியுடன்
மாடுபிடிப்போர் ஊர்புகுந்தனர்.
ஆநிரை யாவும் வெருண்டன.
கட்டறுத்தன.
விதிர்விதிர்த்துக் கலைந்தன.
எல்லாம் ஊர் பிரிந்தன.
கழுத்தில் எவர் கயிறும் படச்சகிக்கா
உளத்துடன் உருவின.
உள்ளே ஒன்றேனும் தங்காதகன்றன.
வெளியேறியும் இக்கால வெளியில்
எத்தனை வதையுண்டன இவை?
தீனிக்கு அலைந்தும்
மேய்ச்சல் நிலமற்று மெலிந்தும்
மடிவற்றிப் போயின மாடுகள்.
இரண்டு இலையுதிர்ப்புக்கு பின்னரின்று
மாடு பிடிப்போர் அடித்து விரட்டப்பட்டாரென
அறிந்தபோது ஆனந்தித்தன.
சந்தோஷம் வர்ஷிக்க
வெண்டயம் சப்திக்க
மாடுகள் ஓடிவருகின்றன ஊருக்கு.
தாய்வீட்டுத் தாழ்வாரம்
எத்தனை சுகம்.
□□

வெளிச்சம்
புரட்டாதி - கார்த்திகை 1998

# மீள்நடுகை அல்லது கிளிநொச்சி 1998

இந்தச் செம்புழுதித்தெரு
நேற்றுவரை மூடப்பட்டிருந்தது.
மீறியெவரும் உட்புக முனைந்ததுமில்லை.
சாக்கால் மறைப்புக்கட்டிய வீதிமுகப்பை
கடக்கும் ஒவ்வொரு தடவையும்,
'போமலின்' அடித்த பிணம்போல
தலை விறைக்கும்.
முள்ளந்தண்டு ஜில்லிட்டுப்போகும்.
'சினைப்பர்'த்துப்பாக்கி எந்நேரமும் துப்பும்
ஈயக் குண்டு எகிறிப்பாய்ந்து
எவருக்காயினும் சாவெழுதிப் போகும்.
மிதிவெடி விதைத்த வயலாக
நேற்றுவரைகிடந்த தெருவின் அந்தத்தில்
ஒரு கூப்பிடுதொலைவிற்தான் இருந்தான் யமன்.
தலைமுறிந்த மரங்களும்,
சன்னம் பீச்சித் தழும்பான சுவர்களும்,
எறிகணைச் சிதறல் நிறைந்த வளவுகளுமாக
நேற்றிது காடுமண்டிய வீதி.
இந்தச் சாலைமுழுதும் சாவு பரவியிருந்தது.
வீடு பார்க்க வந்த எவரும்
மீண்டு வரவேயில்லை.
என்னானார்களென எவருமறியாது
வந்தவர் திரும்பாதோராயினர்.
திடுமென எம்முன்வந்து குதிக்கும் எறிகணைக்கு
நிற்பவர் சிவலோகப்பதவி எட்டுவர்.
இன்று மலக்குழியிருந்து
வெள்ளெலும்புக் கூடுகள் சிலதும்

*உக்காத உள்ளாடைகளும் மீட்கப்பட்டதாம்.*
*காணாமற்போனோர் என்னானார்களென*
*கண்டு கொண்டோம்.*
*உயிரிழைத்துப் பின்னிய உறவறுத்து*
*இந்தத் தெருவாற்தான் ஒருநாள் வெளியேறினோம்.*
*எங்கேனும் தப்பிப் போவீரெனக் கண்ணீர்மல்க*
*பட்டிதிறந்தெம் பசுக்களைக் கலைத்து,*
*வளவு மூலையிலிருந்த வைரவருக்கு மலர்சாத்தி,*
*இந்தப் பரபரப்புள்ளும் காயாதிருக்க*
*முற்றத்துப் பூமரங்களுக்கு நீரூற்றி,*
*வீட்டுப் படலைக்கு முத்தமிட்டு,*
*"வருவோம் அதுவரை கவனம்" எனக் கையசைத்து*
*நிலவற்ற ஓரிராப்போதில் இத்தெரு பிரிந்தோம்.*
*மீண்டும் வந்துளோம் இன்று.*
*அழுதரற்றி வெளியேறிய தெருவில்*
*சிரித்தபடியுலவும் வாழ்வென்றாச்சு எமக்கு.*
*நீரிலூறியபாணென நெஞ்சூதிப் பூத்துளது.*
*பெற்றகடன் தீர்த்தாரெம் பிள்ளைகள்.*
*பேய்விரட்டல் எத்தனை பெரிது.*
*உயிர்கொடுத்தல்லவா இந்த மீட்பு?*
*பிள்ளைகளின் பச்சைக் குருதிமேற்தான்*
*இன்றெம் பாதங்கள்.*
*நிலம் படுமெம் கால்கள் கூசுகின்றன.*
*தொட்டுப் பொட்டிடக்கூடிய மண்ணிற்தான்*
*நிற்கிறோம்.*
*நேற்றுவரை இத்தெருகடந்து போகும்பொழுது*
*ஐயா என்றும்,*
*அம்மாவென்றும்,*
*அக்கா தங்கச்சியென்றும்*
*உயிர்தொட வாய்நிறைய உறவுரைத்து*
*எப்போதும் சிரித்தபடி*
*ஏழெட்டுப் போராளிகள் நிற்பர்.*
*இன்றவரைக் காணவில்லையே.*
*காவலுக்கு நின்ற 'ஊரெல்லை ஐயன்கள்'*
*வந்த பணிமுடித்தேகினர் போலும்.*




*இனி வேறெங்கேனும் ஊரெல்லையில் இருப்பராக்கும்.*
*மீட்புப் படலத்தை எழுதிய வீரனே!*
*எத்தனை சிரமமுற்றிருப்பாய்.*
*நிரைப்படுத்தி,*
*அஸ்திரப் பயிற்சியளித்து,*
*இவையிவை உம் இலக்கென வகுத்து,*
*பின்னே வருவன முன்னுரைத்து,*
*நெஞ்சுக்குள் நம்பிக்கை நாற்றங்கால் நாட்டி,*
*வகைப்படுத்தி வழிகாட்டி,*
*உள்ளே நுழைந்த பின்னும் எதிர்வந்த இடர்களைய*
*மதியூகமுரைத்து*
*பெரும் சிரமமுற்றிருப்பாய்.*
*மீண்டும் இத்தெருவிலெம்மைத் திரியவைத்தனை*
*நின்திசையிற் தலைசாய்த்தோம்.*
*மீட்புப் புறாக்களே! உமக்கெம் பணிதல்.*
*சாவெழுதும் வாழ்விருந்து தப்பி*
*நாம் அழுத விழிதுடைத்த மகிழ்விலுள்ளோம்.*
*பட்ட துயரும்,*
*விட்ட உயிரும்,*
*அருகிருந்து அனுபவித்த நாமன்றி*
*வேறு யாரறிவர் பராபரமே.*
*'யாரெனினும் உயிர்பெரிது*
*போராகாதென்று' புலத்திருந்து உரைப்போர்க்கு*
*இது புரியாது.*
*மீண்டும் மீண்டும் ஓடக்கலைத்தபோது*
*ஓடிய துயரமும்,*
*உண்டான வலியும்*
*இன்றழிந்து போக மகிழ்வின் சுகமறிந்தோம்.*
*மீண்டுமெமைத் துரத்தவிடலாகாதெனும்*
*சங்கல்பத்துடன் இந்தச் செம்புழுதித்தெருவில்*
*புகுந்தோம் நாம்.*
□□

*வெளிச்சம்*
*புரட்டாதி - கார்த்திகை 1998*

# உன்னைப்போல் நானும்

*பஞ்சுச் சிறகசைத்துப் பறக்கும்*
*என்னினிய*
*குஞ்சுப்புறாவே! நீ குதுகலமாய்த்திரிகின்றாய்.*
*வெண்முகிலைப்போல விளங்கும்*
*உன்னழகிற்*
*கண்மலர்ந்தேன்.*
*உனக்குக் காலிருந்தும் பறக்கின்றாய்.*

*என்னைப் பார்!*
*எனக்கு நடக்க எதுவுமில்லை.*
*வெண்சிறகை உனக்கு வெட்டிவிட யாருமிலர்.*
*என் காலையிங்கே*
*எடுத்துவிட்டார் பார்த்தாயா?*
*போர்மேகம் சூழ்ந்த பூமியிது.*
*நொடிப்பொழுதில்*
*யார் சாகக்கூடும்? யாருக்கும் தெரிவதில்லை.*
*உன்னைப்போல் யானும் ஒருஜீவன்*
*எனச் சொன்னால்*
*என்னைப்போல் நீயா*
*இருக்காதெனச் சொல்லி*
*சண்டைக்கிழுக்கின்றான்.*
*சமர்க்களமாய் எம்தேசம்*
*இன்றைக்கழிந்து இருக்கிறது.*
*எம் மண்ணில்*
*பூக்கள் அழகாகப் பூக்கும் நாள் எப்போது?*
*கூக்குரல்களின்றிக் குடியிருப்பதெக்காலம்?*
*குண்டுப்பறவை குதறாத நாளெப்போ?*
*சண்டை முடிந்ததென*
*சந்தோஷம் கொள்வதெப்போ?*
*ஆகாயத்தெழும்பி அசையும்*
*உன்னைப்போல்*
*தேகம் சிலிர்க்குமொரு சிறகசைப்பை வேண்டுகின்றோம்.*
*வேண்டுமொரு வாழ்வு.*
*விரிந்த மலர்களெல்லாம்*
*பூண்டழகாய்க் காலை புலருமொரு வாழ்வெமக்கு*
*வேண்டும்.*
*அதற்கான விலைகொடுப்பே நிகழ்காலம்.*
□□

*வெளிச்சம்*
*மார்கழி 1998 - தை 1999*

# இன்னுமில்லை எனக்கான நாட்கள்

*மீண்டும் இங்கே வசந்தம் விரிந்துளது.*
*பூக்களுக்கு இப்போ பிரச்சனையில்லை.*
*பிடுங்கலும்,*
*தடியெடுத்தடித்தலும்*
*வெகுவாகக் குறைந்துளது.*
*சில காம்பு கழன்று*
*தானாக விழுவதென்னவோ உண்மைதான்.*

அந்தப் பிழையும் மலர்களிலன்றி
காவலிலில்லை.
இடையிடையே நாய்பிடிகாரர் வருவதுண்டெனினும்
பதிவுசெய்த நாய்களுக்கு முழுப்பாதுகாப்பு.
அனுமதி பெறாதனமட்டும் அகப்படல் ஆபத்து.
மற்றும்படி எல்லாமே 'நோர்மல்'.
வீட்டிலடங்கினால் எந்த வில்லங்கமுமில்லை.
விளக்குச் சுடுமெனில்
விரலையேன் நீட்டவேண்டும்?
சோலியற்றிருப்பதே சுகமெனில்
எல்லாமே 'நோர்மல்'.
இப்போ புற்களும் வேர்பரவிப் பூரித்துள்ளன.
சாமந்திப் பூக்களுக்கே வாழ்வதிகம்.
கூடுவிட்டேகிய குருவிகளை வருகவென
எல்லோரும் எழுதுகின்றனர்.
சொல்லுக என் இராஜதெருவே!
ஊரின் நாடித்துடிப்பு
உன்னில் ஒழுங்காகத் துடிக்குமென்பதால்
இவர்கள் எழுதுவதனைத்திலும்
எவையெவை சத்தியம்
எத்தனை காலத்து வாழ்வுன்னில் அடக்கம்?
எவரெவர் காலடியிலெல்லாம் கிடந்தனை நீ?
முடிபுனைந்த காலத்தும்,
கொடிசரிந்த காலத்தும்
வாழ்வறிந்தவள் நீயொருத்தியே.
என் இராஜவீதியே!
பொய்புனையா வார்த்தையிற் பேசுக.
வரலாமா நானுன் வாசலுக்கிப்போ?
வந்துன்னை என்னிஷ்டம்போல
பிணைய இயலுமா பெருந்தெருவே?
தடுப்பாரின்றித் தழுவமுடியுமா?
'இராமசாமிப் பரியாரியார்சந்தி' கடந்தப்பால்
நீண்ட தோட்ட வெளியில்,
நிலவொளியில்

• புதுவை இரத்தினதுரை

*சாமத்திலும் வந்துன்னில் தவழமுடியுமா?*
*"ஏய்நில்" என்றென்னை அடக்குவாரின்றி*
*தாய்மடியுறங்கல் சாத்தியமா?*
*உண்டெனிற் சொல்லுக; என்பிரிய தெருவே!*
*ஓடிவந்துன்னில் அடைக்கலமாவேன்.*
*உனக்குத்தான் தெரியுமே*
*இறக்கை மடித்தோர் கிளையில்*
*இருத்தல் பிடிக்காது எனக்கு.*
*என் விசாலவிரிப்புக்கு இடையூறெதையும்*
*சகிக்கேன் யான்.*
*உங்கு என்னாற் பறக்க முடியுமா? என்றெழுது*
*உடன் பாய்ந்து வந்துன்னிற் பரவுவேன்.*
*என் விடுதலை அவாவின் விரிவுனக்குத் தெரியும்.*
*என்னை நானேயெழுதும் பழக்கமுடையேன்.*
*உயிரசைவின் இறுதிக் கணம்வரை*
*நானேதான் என்னை எழுதுவேன்.*
*அடங்கிப்போதலென் அகராதியில் இல்லையென*
*நீ அறிவாய்.*
*சேவகம் செய்தறியாப் பரம்பரையெனது.*
*சொல்லுக இப்போ.*
*என்னால் வரஇயலுமா உங்கு?*
*வந்தாலும் உயிர்தாங்கி வாழ இயலுமா?*
*நித்தம் தழுவி முத்தமிட்டு*
*கையணைப்பிற் கட்டுண்ட காதலியே!*
*சொல்லென் ராஜதெருவே.*
*ஏன் மௌனம் பூசுகிறாய்?*
*புரிந்தது எனக்கு.*
*இன்னுமில்லை எனக்கான நாட்கள்.*
*சொன்னது சரிதானே.*
□□

*வெளிச்சம்*
*மார்கழி 1998 - தை 1999*

# உறவு

இன்றேனோ எழுத எழுத
என் கவிதை விரிந்தது.
வார்த்தைகளைக் கோர்த்து வடிவமைத்தேன்.
அழகாய் உருவுற்றது கவிதை
மடியிலிருத்தித் தலைவாரினேன்.
பூவாய் மலர்ந்து பேசிற்று என்கவிதை.
என்னையேன் நெய்தாயெனக் கேட்டது.

• புதுவை இரத்தினதுரை

*உன்னைப் படைத்தெழும் ஒவ்வொரு நாளும்*
*ஜென்மபலன் சித்தித்த பரவசம் என்றேன்.*
*சிரித்து என்முன்னே பேசிற்று கவிதை.*
*என்னை வார்த்தைகளால் வனைந்தெடுத்தாய்.*
*வண்ணக் கலவையாக்கினாய்.*
*நேர்த்தியானது உன் கைவண்ணம்.*
*நரம்புகளில் அதிர்வும்,*
*சுவாசக்கூட்டுக்கு மூச்சும் அளித்தாய்.*
*நானும் உயிர்கொண்டெழுந்து உலவுகிறேன்.*
*நீயென் தந்தை.*
*என்னைப் படைத்ததினால் நீ பிரம்மன்*
*என்றது கவிதை.*
*மெத்த மகிழ்வில் மிதந்தேன்.*
*எனினும் எனக்குள்ளோர் உரசல்.*
*சொல்லெனச் சொல்லிற்று ஆன்மா*
*சொன்னேன்.*
*என் சிற்றுளியால் உருவான சிலையே!*
*உன்னைப் படைத்தது உனக்காகவல்ல மகளே!*
*எனக்காக...*
*என் நெஞ்சக்கூடு நெருப்புறும் போதில்*
*நீ விழிதிறக்கின்றாய்.*
*உனக்காக நானுன்னை உருவாக்கவில்லை*
*எனக்காக மகளே என்றேன்.*
*சிரித்தெனக்கு முத்தமிட்டுச்சென்றது*
*என் கவிதை.*
□□

*வெளிச்சம்*
*மாசி - பங்குனி 1999*

# உன் வசமாகும் உலகு

*காற்று நடக்கிறது கைவீசி.*
*பால் நிலவு*
*பூத்துக் கிடக்கிறது பாலைப்பொழிந்தபடி.*
*நேற்றிரவைப்போல நெடுங்கேணி குலுங்கிறது.*
*தூரத்தே வெடிக்கும் சுடுகுண்டின் அதிர்வினுக்கே*
*ஈரக்குடல் வற்றி இறுகிறது.*
*நெஞ்சுக்குள்*
*ஏதோ திரண்டு எழும்மூச்சை அடைக்கிறது.*

• புதுவை இரத்தினதுரை

*சேதாரமாச்சா எம் திருவாழ்வு?*
*கைப்பிடிக்குள்*
*மலர்ந்திருந்த வாழ்வின் மகிமை*
*வேரறுந்து*
*தளர்ந்துளதா இன்று?*
*சாவேயெம் நாளாந்தம்*
*என்றாச்சா?*
*எமையிந்த இடரேன் தொடர்கிறது?*
*குன்றாய் நிமிர்ந்த குலமிடிந்து*
*பள்ளத்தில்*
*வீழும்படியான விதியேன் கவிந்துளது?*
*பாழுமிருள் விலக்கும் பரிதி*
*எம் வானத்தில்*
*ஏனின்னும் வந்து எழவில்லை?*
*எம் தலையில்*
*மானத்துக்கணியும் மகுடமேன் கிட்டவில்லை?*
*வேறொன்றுமில்லை*
*விடுதலையின் மீதெமக்கு*
*ஆறாத காதல் அரும்பவில்லை,*
*அவதரித்த*
*தாய்நிலத்தின்மீது தனியன்பு பெருகவில்லை.*
*தீயுண்ட நெஞ்சம் சினம்கொண்டு சீறவில்லை.*
*போத்தலடைத்த் புனலாய்,*
*நேற்றிரவு*
*கூத்து முடிந்த கூத்தரங்காய்,*
*பேசாமற்*
*போர்த்துக் கிடக்கின்றோம்; புதுவாழ்வு கைவருமா?*
*வாராது காணும்*
*வல்லமைக்குத் திலகமிட்டுப்*
*போராட வேண்டும்.*
*புறப்படும் ஓய்...*
*ஏன் காணும்*
*வானத்தரசன் வந்திறங்கி எம்கையில்*
*தானமென விடுதலையைத் தருவானா?*

நாமேதான்
எழுந்தெமக்கு எதிரான எதையும் சரித்துவிடும்
பலத்தோடெழுந்து பகைவிழுத்த வேண்டும்காண்.
அஞ்சாமை,
ஆற்றல்,
அடங்கா வலு,
வாழ்வைப் பஞ்சைப்போலெண்ணும் பக்குவம்
இவை வேண்டும்.
நம்பிக்கை வேண்டும்.
நாளை நமக்கென்னும்
தெம்பெமக்கு வேண்டும்.
துணிவென்னும் பலமுடைய
தும்பிக்கை வேண்டும்.
தொடர்ந்தலைக்கும் துயரிருளைக்
கண்டு சிரிக்கின்ற கனிவான மனம் வேண்டும்.
தொண்டு தொழும்பறியாச் சுடரொளியாய்
எந்நாளும் நடக்கும் பலம் வேண்டும்.
நடுவழியில் விட்டகலா
புடைக்கும் தோள் வேண்டும்.
பிறகெல்லாம் உன் வசமே.
□□

வெளிச்சம்
மாசி - பங்குனி 1999

# துளிர்ப்பு

கூரைக்குமேலே மேகம் கவிய
குளிர்ந்த காற்று மேனிதழுவும்.
சோவெனப் பொழியும் வானம்.
நிலம் நனைய
வேர்கள் நீருறிஞ்சும்.
மரங்களின் முகத்தில் மந்தகாசம்.

ஏரெடுத்து நடப்பர் மண்ணின் புதல்வர்
வயல் அவர்களுக்கு வாழ்க்கைப்படும்.
மறுநாள்
முழுகிய தலையில் பூச்சொருகி
வாசலுக்கு வரும் வசந்தம்.
கூத்துடன் கழியும் பகலிரவு.
நேற்றுவரை
எம்மண்ணின் ஜீவிதம் இப்படியிருந்தது.
மெல்லச் சிணுங்கும் மெட்டியொலியாய்
காதுக்களவாய் இருந்ததெம் பாடல்.
புயலுக்கிது பிடிக்கவில்லைப்போலும்.
நானேஆள்வோன் நீயென்அடிமையென
அசுரப்பலமெடுத்து அடித்தது.
பாறிச் சரிந்தன யாவும்.
அழகாய்ப்பூத்த முற்றத்து மல்லிகூட
அதோ சடமாய்க் கிடக்கிறது.
புயலுக்குத் திரைபோட எழுந்தனர் இளையபுத்திரர்.
எப்படி இயலுமென பிலாக்கணம் வைத்தன
சில பல்லிகள்.
முயன்று பார்ப்போம் என்றன இளசுகள்
மெய்வருந்தக் கூலி தந்தது முயற்சி.
இன்று இளசுகள் மட்டுமல்ல
பழசுகளும் திரைக்குப் பக்கத்தில்.
வரவிடோம் புயலையினி என
வாசலெங்கும் வைராக்கியம்.
நிமிர்ந்த வாழ்வுக்கான நினைவுடன்
அதோ களத்துமேட்டில் ஒருகாவலரண்.
□□

வெளிச்சம்
சித்திரை - வைகாசி 1999

• புதுவை இரத்தினதுரை

# நிலவுக்குத் திலகமிடும் ஒரு கவிஞனின் ஒப்புதல் வாக்குமூலம்

நான் நானாகத்தான் இருந்தேன்.
இருக்கின்றேன்.
குயில் வந்தது.
இருந்து கூவென்றேன்.
உன் வளவில் வசந்தமில்லையென
வந்த குயில் திரும்பியது.
மயில் வந்திறங்கிற்று முற்றத்தில்.
என் வானத்தில் மேகமில்லையாம்
ஆடமறுத்தோடியது.
இளவேனிலுக்கும் மழை மேகத்துக்கும்
நாமெங்கு போவேன்?
குடல்வற்றிக் கிடக்கிறது
குண்டி பன்னீருக்கழுதால் நானென்செய்ய?
ஓரவஞ்சகம் செய்வதில்லை உதயம்
எல்லோருக்கும் ஒன்றாகத்தான் விடிகிறது.
அதிகாலையை அள்ளிச் செல்வதிற்தான்
சிலருக்கு அவசரம்; நான் கொஞ்சம் அசமந்தம்.
நீரை வேகத்தோடு உறிஞ்சுகின்றன சிலவேர்கள்.
வேர்களிலும் வித்தியாசமானவை உண்டு.
அவற்றிலொன்றானேன் நான்.
ஆடி விதைப்புக்கு வயல்போகும் ஊர்.
அப்போதுதான் நிலவுக்குத் திலகமிட்டு

நட்சத்திரங்களை அள்ளியெடுத்து
மாலைகட்டிக் கொண்டிருப்பேன் நான்.
என்வயல் தரிசாகாமல் என்செய்யும்?
சுட்டுவிரல் யாவும் என்நெஞ்சைச் சுட்டும்
சிரித்துக் கொள்வேன்.
வாழ்க்கைக்குரிய அர்த்தத்தை
வேறுபடுத்திக் கொண்டதின் விபரீதமிது.
என் எல்லைகளை
வீட்டைச் சுற்றியே இறுக்கி
சின்ன வட்டத்துள்ளேயே சிறையிருக்க
ஏனோ தெரியவில்லை; என்னால் முடியவில்லை.
கோயிலுக்குச் சென்று கொம்பு காவி,
வருடப்பிறப்பன்று மருத்துநீர் முழுக்கிட்டு,
பக்கத்து வீட்டுத் திருமணத்தில் பந்திபரிமாறி,
பேண்டகுழந்தையின் பூறுகழுவி
எனக்கு வாழத் தெரியவில்லை.
இது குற்றமென
எவர்தான் என்னைக் கழுவேற்றக் கூடும்?
உருப்படாதவனென ஊர்விலத்திப் போகலாம்
நஷ்டமெனக்கில்லையெனக் காலமுணர்த்தும்.
அப்போது அழுவது நானல்ல
இந்த உலகம்.
வானமரனொருவன் வந்துபானனென்பதை
ஏனறிந்து கொள்ளவில்லை இன்னும்?
ஓதியமரங்களுக்கு நீர்வார்ப்பவர்களே!
பக்கத்தில் ஒரு கற்பகவிருட்சம் நிற்பதை
ஏன் கண்டுகொள்ளவில்லை நீங்கள்?
நஷ்டமெனக்கில்லையென
நாளையறிவீர்.
அப்போதழுவது நானல்ல;
இந்த உலகம் தான்.
□□

ஈழநாடு 1999

• புதுவை இரத்தினதுரை

# அன்றைய நானும்
# அந்த நாட்களும்

அந்த நாட்கள் அழகானவை.
என்றும் குன்றா இளமையுடன் இன்றுமிருக்கும்
அந்த நாட்களுக்கு ஆயுளதிகம்.
நித்தியமானவை அந்தநாட்கள் மட்டுமல்ல
நாட்களின் நினைவுகளும் தான்.
வழித்துத் துடைத்தாலும் எங்கேனும்
ஓரிரு துணிக்கைகள்
ஒட்டியிருந்து உயிர்ப்புக் கொள்ளும்.

*அந்தநாட்கள் ஆனந்தமானவை.*
*இதயச் சுவரில் துயரப்பாசி பிடிக்காத*
*இளமைக் காலமது.*
*நாளைய கனவுகள் இருந்தனதான் நெஞ்சில்*
*எனினும் சுமையற்ற சுகம்.*
*காதலில்லை, கலியாணக் கனவுகளில்லை,*
*என்னுழைப்பையெவரும் எதிர்பார்த்திருக்கவுமில்லை.*
*பசிக்குதென்றால் உணவு,*
*கிழிந்ததென்றால் உடுப்பு,*
*கைச்செலவுக்கும் காசு.*
*எனக்கு*
*எட்டுத்திசையும் தொட்டுவரக் கூடியதாய்*
*இறக்கை முளைத்திருந்தது முதுகில்.*
*ஊருக்கு இடைஞ்சலில்லாதவன் என்பதில்*
*ஆச்சிக்குச் சந்தோஷம்.*
*பெரிய புத்தகங்கள் வாசிப்பவன் என்பதில்*
*அப்புக்குப் புளுகம்.*
*இவை போதாதா எனக்கு?*
*அன்றாடம் அமைதியாக பூப்பதும் சொரிவதுமாக*
*போயின.*
*பின்னேரம் ஐந்துமணியானதும்*
*'தோழர்கள்' கூடிச் சுரண்டலுக் கெதிராக*
*ஏதேனும் கதைப்பதெம் நாளாந்தம்.*
*வாயில் புரட்சி அரைபட்டுக்கொண்டிருக்க*
*'லெனின்' அல்லது 'மாசேதுங்'*
*இருவரும் இல்லையாயின் 'பிடல்'*
*உமிழ்நீருடன் ஊறிக் கொண்டிருப்பார்கள்.*
*நல்லூர் கந்தசாமி கோவில் மேற்குவீதியில்*
*இப்போ முத்துவிநாயகர்*
*சிறையிருக்கும் இடத்துக்கருகில்*
*அப்போ வாசிகசாலை ஒன்றிருந்தது.*
*அதற்கு முன்னால் இன்றுமிருக்கும் அகலத்தெரு.*
*வீதிமருங்கில் வெள்ளைமணல் விரித்திருக்கும்*
*உட்கார்ந்து கொள்வோம் நாம்.*
*பக்கத்தில் 'இங்கே துப்புங்கள்' வாளி*

நாறிக் கொண்டிருக்கும்
நமக்கது மணக்காது.
மணந்தாலும் காட்டிக் கொள்ள மாட்டோம்.
சேரிப் புதல்வர்களுக்கான 'சிவப்புப் புரட்சி' பற்றி
பேசிக்கொள்வோம்.
நம் வாயிலிருந்து நல்லூர் வீதிக்கு
அடிக்கடி மாவோவும், லெனினும் வருவார்கள்.
இடைக்கிடை 'கெனமனும்',
'சண்'ணும் வந்து போவார்கள்.
ஆறுமணியானதும்
பூசைக்கான பெரியமணி ஊரை அழைக்கும்.
நாமெழுந்து
பக்கத்திருக்கும் 'வேல்விலாஸ்'சுக்குள் புகுவோம்.
அன்றைக்கெவரிடம் பணமிருக்கிறதோ அவருபயமாக
ஒருவடையும், ஒருபிளேன்ரீயும்
கடித்துக் குடிப்போம்.
எப்படியும் சிகரெட்டொன்றும் கிட்டும்.
இழுத்தபடி மீண்டும் வந்து
இருந்த இடம் பிசகாது குந்தினால்
ஒன்பதுமணிக்கு எழுவோம்.
பசி வயிற்றைப்பிடுங்கும்
புரட்சியை மூட்டைகட்டி மதிலோரம் போட்டுவிட்டு
வீட்டுக்கு நடப்போம்
இனிதுகழியும் அன்றைய நாள்.
இனி நாளை மாலை நடக்கும் சமா.
அப்போதெல்லாம் 'நல்லைஆதீனத்தில்'
அடிக்கடி 'ஓசி விழாக்களேதும்' இருக்கும்.
ஓதுவார் ஒருவர் பாடுவார்.
சிலநாட்களில் தவ்வலொருவன் தவிலடிப்பான்.
சித்தாந்தப் பேருரை நடக்கும்.
புத்தகவெளியீடென்று எவனாவது பேசுவான்
கேட்க எதுவும் இருக்காது
போயிருந்து பார்ப்போம்.
விழாவின் இறுதியில் வீபூதி தருவார்கள்
பிரசாதம் என்ற பெயரில்.

கெட்ட கோபம் வரும்
தொட்டுக் கொள்வோம்; பூசமாட்டோம்.
எப்போதாயினும் இருந்துவிட்டு
தேரடிப் பக்கமாகவும் எங்கள் திருச்சபை கூடுவதுண்டு.
நாங்கள் கதைக்கத் தொடங்கியதும்
காவியுடுப்புகள் எழுந்து நடக்கத் தொடங்கும்.
பிச்சைக்காரர் ஓரிருவர் மட்டும்
கிட்டவந்திருந்து பவ்வியமாகக் கேட்பர்.
கற்பூரக்காரன் சிரிப்பான்.
நமக்கிவர்கள் பற்றிக் கவலையே கிடையாது.
புதிய ஜனநாயகப் புரட்சிபற்றிப் பேசுவோம்.
இப்படிக்கழிந்த ஒருநாளிற்தான்
என்னைத் தன்னிலெழுதினாள் ஒருத்தி.
இன்றென் மனைவியான அன்றைய காதலிக்கு
விளயமெழுதுவதற்காக
ஒருநாள் வீதிச்சமாவுக்கு போகாதிருந்தேன்.
பின்னர்
போவதையே நிறுத்திக் கொண்டேன்.
எனினும்
அந்த நாட்கள் அழகானவை.
அந்த நாட்கள் ஆனந்தமானவை.
என்னுள் அந்தநாட்களுக்கு ஆயுளதிகம்.
□□

ஈழநாடு 1999

# வரவேற்க யாருமற்று வந்துபோகும் அழகு

*பூம்பனியில் நீராடிப் புல்நனைந்து ஆடும்.*
*பொன்வண்டு தூரத்தே பண்ணெடுத்துப் பாடும்.*
*காம்பினிலே பூமலர்ந்து கண்சிமிட்டிக் கொள்ளும்.*
*காற்றுவந்து மேனியிலே கையளைந்து கிள்ளும்.*
*வேம்பிருந்து மாவிருந்து சேவலெலாம் கூவும்.*
*விடிந்துவரும் வானமது குங்குமத்தைப் பூசும்.*
*ஆம்; இந்தப் புலரியிற்தான் பெருகிவரும் அழகு.*
*ஆறுமணி யோடழகு அற்றுவிடும் உலகு.*
□

செவியிடிக்கும் ஓலங்கள் எதுவுமற்ற காலை.
தெருவினிலே ஓரிருவர் சென்றுவரும் வேளை.
புவியுடலம் சூடாறி விழிமலர்த்தும் போது
புல்லரித்துப் போகாத மெல்லிதயம் ஏது?
கவிபெருகும் அதிகாலை கவிஞர்களின் காலம்.
கண்திறந்தால் கண்ணெதிரே வண்ணவண்ண ஜாலம்.
தவிலிசையை அதிகாலை வாங்கவரும் மேகம்
சந்தடிகள் பெருகியதும் தலைதெறிக்க ஓடும்.
□

வயலுழவுக் காகநடை போட்டுவரும் மாடும்
வாகைமரம் மீதுதுணை தேடுகின்ற பேடும்
அயல்முழுதும் வந்தணையும் தேவாரப் பாட்டும்
அதனோடு இழைந்துவரும் நாதஸ்வரக் கூட்டும்
வியனுலகை இங்கமைக்கும் விடிகாலை நேரம்.
விடிந்துவிட்டால் எல்லாமே அழிந்துவிடும் பாரும்
அயர்ந்துறங்கும் விழிகளிங்கு இருந்துமென்ன லாபம்
ஆறுமணி யோடெதுவும் அழகிழந்த கோலம்.
□□

வெளிச்சம் 1999

● புதுவை இரத்தினதுரை

# முழுமை பெறாத நிலவு

அகவையம்பது ஆனதே ஆகியென்?
அழகுபோனதே யன்றிவே றென்னசொல்?
உவகைகண்டதாய் உள்ளெரி கொண்டதாய்
உலகமீதினி லேவெறும் பிண்டமாய்
தகைமையற்றிழி வுற்றவ னாயினும்
"தணலை மூட்டிய தமிழ்க்கவி வாணனாய்
புதுவை வாழ்ந்தனன்" என்றதோர் பொய்யிலாப்
பெருமையோடிவன் புள்ளி நிறைவுறும்.
□
புள்ளியானயென் வாழ்வு பெருத்தொரு
பெரியவட்டமாய் ஆனது; ஆயினும்
சொல்லிடும்படி ஏதுமென் வாழ்விலே
செய்யவில்லையே என்றதோர் ஏக்கமே
உள்ளிருந்துளம் ஊறிட; நான் வெறும்
உருளையாகி உருண்டுபாழ் வெளியினிற்
பள்ளிகொண்டதே யன்றிவாழ் நாளிலே
பதிவுறும்படி செய்ததொன் றில்லையே.
□
பதிவுறும்படி ஏதும்செய் யாததோர்
பாவியானெனும் போதிலும், அசைவுறும்
நதியினோரிசை வான நகர்வுடன்
நான்நகர்ந்துளேன்; நாளுமென் வாசலில்
அதிகமானவ ரேறியன் பாலெனை
ஆட்சிசெய்திடும் பேறுகண் டானவன்.
புதியதானவை தேடியென் திசையெலாம்
புலர்ந்தனென்பதிற் பெருமகிழ் வுற்றுளேன்.
□

*சிலந்தி பின்னிடும் வலையென இன்றியான்*
*தெளிந்தநீரெனத் தெரிந்தவன்; என்றுமே*
*உலர்ந்தவனிலை; உயிர்ப்புறும் வேரென*
*உள்ளிருந்தவன்; உயர்ந்தறி யாதவன்.*
*புலர்ந்த காலையைப் போலவென் வாழ்வதும்*
*புனிதமாகவும், பூவென மென்மையாய்*
*அலர்ந்ததாகவும், மானுடம் நோவுறில்*
*அழுததாகவும் இருந்ததென் ஜீவிதம்.*
□
*இருந்திதுவரை யானவென் ஜீவித*
*இனிய அம்பது வருடவாழ் எல்லையில்*
*மருந்துபோல்மது வுண்டுளேன்; மானுட*
*மனசிலேயெழும் மாயத்தீ வீழ்ந்துளேன்;*
*விருந்துபோலதைத் தொடர்ந்திலேன்; தவறென*
*விளங்கியானதை விட்டுளேன்; புனிதனாய்*
*திருந்தினேன்; எனைத் திருத்திய 'ரஞ்சி'தத்*
*திருமகளினை நெஞ்சிலே... இருத்தினேன்.*
□
*நெஞ்சிலேயெவர்க் காயினும் தீதினை*
*நினைத்து யானிது காலவரையிலும்*
*வஞ்சனை புரியாததோர் மனிதனாய்*
*வாழ்ந்துளேன்; இதுபோதும்; இனியுள*
*கொஞ்சநாளையும் கேடிலா ஒருவனாய்*
*குழந்தைபோலவே வாழ்ந்திட விரும்புறேன்.*
*பஞ்செனச்சுமை யின்றியென் மீதிநாள்*
*பறக்க; எனக்கொரு வரமளி காலமே.*
□□

*(03.12.1998 வியாழக்கிழமை என் ஐம்பதாவது பிறந்த நாளன்று எழுதி முடித்த கவிதை. வாழ்நாள் எனக்கு வசதியளித்தால் நான் எழுத நினைத்திருக்கும் என் சுயசரிதையின் தொடக்கமாகவும் இது அமையும்.)*

## தடகளப் போட்டி

காலையில் பயிற்சி முடிந்த கையோடு
காட்டுக்கு விறகுவெட்டப் போவதாய்
அதிகமான தந்தையர் சொல்லிப் போயினர்.
மதியம் உலையேற்றி இறக்கியதும்
பின்னேரப் பயிற்சிக்கேகினர் தாயர்.
பள்ளிவிட்டு வந்ததும்
பானையை வழித்துத் துடைத்துவிட்டு

மந்து கொத்திய புலவில்
சிறுவர்களின் மாலைநேர விளையாட்டு.
துப்பாக்கியென ஏந்திய விறகுக் கொள்ளியுடன்
பிசகின்றிய சத்தியப்பிரமாணம்.
இடுப்பில் வழுவும் காற்சட்டையை
இறுகப் பிடித்தபடி
ஒன்று காலைப்பரத்தி விழுந்ததும்
மற்றதனைத்தும் மண்ணிற் புரளுகின்றன.
காலையில் வேர்களுக்கான பயிற்சி.
மாலையில் விழுதுகளுக்கான விளையாட்டு.
ஊர்மனையை ஒத்தனவாக
நெருப்புக்குஞ்சுகளும் நீச்சல் பழகுகின்றன.
நாளைய வாழ்வுக்கான இன்றைய ஒத்திகை.
ஆழ்மனதில் வரையப்படுகிறது வாழ்வின் யதார்த்தம்.
சிறகேயின்னும் சரியாக விரியாத
குஞ்சுகளின் விளையாட்டுக் குறிப்புணராது
நாளையுன் வயலிலிறங்குவேனென
சொல்லியதாம் வெள்ளம்.
அந்தரித்து எம் கரையெல்லாம் கரைக்கும்
ஆக்கிரமிப்பு வெள்ளமே!
நெருப்புவை எம் தேசத்துக்கு
எரிந்து போகிறோம்
எனினும் பாதம் பணியோம்.
இன்றைய பூக்களாக நாங்கள்
நாளைய பூக்களாக விரியும் மொட்டுக்கள்
வேரறும்வரை விளங்கும் எம் மரங்கள்.
ஆழப்பாய்ந்த வேரை அறுக்கவா முடியும்?
இப்போ ஊர்முழுதும் ஒரு உற்சாகமும் போட்டியும்
யார் முதலில் உன்னைச் சந்திப்பதென்று.
□□

வெளிச்சம்
ஆனி - ஆவணி 1999

• புதுவை இரத்தினதுரை

# இரவேறிய நிலவூடாக கரையேறிய உறவுகளுக்கு

ஆலமரத்தின் கீழ் அரைஞாண் கயிறு தொய்ய
காலால் நடந்தெனது
கடப்படிக்குப் போவதற்கும்
ஏலாதிருக்குமொரு இடம் பெயர்ந்த தமிழ்க்கவிஞன்
வாயாலெடுத்தோதும்
'வன்னிக்கதை' கேட்டு
தேயா நிலவே! நீ செப்புவாயோ வையமெங்கும்.
எத்தனை பேர் தன்னை இரந்தோம்
ஒருவருமே
சத்தியமாயெம்மைத் தலையெடுத்தும் பார்க்கவில்லை.
செத்திடுவார்,
எமக்கேனிச் சோலி எனநினைத்தா
விட்டார்; எனினும் யாம் விழமாட்டோம் எனச்சொல்வாய்.
நாளாந்தம் நோயால் நலிந்தும்,
ஒருகவளம்
ஆகாரமின்றி அயர்ந்தும்,
கூவிவரும்
குண்டால் உயிர்க்கூடு குலைந்தும்
பொல்லாத
சண்டைக்குள் வாழும் சனத்தை எவர் நினைத்தார்?
வாழ்வைத் தொலைத்தும், வாழ்விடத்தின் வேரறுத்தும்,
பாழ் விதிக்குத் தம்மைப் பறிகொடுத்தும்
ஆகாயப்
பந்தலதின் கீழ் வாழும் பாவியரை யார் நினைத்தார்?
சொந்தம் பிரிந்த துயர்வாட்ட
நெஞ்சறைக்குள்
ஊர்நினைவு வந்து உலைமூட்ட
ஒருகாலம்




'சீர்பூத்த' குடியாகித் திகழ்ந்த குலவேர்கள்
நீர்கூடக் குடித்தாற நிலக்குழியுமில்லாமல்
போர்துரத்த ஓடிப்புழுவானார்;
கால் மிதிக்கும்
புல்லானார்;
யாரும் பேசாத பொருளானார்
கல்லானார்.
நாளை கால்வைத்தெம் வீதியிலே
வில்லாளும் வீரம் விரிந்த மலரடிகள்
பட்டு உயிர்த்தெழும் நப்பாசையிலே
இன்னுமுயிர்க்
கொட்டுத்துடிக்கக் கிடப்பதையிங் காரறிவார்?
வந்த விருந்தோம்பி
வருவிருந்தையெதிர் பார்த்து
சந்தை முழுதும் தன் தலைவாசல் பரப்பியதோர்
குடியின் கொடியிங்கு கொழுகொம்பு ஏதுமின்றி
பிடியரிசிக்காகப் பிறப்பெடுத்த குடியாச்சு.
காலைப்பொழுது கண்திறக்க
கன்றின் வாய்
பாலை உறிஞ்சும்; பனிமலர்கள் சிலிர்த்தகொடி
ஆளை மயக்கும்; ஆறுமுகன் பூசைமணி
வாசல் புகுந்து வந்து வளைத்தெம்மை முத்தமிடும்.
நாதஸ்வரமிங்கே நானுமுளேன் என்பதுபோல்
வீசும் காற்றிழைந்து விடிபொழுதிற் சத்தமிடும்.
பொன்தாதுப் பொடியென்னப்
பொலிந்த பெரும்சாதி
இன்றோ; விடிந்தென்ன
இருளாகிப் போயென்ன
என்றான வாழ்வில் இடியுண்டு கிடக்கிறதே.
இருள் துரத்த வந்திங்கு இருக்கின்றோம்;
முன்பிருந்த
பெருமையெலாம் தெருவிற் போட்டு;
வழி நடந்து
வறுமையிலே வாடி வதங்கிடினும்;
கூர்முனையை

• புதுவை இரத்தினதுரை

வணங்காதோரென்ற வரலாறெமக்கிருக்கும்.
பணமும், பொருளுமென்ன பண்ணும்?
என நிமிர்ந்து
சாவு விளைகின்ற தரையினிலே வேர்கொண்டோம்.
மாவு, மருந்துடனே மண்ணெண்ணை
எனயிங்கு
ஏதுமிலையென்றாலும் இருக்கின்றோம்;
சாகவில்லை.
நீதியொரு நாளெம்மை நிமிர்த்தும்
அதுவரையும்
அணையாதிருப்பதற்கே அரும்பாடுபடுகின்றோம்.
துணையாய் எமக்கெவர்தான் தோள்தருவார்?
நிலவே நீ
போகும் திசையெங்கும் பேசு;
நாங்களிங்கு
வேகும் நெருப்பிடையே வெந்துள்ளோமெனச் சொல்லு.
கோடியுறவிருந்தும் கேட்கவொரு நாதியற்று
ஆடிச்சரியுமெங்கள் அந்தரிப்பைச் சொல்லிடுக.
'வன்னிக்கதை' கேட்டு வழியும் விழிகண்டால்
அன்னார் முகவரியை அறிந்துவா;
அதுபோதும்.
காசெமக்கு வேண்டாம் கருகுமெம் வாழ்வதனைப்
பேச ஓரிருவர் புறப்பட்டால் அதுபோதும்.
வானத்தெழுந்துவரும் வளர்நிலவே!
நீயிங்கு
காணும் துயரையெல்லாம் கட்டாயம் போயுரைப்பாய்.
காத்திருப்பேன்;
எங்கள் கதையறிந்தால்
உறவுவெள்ளம்
நாற்றிசையுமிருந்து நகர்ந்து வரும்
சொல்வாயா?
□□

வெளிச்சம்
ஆனி - ஆவணி 1999

# உன் செவியில் கேட்குமா எம் கதறல்

*எழில் சிலிர்த்த எம்மூரின் வானம்கிழிய*
*குண்டு விமானம் செலுத்தி வந்தாய்.*
*சொன்னவன் சொல்லிவிட்டிருந்துவிட்டான்*
*செய்தவன் நீதானே.*
*வட்டமிட்டுப் பார்த்துவிட்டாவது*
*கொட்டியிருக்கலாம்.*

• புதுவை இரத்தினதுரை

*போட்டுவிட்டு நீ போய்விட்டாய்*
*புலுண்டிப்போனது 'மந்துவில்'.*
*பிசகின்றிப் போட்டுத் திரும்பினேன் என்றிருப்பாய்.*
*பிறகென்ன*
*வாய்நோக வாழ்த்தும்,*
*கைநோகக் கைகுலுக்கலும்*
*மயிர்சிலிர்க்க மகிழ்ந்திருப்பாய்.*
*இந்த நூற்றாண்டின் இணையற்ற வீரனெனக்*
*கம்பீரமாக நடந்திருப்பாய்.*
*நாடேயுன் கைக்குள்ளடக்கமென*
*நாட்டாண்மை முளைத்திருக்கும்.*
*நொடிக்குள் நடத்திவிட்டேகினை*
*நொறுங்குண்டு போனது மந்துவில்.*
*இருபத்திரண்டு தமிழரை*
*குப்பையெனக் கூட்டியள்ளி*
*பெட்டிக்குள் வைத்தோம்.*
*ஊர்கதறி ஒப்பாரிவைத்து*
*சொந்தங்களைத் தேடித் துடித்தபோது*
*நீ விரலிடுக்கில் சிகரெட்புகைய*
*பீர் குடித்திருப்பாய்.*
*உன்னால்*
*ஒரு குடிசைமுன்றலில்*
*ஊஞ்சலொன்று அறுந்து தொங்கியது.*
*அருகில்*
*விடிய விடியக் கூத்துப்பார்த்துத் தூங்குவதாய்*
*குண்டுசிதறல் குத்தி*
*சின்னப் பூவொன்று செத்துக்கிடந்தது.*
*அவள் சரியாக உன் மகள்மாதிரி.*
*உன் தங்கைமாதிரி.*
*உன் உறவுப் பெண்ணொருத்திபோல.*
□□

*வெளிச்சம்*
*புரட்டாதி - கார்த்திகை 1999*

# கல்லறைக்குக் காணிக்கை

*எட்டியுதைக்கும் கால் எடுத்து*
*கழுவியொரு*
*முத்தமிட்டுக் கிடந்ததெம் முற்றம்.*
*ஆளவருவோரின்*
*தோள்தழுவித் துவண்டிருந்ததெம் முற்றம்.*
*வேர்கள் தொழப்பார்த்து விழுதுகளும் கையெடுத்து*
*காலைக்கழுவிக் கண்துயின்ற முற்றமிது.*

• புதுவை இரத்தினதுரை

பாலை நெடும்பாலைப் பற்றையென
கிடந்த முற்றம்.
வந்தாரெம் சிறுவவரிசை
வருகையின் பின்
மந்தாரம் போட்டு மழைபொழியும் முற்றமென
செய்தார்.
செகத்தையிவர் திகைக்கவைத்து விட்டார்காண்.
பொய்யாய்க் கிடந்த புலவை
புதுநிலமாய்
உழுதார்,
விதையெறிந்தார்,
ஊர்முழுதும் விளைச்சலென
எழுதும்படியாக எப்படியோ செய்துவிட்டார்.
ஊரழிப்பேன்,
உன்னூரில் உலையேற்ற விடமாட்டேன்,
சீரழிப்பேன்,
உன்னைத் திசைக்கொன்றாய்ச் சிதறவைப்பேன்,
தேரெரிப்பேன்,
நீ வணங்கும் சிவபுரத்தைத் தீயிடுவேன்,
பேரழிப்பேன்,
தமிழர்நில புலமெல்லாம் நானழிப்பேன்
என்றேயெழுந்தானெம் எதிரி.
அவனையெதிர்
கொண்டாரெம் வீரக்குழந்தைகள்.
நெருப்பாகி
நின்றெதிர்த்து இந்தோ நிலமுறங்கும் மாவீரர்
கல்லறைக்கென் கண்ணீர்க்காணிக்கை.
இக்கவிதை
சொல்லடுக்கையெல்லாம் சோடித்தேன் கல்லறையில்.
□□

வெளிச்சம்
புரட்டாதி - கார்த்திகை 1999

# மண்குளிரச் செய்த முகில்கள்

மாரிமழை யாகி நீர்தெளித்து ஆடி
மண்குளிரச் செய்த முகில்கள்.
மாதவங்கள் செய்த போதெமது பூமி
மடியிலுரு வான உயிர்கள்.
போரில்விளை யாடும் வேளையுடல் வீழ்ந்த
போதுமுயி ரான சிலைகள்.
பூங்குயில்கள் பாடும் ஈழமதை வாங்கப்
போயெரிந்து போன புலிகள்.

மாலைமணி ஆறு ஆகும்பொழு தாக
மாரிமழை கொஞ்சம் ஓயும்.
மாலைமலர் சாத்தித் தீபஒளி காட்டும்
வேளைவிழி ஆறு பாயும்.
சாலை, கடை யோடு, வீடுஎன யாவும்
சாமிதுயி லில்லம் கூடும்.
சாதிமத மென்று வேறுபட லின்றித்
தேவநிலை கொண்டு பாடும்.

வாரியெடுத் தும்மை வாசல்தனில் வைத்து
வாசமலர் தூவும் பொழுதில்
வந்தெமது கண்ணில் நின்றுதெரி கின்ற
வாறுவர வேண்டும் அருகில்.
தேரிலெழுந் தெங்கள் தீபஒளி காணத்
தேடிவர வேண்டும் உறவு.
தேசமெலா மின்று வீசும்குளிர் காற்றில்
சேர்ந்துஉழ வேண்டும் சிறகு.
□□

வெளிச்சம்
புரட்டாதி - கார்த்திகை 1999

• புதுவை இரத்தினதுரை

# எங்கள் பாடல்

அமுதவாழ்வு அழிந்தது என
எம்மீது எழுதவருகிறது இளங்காற்று.
ககன வெளியெங்கும் எம்கையில் அடக்கமென
சொல்லி எழுகின்றான் சூரியதேவன்.
இன்று புத்தாயிரமொன்றின் பிரசவம்.
இரண்டு நூற்றாண்டில் இருந்தோமெனும் பெருமையில்
எங்கள் தலைகள் மகுடம் தரித்துளது.
என்னதான் எம்வாழ்வு எரிந்துளதெனினும்
கண்களில் பீறிட்டொளிர்கிறது செருக்கின் ஒளி.
காற்றே! எம்மேனி தழுவு.
காலமினி உம் கையிலடக்கமென
கோழியே! கூவி எழுப்பு.
உலகெங்குமுள்ள மலைகளின் உச்சியில்நின்று
எங்கள் குரல்கள் ஒலிக்கின்றன.
பீரங்கிக்குழலில் நாங்கள் புல்லாங்குழல் வாசிக்கின்றோம்
பூபாளம் புறப்பட்டுப் போகிறது.
விரிந்து கிடக்கும் கடல்களைத் தாண்டி,
பூமிப்பந்தின் பெருவெளிகளைக் கடந்து,
மனிதத்தின் குரலாக,
மானுடத்தின் இசையாக,
ஈனம் துடைத்தழிக்கும் இதயத்தின் ராகமென
பிரபஞ்சத்தின் மூலைமுடுக்கெல்லாம் கேட்கிறது
எங்கள் காலக்குரல்.
பாலைவனத்தில் ஒட்டகம் மீதேறியும்,
துருவப்பகுதியில் பனிக்கரடி மேலேறியும்
பயணம் செய்கிறது எங்கள்பாடல்.
□□

வெளிச்சம்
மார்கழி 1999 - தை 2000

# பாற்செம்பும்
# பறவைக் காவடியும்

*உள்ளே உயிர் மட்டுமாடும்*
*இந்த உடற்கூட்டை*
*இன்னும் எத்தனை இடத்திலென்று ஒளிப்பது?*
*அகலக் கூந்தல் பரத்திய மரத்தலையின் கீழும்,*
*தூர்ந்துபோன தடிமல் மதவுகளின் உள்ளும்,*
*ஏலவே அகதிவௌவால்கள் தொங்கும்*
*கோயில் மடங்கள், குழிகளென்றும்,*
*வேண்டாவிருந்தாய் நுழைந்து*
*இரவல் வீடுகளின் ஒட்டுத்திண்ணைகளிலும்,*

வீதியோரப் பறுகுப் பற்றைகளுக்குள்ளும்,
இந்தப் பாவச்சடத்தை விழுத்தியும் படுத்தும்
எத்தனை நாட்களுக்குத்தான்
இன்னும் காக்கமுடியும்?
சவமாகிப்போனால் மட்டுமா ஜடம்
இப்போமட்டும் என்னவாம்?
உயிர்மீதான பெருவிருப்பில்
ஓடிக் களைக்கிறது உடல்.
உத்தரவாதமற்ற நாளைய பொழுதில்
எதுவாகினும் நடந்து தொலையட்டும்.
இன்றுமட்டும் உயிர்தப்பியிருக்கும் வரம்தா.
எல்லாக் கடவுளரிடமும் இறைஞ்சி
அலைகிறது ஏழைமனம்.
இறைவனின் தீர்ப்பில்
எல்லாவற்றுக்கும் எல்லை விதித்திருப்பதாக
எழுதினானே ஒருவன்.
அவனிப்போ முன்னே நிற்பானாகில்
அவலத்தின் எல்லை எத்தனை அடிதூரமெனக் கேட்கலாம்.
சும்மா வெறும் ஆறுதலுக்காக வாய்க்கிடங்கைக் கிளறி
வார்த்தைகளைக் கொட்டிவிட்டு
அவனவனெல்லாம் தப்பிவிட்டான்.
அகப்பட்ட இழிச்சவாயர் நாமானோம்.
நெஞ்சுக்கும் தனக்கும் சொந்தமிலா வார்த்தைகளை
வழங்குவதில் எல்லோரும் வள்ளல்கள்.
தன்கூட்டில் இருந்தபோது ஒன்றாயும்
கூடுவிட்டோடி தூரதேசமரங்களில் குடியிருக்கும்போது
வேறொன்றாயும்
கத்துகின்றன 'எழுத்துக் காகங்கள்'.
காற்றில் பரவும் தம் குரல்களைக்கூட
நேற்றொன்றாய்,
இன்றொன்றாய்,
நேரத்துக்கொன்றாய்
மாறிமாறிக் கத்துகின்றன 'மரந்தாவிக் குருவிகள்'.
இரவோடிருத்தல் எத்தனை சுகமெனச் சொல்லலாம்

வாழ்ந்தாலல்லவோ தெரியும் அதன் வதை.
வீட்டைத் தொலைத்து,
பூசித்தெழும் எம் முற்றத்தின்
புதிய வைகறைகளைத் தொலைத்து,
நெஞ்சுக்குள்ளேதோ அதிசயம் நிகழ்த்தும்
கோயில்மணியின் குதூகலம் தொலைத்து,
வாசற்படலையில் பூவிழுத்தி வாசம்பரத்தும்
வேப்பமரத்தின் சிநேகிதம் தொலைத்து,
வெள்ளாப்புப் பொழுதின் வீரியம் தொலைத்து,
எல்லாவற்றையும் தொலைத்து
ஊரிருந்து வெளியேறி எத்தனை வருடம்?
எழில் குலைந்த இந்த இடைவெளியில்
ஆறியிருக்க நொடிதானும் அகப்படவில்லையே?
கால்கள்தான் பாவம் காவித்திரிகிறது.
புகைவண்டித் தொடராகப் புறப்பட்டோம்.
நானே எஞ்ஜின்.
மனைவியும், பிள்ளைகளும் பெட்டிகளாயினர்.
கைகாட்டி மரமின்றி
காடுமேடெலாம் புகுந்து ஓடுகிறது வண்டி.
ஓடியோடி அலுத்துவிட்டது.
நெஞ்சில் பால்வார்க்க ஒரு பச்சைக்கொடிதானும்
கண்ணிற்படவே இல்லை.
இங்குவராதே,
இங்கே வராதேயென
எங்கும் சிவப்புக்கொடிகளே தெரிகிறது.
இனியெம் வண்டித் தொடரை எங்கே நகர்த்துவது?
சரி தரித்துநிற்போம் வருவது வரட்டுமெனில்
உயிர்மீதான பெருவிருப்பு ஓடவைக்கிறது.
எல்லாமிழந்து வெறும் மனிதனாக
நாவற்குழிப் பாலம் மீதேறிய போதே
நான் செத்துவிட்டேன்.
இப்போ 'என்பாஃம்' செய்யாத வெறும் உடல்
ஊரூராய் இரந்து வலம் வருகிறது.
சந்தைக் கூட்டமெனக் கூடி

சரக்குவிற்க வந்தவரெல்லாம்
விற்றவரை போதும் வெகுலாபமெனச் சொல்லி
வெற்றுச் சாக்குடன் வீடு போய்விட்டனர்.
விளையாத காட்டில் என்னதான் விற்பாய்?
விட்டுவிட்டு நீயும் வீடுவந்து சேரென
வந்துபோன வாய்கள்
என்னையும் கூப்பிடுகின்றன.
முற்றமெல்லாம் முள்பரவிக் கிடந்தாலும்
சுற்றத்தோடிருப்பதே சுகமாம்.
பகற்பொழுது பரவாயில்லை
இரவுதான் கொஞ்சம் இடிக்கிறதாம்.
இஷ்டம்போல் சிறகுவிரிக்க இயலாதாம்.
கூட்டுக்குள்ளே குடியிருந்தால்
ஒரு குறையுமே இல்லையாம்.
எப்படி முடியும் என்னால்?
ஆறுமணிக்குள்ளே
அர்த்தஜாமப் பூசையேற்று அடங்கல்
கடவுளுக்கு வேண்டுமானால் சரியெனப்படலாம்.
நான் கட்டுகளேதுமற்ற சிட்டுக்குருவியல்லவா?
வரையறுக்கப்பட்ட வலயத்துள்ளே
என்னால் வாழமுடியாது.
நள்ளிரவிலும் எழுந்து நடப்பேன்
காவலரண்கள் என்னைக் கட்டுப்படுத்தலாகாது.
ஒரு ராஜகுமாரனென ஆரோகணித்து
நானென் பல்லக்கில் பவனிவருவேன்.
அடையாள அட்டையைக் காட்டென
யாரும் அதட்டக்கூடாது.
அது முடியாதெனில்
நானும் வரமுடியாது.
எனக்கிங்கு என்னதான் குறை?
சாவிரட்ட ஓடவேண்டியுள்ளதாய்,
வயிற்றுக்கு நாளாந்தம் வகைசெய்ய
நிவாரண வரிசையில் நிற்கவேண்டியதாய்,
ஊர்நினைவு உறுத்துவதாய்

வாழவேண்டியுள்ளது உண்மைதான்.
"எனக்குன் கையாலே கொள்ளிவைப்பாயா மகனே"
என்றானே எந்தை.
வாக்குறுதி முடிக்கும் வாய்ப்பிழந்து போகலாம்.
நினைக்கும் போதில் நெஞ்சில் வடிகிறது குருதி.
வாழ்வின் சுமை வருத்துவதும்,
பரவசங்களை இழந்ததுயர் படுத்துவதையும் தவிர
எனக்கிங்கு என்னதான் குறை?
நள்ளிரவில் எழுந்து நடக்கவும்,
நந்திக்கடற்கரையில் சரிந்து கிடக்கவும்,
வந்து தழுவும் தென்றலைச் சுகித்தபடி
'வட்டுவாகல்' வரை சென்று திரும்பவும்
ஏனென்று கேட்க எவருமற்ற சுதந்திரம்.
விடுதலையை நேசிக்கும் வேருடனும், விழுதுடனும்
கழிகிறதென் காலம்.
சாவின் விளிம்பில் நின்று தள்ளாடினாலும்
வன்னியில் மட்டும்தான்
வாழ்வுக்கொரு அர்த்தம் தெரிகிறது.
இங்கே மனதுள்ளே பூவாய்ச்சிலிர்க்கிறது நாளாந்தம்.
யாருக்கும் அடங்கோமென நிமிரும் நிமிர்விருக்கிறதே
அது என்மனதுக்கிசைவான மமதையுடன்
இணைந்து கொள்கிறது.
விலங்குகளற்று கையுதறிநடக்கும்
ஒரு விடிபொழுதுக்காக,
களங்களில் எம்பிள்ளைகள் காவலிருக்கும்
இரவும், பகலும்
அவர்களுக்காகப் பிரார்த்தித்து விழிப்பதில்
அலாதியான சுகம் தெரிகிறது.
"வென்றாலும் வாழ்வோம்
வீழ்ந்தாலும் வாழ்வோம்"
இந்தக்குரலின் குமுறலே வித்தியாசமானது.
என் உயிரையே தொட்டுப்போகிறது இதன்தொனி.
"நான் விழுவேன்
நாம் விழுவோம்

நாடு விழமாட்டாது” என்று
பாடுகின்ற இம்மண்ணின் பாடலிருக்கிறதே
எனக்கிது பரவசம் தருகிறது.
துயர்மேவிய நெஞ்சின் அடியிலே
சுனையூற்றொன்று சுரக்கிறது.
என்னை விட்டுவிடுங்கள்
எவரும் அழைக்கவேண்டாம்.
சிறையிருக்க என்ஜீவன் ஒப்புக்கொள்ளாது.
என்வாழ்வு எளிமையாக,
என்வாழ்வு இனிமையாக,
என்வாழ்வு வீரியம் சுவறியதாக,
மனிதம் வதைபடும்போதில் கொதிப்புற்றும்,
மனிதம் மகிழ்வுறும்போதில் சதிரிட்டும்,
வாழ்வு இங்கேயே கழியட்டும்
என் இறப்புவரை.
எனினும் வருவேனென் ஊருக்கு,
வருவேனென் வீட்டுக்கு,
வருவேனென் அப்பனுக்குக் கொள்ளியிட.
வரம்புடைத்துப் பாயும் வல்லமையை
ஒருநாள் எம்பிள்ளைகள் பெறுவர்.
இருளகற்ற ஒளிகொண்டு வருவர் எம்பிள்ளைகள்.
அப்போது வருவேன் அவர்களுடன்
தலை நிமிர்த்தியபடி.
□□

வெளிச்சம்
1999 மார்கழி - தை 2000

# வென்ற புளுகம்

முகிலுரசிப்போனது என்தலையை.
கைகளை எட்டினேன்
நட்சத்திரங்கள் தொட்டன.
வெளியே எரித்தது வெய்யில்
எனினும் தண்ணென்றிருந்தது என் மேனி.
காற்றெனக்குச் சேவகமாகக் கவரிவீசியது.
நேற்றுவரை செம்மண்புழுதியாகக் கிடந்ததெரு
இன்றென் காலடியில் கம்பளமானது.
அந்தப்பழைய சைக்கிளிற்தான் ஏறினேன்
அது பல்லக்காகிச் சுமந்தது.
பிரபஞ்சத்தையே வென்றபுளுகத்தில்
இன்று புதிதாய்ப் பிறந்ததுபோல நான்.
தேநீர்குடிக்கத் தேவஅரம்பையர் அழைத்தனர்.

• புதுவை இரத்தினதுரை

*இரவு விருந்து என்னுடனென்று*
*நேரில் வந்து இந்திரனே கூப்பிட்டான்.*
*முதுகில் இரண்டு இறக்கை முளைக்க*
*பறக்கத் தொடங்கினேன்.*
*மெத்த மகிழ்வில் மூச்சுத் திணறியது.*
*ஆனையிறவில் கீழே இறங்கி*
*நிஜவுலகில் கால்பரத்தினேன்.*
*பல்லாயிரவரைப் பிடித்துப் பசியாறிய*
*பொல்லா அசுரன் பிணமாகிக்கிடந்தான்.*
*ஆயிரம் தடவைகள்*
*என்னை பஸ்சிலிருந்து இறக்கி அவமானப்படுத்திய*
*அதிகாரத்தின் கொடிக்கால் முறிந்துகிடந்தது.*
*குளறக் குளற குரல்வளை குதறிய*
*வல்லூறுகளின் கூடுகள் புகைந்துகொண்டிருந்தன.*
*என்தவம் பலித்தது.*
*ஓடிவந்து உப்பளக்காற்றென் உடல்தழுவி*
*நலமா மகனே? என்றழுதது.*
*நீட்டிக்கிடந்தேன் என்நிலத்தில்*
*பிடியள்ளிப் போட்டேனென் வாயில்.*
*எத்தனை வதைசுமந்தோம் உனக்காக,*
*எத்தனை பிள்ளைகளைப் புதைத்தோம் உனக்காக*
*என்றேன்.*
*அழுதது ஆனையிறவு.*
*இனியுன்னை இழக்கோமெனச் சபதமிட்டு*
*எழுந்து நடந்தபோது*
*பிள்ளைகள் பளைநோக்கிப் போயினர்.*
□□

*வெளிச்சம்*
*சித்திரை - வைகாசி 2000.*

# அருவி நடக்கும் கரையெங்கும்

*நீரை இறைத்திறைத்து என் நெஞ்சிலும்*
*தலைமீதும் ஊற்று*
*உச்சி குளிரட்டும்.*
*காதற் குருவிகளின் மொழியை*
*என் காதோரம் ஏற்று*
*அயலெங்கும் மகிழ்வுற்றிருப்பதாய்*
*நான் அறியவேண்டும்.*

*மடியெங்கும் கொடிகளும், செடிகளும் பூக்கட்டும்.*
*வாசம் என் நாசி உணரவேண்டும்.*
*காற்றின் அலைவிலும்*
*ஒரு தாளலயம் கட்டாயம்.*
*கட்டற்று எல்லாக் கால்களும் உலவட்டும்.*
*விடிவுற்று என்மேனி விளங்கும்போது*
*கொடிபறக்கும் கம்பத்தின் கீழே*
*எல்லா முகங்களும் எழில்கொண்டிலங்கட்டும்.*
*அழுதவாழ்வு முடிந்ததென*
*எழுது ஒரு புதுப்பாடல்.*
*அவனியெங்கும் எம் பாடல்கள் பவனிவரட்டும்.*
*என் மேனியெங்கும்*
*வேர்பரவிக்கொள்ளட்டும் விடுதலை விருட்சம்.*
*மரங்களின் தலையிலெம்*
*நிரந்தரக் கூடுகளைக் கட்டுவோம்.*
*தாய் மடியில் தீயெழுந்தபோது*
*திசைக்கொன்றாய் தொலைந்த குஞ்சுகளெல்லாம்*
*அவர்தம் கூடுகளுக்குத் திரும்பலாம்.*
*வாசலெங்கும் கோலம் வரைக.*
*வருபவரெவரெனினும் வரவேற்போம்.*
*அருவிகள் நடந்துசெல்லும் கரையெங்கும்*
*இருள் கலைத்த பிள்ளைகளின் நடுகல்வரிசை.*
*நதிநீர் நனைத்துக்கொண்டிருக்கட்டும் வேர்களை.*
*எத்தனை கனவு சுமந்திருக்கிறேன்*
*முதலில் என்னைக் கரையேற்றுங்கள்.*
□□

*வெளிச்சம்*
*ஆனி - ஆவணி 2000*

# வரியெழுதிச் சாகும் வரம் தா

*ஆனையிறவுக்கு அயலூரானது*
*இந்த முரசுமோட்டை.*
*இங்கு மீண்டும் உழவு நடக்கிறது இப்போது.*
*சேற்றில் கால்புதையச் செருக்கோடொருவன்*
*காற்றில் சாட்டை விசுக்கிக் காளை விரட்டுகிறான்.*
*ஏரிழுத்துக் கொள்கிறது இரண்டு நாம்பன்கள்.*
*முகிலேறிய புளுகத்தில் உழுவோன் முகம்.*
*அவன் வேர்த்துளான்*
*எனினும் விடுவதாயில்லை.*
*ஆனையிறவுக்கு அடிபாட்டுக்குப் போன*
*எல்லைப்படையில் இவனொருவன்.*

போர்க்களத்தை வென்ற பூரிப்பில்
திரும்பி வந்து
ஏர்க்களத்தில் இப்போ இறுமாப்போடுழுகின்றான்.
வரம்புகளில்
வெண் கொக்குக்கூட்டம் விருந்துக்குக் காத்திருக்கு.
சீதளம் சுமந்துவந்து
மேனிதழுவிப் போகிறது வெள்ளாப்புக்காற்று.
பெருவாய்க்காலில் வழிகிறது
இரணைமடுத்தாயின் கருணைவெள்ளம்.
இரணைமடுத்தாயே!
கரம்கூப்பித் தொழுகின்றோம் கருணைமாதாவே.
மீண்டும் உன் நீர்பட்டுயர்ந்தன வயல்கள்.
தோண்டியெடுக்குமெம் சுரங்கத்தில்
பாய்ந்ததுன் சுனைநீர்.
அழுதவாழ்வழித்து உழுகின்றோம் தாயே
அதுபோதும்.
இனிவாழ்வமைத்துக் கொள்வோம் எம்வல்லமையால்.
ஆனையிறவில்
அருகிருந்த ஊர்களில்
மூண்ட நெருப்பணைக்கப் பாய்ந்த
மூவாயிரம் பிள்ளைகளே!
ஆண்டுகளென்ன
யுகங்கள் ஆயிரம் வந்து கழிந்தாலும்
எம் சந்ததிக்குச் சந்ததி கடத்தப்படும்
உங்கள் மின்சாரச் சரித்திரங்கள்.
காத்தவராயன் கூத்தோடு
உங்கள் கதையும் ஊரூராய் அரங்கேறும்.
அதை ஆயிரம் வருடங்களுக்குப் பின்னும்
பாய் விரித்திருந்து எம்பரம்பரை பார்க்கும்.
நேற்றுவரை
கூற்றுவனுலாவிய குடிமனைக்குள்ளே
வந்தோம் என்பதே ஒருவாழ்வு.
ஊர்திரும்பிய மகிழ்வுக்கு ஈடொன்றில்லை.
உழவு நடக்கிறது.

இனிப் பச்சைத்தாவணி கட்டிக்கொண்டு
வாசலில் நிற்கும் வயல்.
பருவமேறியதும் நிலத்துக்கு முத்தம்செய்யும்
நாணத்தோடு பயிர்கள்.
சூடடிக்கும்போது எழும்
புதுநெல்லின் வாசமொன்றே போதும்
வாழ்வின் அர்த்தம் எழுத.
ஓர் ஊர் மீண்டதுக்கே
இத்தனை குதிப்பும் கும்மாளமுமெனில்
நாடே நமக்காகும் நாளில்?
நானிருப்பேனா அந்த நாட்களில்?
புளியம்பொக்கணை நாகதம்பிரானே!
அந்த நாள்வரை நானிருக்கவேண்டும்
இருப்பேனா தம்பிரானே?
அந்நாளிலும் இருந்து
நாலு வரியெழுதிச் சாகும் வரம்தா.
□□

வெளிச்சம்
ஆனி - ஆவணி 2000.

# உயிரில் வளர்த்த தீ

அணையக்கூடும்
தணிந்து சாம்பலுமாகலாம்
கவனம்.
எரியும் உள்முகத்தீயை ஊதிமூட்டு
நெஞ்சுக்கூடு நெருப்பாய் எரியட்டும்
கோபவெக்கை குறையக்கூடாது.
சும்மா காற்றில் பற்றியா இந்தத்தீமூண்டது?
இந்த அனல்பிடித்தெரிய எத்தனை காலம்பிடித்தது.
எத்தனை பேரைத் தீய்த்து

*இந்தத் தீவளர்த்தோம்.*
*பச்சை விறகாய்க் கிடந்தநிலத்தில்*
*பாடுபட்டல்லவா தீமூட்டினோம்.*
*நூர்ந்துபோகாதிருக்க*
*எத்தனைபேரை நெய்யாகவார்த்தோம்.*
*அணையவிடக்கூடாது*
*ஊதிக்கொண்டேயிரு.*
*நெருப்பாகாதென்று சொல்வர்*
*காதில் வாங்கிக்கொள்ளாதே.*
*பற்றியெரியப் போகுதெனப் பதறுவர்*
*ஊதுவதை நிறுத்திவிடாதே.*
*இந்தத்தீயின் சுவாலையிற்தான்*
*மண்தின்னிகள் மரணிக்கும்.*
*வேலிபுகுந்த விஷஜந்துக்கள் வெருண்டோடும்.*
*பால்மணிக்கதிர் சப்பவரும் பன்றிகள்*
*பயந்தோடும்*
*நச்சுமரங்களின் வேர்கருகும்*
*இருளின் திரையெரிய ஒளிமுகம் மிளிரும்*
*சூரியன் எழும்வரை*
*ஊதிக்கொண்டேயிரு*
*தீ எரியட்டும்.*
*□□*

*வெளிச்சம்*
*புரட்டாதி - ஐப்பசி 2000.*

# வேகாவனம்

வேகாவனமென்றால் வெந்து தணியாக்காடு.
எரியாவனமென்றும் எழுதலாம்.
ஒட்டுசுட்டானும் வேகாவனமென்றே விளங்கிறது.
ஒட்டுசுட்டானுக்கு மட்டுமல்ல
வன்னி முழுமைக்கும் தகுமிந்நாமம்.
முல்லையும்,
மருதமும்,
நெய்தலும் சேர்ந்து
சொல்லவொண்ணா அழகுச் சோதியாய் மிளிரும் வன்னி

எம் தாயின் வயிறு.
தண்புனல் நிறைந்த தாமரைக் குளமும்,
வெண்கொக்குத் தவமியற்றும் விரிந்த வயல்களும்,
விண்தொட நிமிர்ந்த வியத்தகு வனமும்,
அலைவந்தெறியும் ஆழிவாய்க் கரையுமாக,
அழகெடுத்த; கலையுடுத்த அணங்காய்
வளம் கொழித்துக் கிடக்கின்றாள் வன்னிமகள்.
பால்சுரக்கும் மடிகனத்த பசுக்களும்,
வாலடித்துத் திமிரும் காளைகளும்,
வயலுழுது வரும் எருமைகளும்
வன்னிக்கு முதுசம்.
வைகாசிமாதம் வன்னிக்கு வளைகாப்பு.
அந்த மாதத்திற்தான் இங்கே பொங்கல்நடக்கும்.
காட்டு மரங்களுக்கும் அப்போதுதான்
வசந்தோற்சவம்.
பூத்துக்கிடக்கும் பூவனம்.
காற்றுக்கும் ஆயிரம் கச்சேரி
குழலெடுத்து ஊதிக் குதுகலிக்கும்.
கூத்து; வன்னி நிலத்தோடு கூடப்பிறந்தது.
தண்டையும், சிலம்பும் சிலம்பாத ஊர்களென
இங்கே எதுவும் கிடையாது.
ஆசைகள் பெரிதாய் ஏதுமற்ற அற்புதமான ஜீவிதம்.
கொத்துக்கு அளவான அரிசி,
குடத்துக்கு அளவான தண்ணீர்,
முள்ளுக்கும் நோகாத ஒரு வாழ்க்கைமுறை.
பொல்லாப்பெதுவுமின்றி இங்கே பொழுதுபுலரும்.
பண்டார வன்னியனும்
கைலாய வன்னியனும்
அடங்க மறுத்த அபூர்வமண்.
குருவிச்சி நாச்சியார் இந்தப்பூமியிற் தான்
ஆடினாள்,
பாடினாள்,
அடங்கினாள்.
அரியாத்தையென்ற எங்கள் பெரியாத்தை
ஆனை அடக்கிய அற்புதம் இங்கேதான் நடந்தது.

• புதுவை இரத்தினதுரை

வன்னிக்கு எவரும் விலங்கிட முடியாது
இது அடங்காப்பற்று.
அடங்காததில் இதற்கு அத்தனை பற்று.
காந்திதேசம் எங்களுக்கு கண்ணிவைத்த காலத்தில்,
விடுதலை அவாவிய அனைவருமே
விக்கித்து நின்ற நாட்களில்
அடங்கா மண்தானே அடைக்கலம் தந்தது.
இந்தச் சந்தனக்காடுகள்தானே தஞ்சமளித்தன.
வன்னி மண்ணே எமக்கு வளையாச்சு
வென்று மீண்டனர் எங்கள் வீரர்கள்.
மீண்டும் காலச்சக்கரத்தின் ஒரு சுழற்சியின் பின்
சங்கிலியன் தோப்பிருந்து
பண்டார வன்னியனின் பழைய அரண்மனைக்கு
அணையாவிளக்குடன் அடைக்கலமானோம்.
இன்றும் வன்னிமண்ணே எமக்குக் கவசமானது.
காட்டு மரங்கள்தான் எங்களுக்குக் காவலானது.
ஓடி வந்தபோது வாரி அணைத்தவளே!
வன்னி மண்ணே! நின்னை வணங்குகின்றோம்,
உன் பாதக்கமலம் பற்றினோம்.
வதையுண்டும் எழுந்தாய்
எரியுண்டும் நிமிர்ந்தாய்.
வீரத்திலூறியது வேகாவனம்.
□□

வெளிச்சம்
புரட்டாதி - ஐப்பசி 2000.

• புதுவை இரத்தினதுரை

# காளான் குடை நிழல்

*தேவ நதிகளுக்காக வரமிருக்கும் போதெல்லாம்*
*தாகத்துக்கொருதுளி தண்ணீருமின்றி*
*தவித்துள்ளோம்.*
*வாசமலரில் மனம்லயித்து*
*பறிக்கப் புறப்பட்ட ஒவ்வொரு தடவையும்*
*பூநாகம் தீண்டி நஞ்சுண்டோம்.*
*நிலவொளியை விடியலென நம்பி*
*சாமத்திலெழுந்தா சந்தியாவந்தனம்?*
*ஆழக்கிணறல்லவா*
*மேலே வரவேண்டுமெனும் விருப்பில்*
*தொங்குமெதையும் தொடநினைக்கிறது மனம்*
*வர்ணம்பூசும் கனவு*
*இடிந்த சுவர்களுக்கு இருக்காதா என்ன?*
*அடைகாத்த குஞ்சுகளில்*
*பருந்து கொண்டு போனதின் மீதியை*
*காக்கத் துடிக்காதா கோழி?*
*துடிக்கும்.*
*அதற்காகக் காளான்குடைநிழலிலா களைப்பாறுவது?*
*ஆலமர நிழலிலையானாலும்*
*பூவரசநிழலாவது வேண்டாமா*
*போய் அமர?*
□□

*வெளிச்சம்*
*தை - மாசி 2001*

# காற்றின் பாடலுக்குரியவர்

பொன்னள்ளித் தூவிய வானத்தின்கீழே
வனப்பின் உயிரெழுதிக் கிடந்தாள் எம்தாய்.
ஆறு நடக்கும்,
அருகெங்கும் பூவிரியும்
ஆனந்தபைரவியின் ஆரோகணம் பாடி
கானமிசைக்கும் கருங்குயில்கள்.
காற்று தலைதடவிப்போக
சேற்றில் கிடக்கும் செந்தாமரை சிரிக்கும்.
போற்றியகவல் பாடும் பொன்வண்டு.
முன்னரிப்படித்தான் இருந்தாளெம் அன்னை.
இன்று கூத்து முடித்த கோயில் வீதியில்
புழுதி வாரியிறைத்துப் போகிறது காற்று.
சுட்டெரிக்கிறது வெய்யில்.
சீரான தாளத்துடனிருந்த வாழ்வு சிலும்பிப்போக
இசையற்றுப் போனது இயல்பு.
சுகமறியா உடலாய்,
சுவையறியா நாவாய்
புகைமண்டிக் கிடக்கிறது எம் பெருவிளக்கு.
வெள்ளியிலான குங்குமச்சிமிழின் விழிகளில்
வழிகிறது துயரத்தின் துளிகள்.
கரும்பாம்பாய் நீண்ட கூந்தல்
கயிறாய் திரிந்து சடைபற்றிக் கிடக்கிறது.
சிரிப்பிழந்து போயின சிலைகள்.
முகிலெடுத்து முகம் துடைத்து,

• புதுவை இரத்தினதுரை

*நிலவெடுத்துத் திலகமிட்டு*
*சந்தோஷம் சூடிய சந்தனக்கும்பாக்கள்*
*பன்னீரைத் தொலைத்துப் படுத்தன.*
*எல்லா வாசலிலும் பிணப்பறை.*
*ஒவ்வொரு கூட்டிலும் சாவின்நிழல்.*
*எல்லோர் திண்ணையும் இருள்மண்டிக்கிடக்கிறது.*
*எதிர்காலம் பற்றிய கேள்விகள்*
*பதிலற்றுக் கிடக்கின்றன.*
*சரிந்து கிடக்கிறது தாழ்வாரத்தில்*
*சவமேந்திய கட்டில்.*
*சுடர் விளக்கும்,*
*தண்ணீர்ச் செம்பும்,*
*விரித்தகூந்தலும் விழிநீருமாக*
*சாவுக்கழுகின்றனர் பெண்கள்.*
*தந்தைக்காக,*
*மகனுக்காக,*
*மகளுக்காக,*
*தன் பாதிராஜ்ஜியத்தின் பங்காளியான*
*தாலிக்குரியவனுக்காக,*
*இன்னும் போய்த்தொலைந்த உறவுகளுக்காக*
*ஒவ்வொரு கூடத்திலும் இழவுகாக்கின்றனர்.*
*அழுவதும் எழுவதுமாகப் போரிடுகிறது பெண்மை.*
*இத்தனைக்குப் பின்பும்*
*களங்களில்,*
*காவலரண்களில்,*
*வெடிகுண்டைக் கட்டும் வீரருள்*
*நிற்பதும் அவர்கள் தான்.*
*காற்றின் பாடலைப் பாடியபடி*
*வானத்திலேறி வலம்வருகின்றன*
*அழுத உயிர்கள்.*
□□

*வெளிச்சம்*
*தை - மாசி 2001.*

# நடக்கும் நதி

*காற்றிலெம் உயிர்விளக்கு அணையாது
அலைக்கரங்களால் ஏந்தி
இத்தனை தூரம் எடுத்துவர
எத்தனை வதையுற்றது நதி.
பேரிருள் கவிந்த புள்ளியிலிருந்து புறப்பட்டு
பாதையெங்கும் கண்ணீர் விதைத்துப் போனது
அதன் பயணம்.*

முட்பற்றை மூடிய வழிநெடுகிலும்
மூச்சிரைக்க நடந்தது.
நாவுலர்ந்து நலிவுற்றும் அது நகர்ந்தது.
வழிமறித்த மரங்களுடன் மோதி
கரமுயர்த்திப் பெருங்குரலெடுத்து
விளக்கணையாது காப்பாற்றுங்களென
கூவிவிழுந்தன அலைகள்.
இன்றும் ஒளிபெறும் திசையெனும் நம்பிக்கையில்
நடக்கிறது நதி.
ஒன்று பத்தாகி உயிர்பெருகிப் பெருகி
பிரவாகிக்கிறது கங்கை.
இப்போ மாயப்பூச்சூடி
கரையெங்கும் வனப்பெழுதிக்கிடக்கிறது.
அழகில் மோகித்து வழிமாறக்கூடாது ஆறு.
நச்சுப் பூக்களும் வாசம் நல்கும்
எடுத்துச் சூடிப்போக மனம் ஏவும்.
பயணத்தைத் திசைமாற்றிப் போட
அணையெழுப்பியிருப்பர்.
அமைதிவழியே அழகெனச்சொல்லி
மாயக்குயில்கள் எம்கரைவந்து கூவும்
ஆழிவாய்க்கரை கிட்டும்வரை
நதிக்குச் சஞ்சலங்கள் கூடாது.
அணைக்கட்டுகளைப் புரட்டி அள்ளியபடி
நடக்கட்டும் நதி.
□□

வெளிச்சம்
பங்குனி - சித்திரை 2001

# மேற்குவீதியும் மேளச் சமாவும்

*தடையெனும் விதியெழுதிப் போவோரே!*
*எமக்கொரு விடைசொல்வீர்.*
*'கடைவிரித்தீர் கொள்வாரில்லை'*
*எனவே கதவிழுத்துப் பூட்டுங்களென*
*அடுத்தெமக்குக் கட்டளையா இடுவீர்?*
*தடையெனும் விதியெழுதிப் போவோரே*
*எமக்கொரு விடைசொல்வீர்.*
*யாரும் குனிந்துகிடந்து தீர்ப்பெழுதாதீர்*

இனியாயினும் நிமிர்ந்து பாருங்கள்.
முன்னரும் நீரெழுதிய தீர்ப்புகள் பல
மூச்சிழந்து கிடக்கின்றன.
இனியும் குனிந்துகொண்டு எழுதாதீர்
கொஞ்சம் நிமிர்ந்தும் பாருங்கள்.
சாளரங்களைத் திறந்து எங்கள் சாக்குரலைக் கேளுங்கள்.
கதவுகளை அகலவிரித்து எங்கள் காற்றையும் சுவாசியுங்கள்
பிணமெரிக்கும் வாடை அக்காற்றிலிருக்கும்.
உயிருரிக்கும் ஓலம் அக்குரலிலிருக்கும்.
கடல்களைக் கடந்து,
கண்டங்களைத் தாண்டி,
மலைகளையும், நதிகளையும் கடந்து வரும்
எங்கள் காற்றுடனும், கதறல்களுடனும்
கொஞ்சம் பேசுங்களேன்.
விழிதிறந்து எங்கள் திசைகளையும் பாருங்கள்.
தீயின் சுவாலையில்
பச்சைமரங்கள்கூட இங்கே பற்றியெரிகின்றன.
பூக்களின் தலையிலும்,
பொன்வண்டின் நாவிலும்,
ஆற்றிலும், அதன் கரைமருங்கிலும்கூட
பற்றியெரிகிறது பாவியரிட்ட பாழ்நெருப்பு.
திமிர் பிடித்த தீர்ப்புக்காரரே!
தீர்ப்பெழுத உங்கள் சிம்மாசனத்தில் குந்தமுன்னர்
நீர்த்துப்போய்க் கிடக்கும் எங்கள் நிலத்தையும்
கொஞ்சம் நிமிர்ந்து பாருங்கள்.
முற்றம் உழுதுபோகிறான் ஒருவன்
அவன் காலடியின் கீழே
சிக்குண்டு கிடக்கிறது எம்தேசத்தின் உயிர்.
சாட்டை எடுத்து விளாசுகிறான்
எம் தேகமெலாம் தோலுரிந்து தொங்குகிறது.
ஏனடா எரிக்கிறாய் என்றோ,
ஏனடா அடிக்கிறாய் என்றோ
அவனை எவனடா கேட்டீர்?
அடியென அவனுக்குச் சாட்டை கொடுத்தவனும்,

*சுடுவெனத் தோட்டா கொடுத்தவனும்*
*தடையென எமக்குத்தானே விதிக்கின்றனர்*
*என்ன கொடுமையடா இது.*
*தாகத்துக்குத் தண்ணீர் கேட்டோம்*
*அவன் தரவில்லை.*
*பசித்த வயிற்றுக்கு ஒருபருக்கை சோறு கேட்டோம்*
*அவன் தரவில்லை.*
*சுருண்டுகிடக்க ஒருதுண்டு நிலம் கேட்டோம்*
*அவன் தரவில்லை.*
*சுற்றம் சூழமகிழ்ந்திருக்க ஒரு நிலாக்காலம் கேட்டோம்*
*அவன் தரவேயில்லை.*
*தீர்ப்பெழுத வருவோரே!*
*இவையெல்லாம் தெரியுமா உமக்கு?*
*தடைவிதிப்போரே!*
*அழுதவிழிகளுக்கும் அடித்த கரங்களுக்குமிடையில்*
*எழுதமுடியுமா சமரசத்தீர்ப்பு?*
*முன்னரும் நீரெழுதிய தீர்ப்புகள் பல*
*மூச்சிழந்து கிடக்கின்றன.*
*இன்னுமா தீர்ப்பெழுதும் ஆசையிற் திரிகின்றீர்?*
*எல்லைகளை விழுங்கி,*
*நாடுகளை விழுங்கிச் செரித்து,*
*வானத்தையும், கடல்களையும் விழுங்கி,*
*விதானத்துக் கோள்களையும்*
*விழுங்கத் துடிக்கும் விழுங்கிகளுக்கு*
*உயிர்ப்பின் புள்ளிமேலேன்*
*இத்தனை கோபம்?*
*நெஞ்சுக்குழி நிறையக் கனவுசுமந்து*
*நெருப்புக் குளிக்கிறோம்.*
*எமக்கான விதியெழுதும் வலிமை எவருக்குமில்லை*
*நாமே நமக்கான நீதிபதிகள்.*
□□

*வெளிச்சம்*
*பங்குனி - சித்திரை 2001*

• புதுவை இரத்தினதுரை

# நெஞ்சக் கனவு

*முகிற்புகை காலடியிருந்தெழுவதாய்*
*அக்கனவு இருந்திருக்குமே.*
*நீ காமதேனுப் பசுவுக்குக் கரும்பு கொடுப்பதாகவும்,*
*தேவதாரு மரத்தடியில் பூச்சொரிந்து கிடப்பதாகவும்*
*கனவு விரிந்திருக்குமே.*
*ஜிகினாப் பட்டுக்களின் ஜொலிப்பில்*
*வெள்ளுடுப்பில் தேவதைகள் வந்து*
*சமாதான வரம்தந்து போவதாய்*
*கனவு வந்திருக்குமே.*
*அட பைத்தியக்காரனே!*
*கனவுகளுக்காகக் கண்ணயர்ந்த பொழுதுகளில்*
*ஒரு பதுங்கு குழியாவது வெட்டியிருக்கலாமே.*
*அவன் விடியவந்து குண்டு பீச்சும்போது*
*உன் குழந்தையாவது தப்பிக்கொள்ளும்.*
*திம்புவிலிருந்து மல்லாவிவரையும்*
*அம்பையும் வில்லையும் கீழே வையுங்களென்று*
*எத்தனைமுறை எவரெவரெல்லாம் வந்தார்கள்.*
*இத்தனைக்குப் பின்பும்*
*கனவுகளுக்குப் பின்னேதான் உன் கால்களா?*
*மாயக்கனவுகளில் மயங்கும்போது*
*நெஞ்சக்கனவு நிறைவேறாது போகலாம்.*
*கனவு மெய்ப்படவேண்டும்*
*எந்தக் கனவு?*
*எம் நெஞ்சக் கனவு.*
*□□*

*வெளிச்சம்*
*வைகாசி - ஆனி 2001*

# பயணிக்கும் படகு

அலையெற்றும் கடலேறி
வாழ்வுக்கான பாடலிசைத்துப் போகிறது
காற்றுதைக்கும் படகு.
நீராடும் பூக்களின் மீது
வயிற்றுக்கான குழலூதி
இருப்பதும் பறப்பதுமாகப் பட்டாம்பூச்சி.
உள்மறைக்கும் பிரயத்தனங்களின்றி

● புதுவை இரத்தினதுரை

*ஒட்டுப் பாவாடை கட்டிய பருவவாசல்*
*வதையின் கவிதையெழுதி வருகிறது*
*யாசித்தபடி.*
*இன்றாயினும் அடுப்பெரிக்கும் எத்தனமாய்*
*உப்பு வேணுங்களா?*
*வாசலிற் கேட்கிறது வலியேற்றும் பாடல்.*
*உச்சஸ்தாயியை என்னமாய் தொடுகிறான்*
*எடுத்த எடுப்பிலேயே எப்படிச் சாத்தியம்?*
*சோகம் கசிந்து கிடக்கிறது*
*வாசலில் உப்புச்சாக்கு.*
*தெருவிலிறங்கவே துடித்துப் போகிறது மனசு.*
*வீட்டிலிருந்தாலும் விடுவதாயில்லையே*
*தேடிவந்து ஏறுகிறது வலியூசி.*
*எங்கும் துயர்விழுங்கிய குருவிகளின் பாடல்.*
*எங்கும் வதையுரிக்கும் வாசல்களின் கவிதை.*
*எத்தனைக்கென்றுதான் பாடுவது*
*இந்த ரணம்கிளறும் பாடல்களை?*
*விதியெழுதியவனுக்கு இடிவிழக்கடவது.*
*'சங்கீத மேகங்கள் என்வீட்டு முற்றத்தில்*
*செந்தூரப் பூக்கொண்டு வீசியது'*
*உன்னிக்கிருஷ்ணனுக்கென்ன*
*ஒரு பொல்லாப்புமில்லை*
*இட்லியும் தொட்டுக்கொள்ள சட்னியும் இருக்கும்.*
*காற்றிலேறி வந்து ஜாலியாகப் பாடிப்போகிறான்*
*என் காதிலும்தான்.*
*நானென்ன செய்ய?*
□□

*வெளிச்சம்*
*ஆடி - ஆவணி 2001*

# வேட்டைக்காரர் வந்த போதும் வந்த பின்பும் இனிப் போகும் வரையும்



பூசிலிர்த்த வனத்தில்
பனிதடவிய காலையிருந்தது.
இருள்புணர்ந்த காடெங்கும்
சௌந்தர்யத்தின் ஜொலிப்பு.
நாசி துளைத்தேகியது வாசம் சுமந்தகாற்று.
வனப்பறவைகளின் வாயிருந்து
பாடலாய் வழிந்தது அமிர்ததாரை.
சல சலத்து நடந்து போயிற்று
நிறைமாதத் தாயாய் ஒரு குளவாய்க்கால்.
நாணற்புல் சடைத்த கரைமருங்கெங்கும்
மோனத்தவமிருந்தன
அடிமண்ணை நீரரித்துப்போக
தாடிமுளைத்த மரவேர்கள்.
இராமுழுதும் இன்பம் துய்த்தோய்ந்த மான்கள்
கரையிறங்கி மறுகரையேறிப் புழுதிகிளப்பிப் போயின
பகலுக்கான பாதுகாப்பைப் பலப்படுத்தி.
நதிக்கரையில் சுவடுவிட்டு
நகர்ந்திருந்தன யானைகள்.
வேட்டைக்காரர் வராத காலை
இப்படிக் காடுறைந்து கிடந்தது அந்தநொடிவரை.
அவரவர் அவரவர் கூட்டிலும், வீட்டிலுமாக
தத்தம் சுயத்தையும், இருப்பையும் எழுதியபடி
இருந்தது அவரவருக்கான வாழ்வு.
1505ல் முதல் வேட்டைக்காரன்
படகேறி வந்திறங்கினான் பீரங்கிகளோடு.
கரையெங்கும் சாதாளை நெடி.
மணலெங்கும் பிணமெரிக்கும் வாடை.

• புதுவை இரத்தினதுரை

காடுகலங்கி முதன்முதல் கண்ணீர்விட்டது.
பிறகு இன்னொருவன்
அதன் பிறகு வேறொருவன்.
வேட்டைக்காரரின் வருகை தொடர்ந்தபோது
காடு கன்னிமைகிழிந்து கதறியது.
வேட்டைக்காரரின் நிறங்கள் மாறின,
மொழிகள் மாறின
ஆயினும் காடு அழிவுறலானது இன்றுவரை.
ஒருநாள் தென்திசைக்காட்டுக்குத் தீமூட்டிவிட்டனர்
அகதியாயின மான்களும், மயில்களும்.
இன்னும் பேசாதிருந்தால் காடே எரிந்துபோகும்
போராடப் போயின புலிகள்.
புள்ளிமான்களும் புலியாகிப் போயின.
இப்போ வனமெங்கும்
வேட்டைக்காரர்களுக்கும் மூத்தகுடிகளுக்குமான போர்.
இந்த முதிர்காடு பறவைகளுக்கான தொட்டில்.
மிருகங்களுக்கான மரபுவழி முற்றம்.
யாருக்கும் குத்தகைக்குக் கொடுக்காத கொடிக்கால்.
விட்டுக் கொடுப்புகளுக்கு இடமற்ற உரிமம்.
காடு புகுந்த வேட்டைக்காரர்கள்
ஆதிக்குடிகளைப் பேச்சுக்கு அழைக்கும் அவலம்.
காடு மீளும் வரை
வேட்டைக்காரருடனான போர் தொடரும்
புலிகள் உறுதியுரைத்துள்ளன.
புள்ளிமான்களும் வரித்தோல் போர்த்துள்ளன.
மான்களின் கண்களில் இப்போ மையில்லை
கால்கள் வலுக்கொண்டுள்ளன.
பூச்சிகளின் வாயிற்கூடப் போர்ப்பாட்டு.
காடு கிளர்ந்தெழுந்துவிட்டது.
வேட்டைக்காரரெல்லாம் காடுவிட்டேகும்வரை
பாட்டின் சுருதி பிசகாது.
□□

வெளிச்சம்
ஆடி - ஆவணி 2001

# சிலையும் சிற்பியும்

*மலைமேல் உளியிறக்கி*
*சிலை வடித்தான் சிற்பி.*
*அழகுச்சிலை ஆடாதிருந்ததெனினும்*
*அது பேசும்.*
*காலை சிலைக்கு நெற்றி வியர்த்து*
*காற்சிலம்பெடுத்துக் கண்திறந்தது.*
*தாம்பூலம் தரிக்கக் குந்தியிருந்த கல்தச்சனுக்கு*
*கேட்டதோர் குரல்.*
*சன்னக் குரல்*
*வெகு பழக்கமான வெண்கலக் குரல்.*
*திரும்பிப்பார்த்தான் சிற்பி.*
*பேசியது சிலை.*
*டேய் சிற்பி!*
*ஒருமையிலெழுந்தது அதன் உரிமைக்குரல்.*
*சிலையென என்னதான் கிழிக்கிறாய் நீ?*
*பெருத்த மார்பு,*

• புதுவை இரத்தினதுரை

*சிறுத்த இடை,*
*கொட்டைப்பாக்களவு தொப்புள்,*
*யானைக்கிருப்பதுபோல் பெருத்த பிருஷ்டம்.*
*தோளில் முகம் சரித்து ஒருக்களித்து*
*தலைவாரும் சாயலில் என்வடிவம்.*
*இன்னும் எத்தனை காலத்துக்கென்றுதான் இவை?*
*இராஜராஜனின் அந்தப்புரத்திலும்*
*மகேந்திரவர்மனின் நீராழி மண்டபத்திலும்*
*முன்னருன் பரம்பரையும்*
*முலையைத்தானே மெருகு செய்தது?*
*சத்தியம் செய்*
*மதன கலசத்தை என்னில் செதுக்கியபோது*
*உனக்குச் சபலமில்லை?*
*முனிபுங்கராகவா என்னில் முலைவடித்தாய்?*
*பிச்சையேற்பவனை ஒரு சிலையாய்,*
*விறகு விற்பவனை ஒரு சிற்பமாய்,*
*களத்தில் வீழும் பிள்ளையை ஒரு வடிவமாய்*
*எழுதியதா உன்கை?*
*கண்ணீர் நதி,*
*வறுமை நெருப்பு,*
*களவாழ்வின் ஓர்மம்*
*யாவும் மென்மையற்றதென்றா*
*என் முலையிற் தொங்குகிறாய்?*
*இன்றுணர்ந்தேன்*
*உன் விரல்படும் போதெல்லாம்*
*எனக்கேன் வியர்த்துக் கொட்டுகிறது என்று.*
*நீ தொடத் தொட உயிர்பெறுகிறேன்*
*ஆயினும் வேண்டாம்.*
*நான் அகலிகைபோல் கிடந்தாலும்*
*என்னைத் தொடவேண்டாம் நீ.*
□□

*வெளிச்சம்*
*கார்த்திகை - மார்கழி 2001*

# ஒரு நிலாக்கால இரவில் காற்றெழுதிப் போன கவிதை

நிலவு என்னவோ அழகுதான்.
அதுவரும் வழியெங்கும்
அழகாய் புதிதுடுக்கிறது உலகு.
நெருஞ்சியேறிய நெஞ்சிற்கூட
வலிதெரிவதில்லை.
இருளும் நிலவும் பிணையும் போது
பூமி கல்யாணச் சிலிர்ப்பில் பொலிகிறது.
எப்போதுமே நிலாக்காலம் இப்படித்தான்.
வாரிச்சுருட்டித் தனக்குள்ளே வைத்துக்கொள்கிறது.
மன்மதனாட்டம் ஒரு மாயப்பூவெறிந்து
வசப்படுத்திவிடுகிறது.
மெல்லிய மெட்டொலி சப்திக்கும்
பள்ளியறையின் பரவசம் நிறைக்கிறது.
வனத்தின் மீதும்,
வயலின் மீதும்,
குளத்தின் மீதும்,
உருகித்தவழும் வாய்க்கால் மீதும்,
யாருமற்ற சாமத்தில் அடிவளவுத் தென்னை மீதும்,
ஓவென்று காற்றறையும் ஆட்காட்டி வெளி மீதும்,
கடல் மீதும்
சொக்குப்பொடி தூவிவிடுகிறது நிலவு.
என்னையும் உன்னுள்ளே வைத்துக்கொள் என்பதாய்
படுத்துமொரு பாடு.

பகலில் கானலடிக்கும் பற்றைவெளிகூட
என்னமாய் நிலவு வந்ததும் ஒளிர்கிறது.
நிலவு என்னவோ அழகுதான்
மண்ணின் மனநிலைக்கு ஏற்றதாய்.
நிலவுக்கு சகடயோக ஜாதகம்
வாழ்வும் தாழ்வுமான பலன்.
கர்ணபிரபுபோல அள்ளியும் சொரியும்
பாவம் ஒரு பரதேசி போலவும்
இரந்தபடியும் உலவும்.
30.10.1995 அன்று
ஒற்றையிரவில் ஊர்பிரிந்த மறுநாளும்
நிலவிருந்தது.
நிலவு தின்னும் பசியிற்தான் எவருமில்லை.
செம்மணி கடந்து
நாவற்குழி வந்தாறிய இரவில்
ஊமைக்காய வலியுடன்
சோகத்தலையில் தானுமழுதபடியிருந்தது
அன்று பரதேசி நிலவின் யாசிப்புலா.
தேஜஸ் முழுதும் கருகி
எட்டத்தில் புகாராய்த்தெரியும் நிழற்காட்சியாய்
நிலவு வரைந்தது நீர்வர்ண ஓவியம்.
மெல்லிய பனித்திரையுள்ளே
குத்து விளக்கொளியில் குடியிருக்கும் வெளிச்சம்
அன்று செம்மணியிருந்து
நாவற்குழிவரை தயிராடையாய் படர்ந்திருந்தது.
வயல்களில் உள்ளிறங்கி மீளவும்,
சேற்றில் புதைந்த காலெடுத்து வரம்பேறவும்,
தோளின்சுமை வீழும்போதில்
கைக்கணக்கில் தேடியெடுக்கவும்
வறுமையுற்றிருந்த நிலவு வாய்ப்பானது.
ஊரின் வேரிழுத்த வெப்பிசாரத்தில்
மூச்சுத்திணறிய முதிர்க்கொடிகளை
நாவற்குழிப் பாலத்தருகே கையால் வறுகி
புதைத்தேக வசதியாய்

*அன்றும் நிலவிருந்தது
மூக்கொழுகும் நீரும் பெருமூச்சும் கொண்டு
அழுதபடி.
இப்போ வன்னிக்கு மேலும் நிலவின் யாத்திரை.
அவசரமற்ற பயணியாய்,
காலக்கெடுவற்ற வேலைக்காரனாய்
நகரும் நிலவு.
அகதிக்குடியிருப்புகளென்றாயினும் வஞ்சனையின்றி
வாரியிறைக்கிறது அமிர்தம்.
பௌர்ணமி நாளில் பாலாபிஷேகம்.
எல்லாச் சுகமும் அடிவற்றிப்போக
உள்ளதே நிலவென்றாகிய வாழ்வு.
வற்றாப்பளை அம்மன் படித்துறையிறங்கி
நந்திக்கடல்மீதும்,
இரணைமடுக்குளத்தின் கரைமருங்குள காட்டின்மீதும்,
வனத்துளே பூத்துள மரங்கள்மீதும்,
ஒற்றை வகிடெடுத்தோடும் செம்புழுதித் தெருமீதும்,
ஏகாந்தமான எல்லாவற்றின்மீதும்
மனம் கிளர்ந்தெழும் ஸ்வரங்களாய்
வழிகிறது நிலவு.
களத்தில் வீழும் பிள்ளைகளைத்தூக்கி
ஒற்றித் துடைத்து
ஒரு முத்தமிட்டு
துயிலுமில்லம் விதைத்துமீளும் வழியெலாம்
துணைக்கு வருகிறது தானுமழுதபடி.
விதைத்த குழிமீதும் விழுந்தழுகிறது.
வெள்ளையடிக்கப்பட்ட கல்லறைகள்மீதும்,
மண்திட்டிகளான புதுக்குழிகள்மீதும்
நிலவு விழுந்தழும்போது
உள்ளே கிடக்கும் உடலே தெரிவதாய்
பார்த்தழத் துடிக்கிறது மனசு.
மௌனாஞ்சலி செய்யும் நிலவும்
ஏதோ சொல்லிச் சொல்லிப் போகும் மேலே.
முல்லைத்தீவு
தவம் கலையாக் கடலோரம்*

● புதுவை இரத்தினதுரை

சின்னக் காவிரிப்பூம் பட்டினம்.
பொன்னின் இழைவைத்திழைத்தாய்
என்னே அழகது.
ஓரிரவு சாமம் கழிந்த பொழுதொன்றில்
சங்காரம் நடந்தது.
கொழுத்தி எரித்தபடி எம்மடியேறிப் புகுந்தனர் யமர்.
கரையெங்கும் படுத்திருந்த படகுகளும்,
வலைகளும்,
அம்பாப்பாட்டும்,
உடல் தழுவும் உப்புக்காற்றின் சுகலீலையில்
மேனிசிலிர்க்கும் சோபிதமும்
இழந்துபோன இரவன்றும்
மேக முந்தானையில் முகம் மறைத்து
நிலவிருந்தது.
வழியெங்கும் விழிநீர் விழுத்தி
வெளியேறினோம்.
நிலவு கூட வந்ததாயினும் ஏதும் பேசவில்லை.
வெறுங்கையராய் வெளியேறி
ஆண்டுகள் கடந்த ஒருநாள்
ஓயாதலையொன்று ஊர்புகுந்த மறுநாள்
கைப்பற்றிய பீரங்கிகளைத் தடவியபடி
மீண்டும் புகுந்தோம் எங்கள் அழகிய கடலோரம்.
பொட்டுத் துணியுமற்ற மேனியராய்க் கிடந்தன
எம் உயிர் விதைத்த ஊர்கள்.
வல்லுறவுக்குள்ளான வயோதிப மாதாய்
கிடந்தது சின்னக் காவிரிப்பூம் பட்டினம்.
அழுகையும், ஆனந்தக் கண்ணீருமாக
கையெடுத்துத் தொழுதோம்
வற்றாப்பளை ஆச்சியை.
பரவசம்தரித்த முகத்தினராய்
நந்திக் கடலோரம் நின்று பாடினோம்
வானில் நிலவிருந்தது அன்றும்
அழுதபடி அல்ல.
'வென்றீரென் விழிமுன்னே' என்றோர் விடுதலைப் பாடலை
பாடியது நிலவு.

அன்றுதான் நிலவை அத்தனை அழகாய்ப் பார்த்தோம்
எத்தனை எழிலதற்கு.
இப்படித்தான் கிளிநொச்சியும்
புகுந்தழித்துப் பொல்லா அரக்கர் புக
விழுந்தடித்து வெளியேறினோம்.
வீட்டுப் படலை கட்டி
முற்றத்து மண்ணை முத்தமிட்டு
என்றும் பிரிந்திராக் கூடுவிட்டேகினோம்.
கிளிநொச்சி கண்ணெதிரே கட்டிய கோபுரம்
குடமுழுக்காட்டிய நகரம்.
உழுவோர் வியர்வைமுத்து விளைச்சலில்
கோர்த்துக் கட்டிய மாலை
அறுந்து புழுதியில் சிதறின மாணிக்கப் பரல்கள்.
கால்பட்ட திகைப்பூண்டாய்
குமரிநகரம் கொலுவிழந்து போக
போகுமிடம் தெரியாது புறப்பட்ட அந்நாளும்
கூட நடந்தது நிலவு.
பாதையெங்கும் வெளிச்சம் பரப்பி
வந்தது கீற்றுநிலா.
இரண்டு மாரியின் பின்
மீண்டும் கிளிநொச்சியின் கபாடம் திறந்து
குடை, கொடி, ஆலவட்ட மேந்தி
குடிபுகுந்தோம் ஊரில்.
இடியுண்ட கற்குவியலுக்குள்ளே
அத்திவாரங்கள் மட்டும் அழுதபடி.
மீட்ட மையத்தில் கொடியேற்றியபோது
நெஞ்சினுள்ளே நீலோற்பலம் பூத்தது.
அவிழ்த்துக் கலைத்த மாடுகள்
எம்மை அடையாளம் கண்டன.
அதுவொன்றே போதுமென
கண்டிவீதியைக் கையாறத் தழுவினோம்.
முற்றத்திருந்த மாதுளை
சற்று உப்பிப் பெருத்திருந்தது.
கிணறிறைத்தபோது எலும்பாகிய இரண்டு தமிழர்
வெளிவந்தனர்.

• புதுவை இரத்தினதுரை

கொஞ்சநாள் தூக்கம்தழுவாத நயனத்தினராய்
முற்றத்தில் கூத்தும் பாட்டும்.
எத்தனை காலத்தின் பின்னே எம் வளவு,
எத்தனை காலத்தின் பின்னே எம் வீடு,
திரும்பவும் திசையெங்கும் திருவிழா என
விருந்தும் விளையாட்டும்.
இரவுணவை எம்மோடுண்டது நிலவு.
இரணைமடுக் குளத்திலிறங்கி
நிலவின் பிம்பம் நீராடியது.
வயலின் மீதும்
வாய்க்கால் வரம்பின் மீதும்
நடப்பில் நடந்தது நிலவு.
ஆனையிறவு
பரணிக்குரிய பாட்டுடைப்பொருளாய்
மூவாயிரத்துக்குமதிகமான பிள்ளைகளின் குருதியில்
மீட்கப்பட்ட வெளியிது.
உப்பேரி உள்ளாலும்,
கண்ணிவெடி வயலாலும்,
சுற்றிவளைத்துப் பிள்ளைகள் புகுந்து
காத்திருந்த நாட்தொட்டுக் காரிருட்டு
வென்றன்று மட்டும் வெளிச்சம்.
துலாக்கால் போட்ட சோதனைச் சாவடி
நிலாக்காலம் ஒன்றிற்தான்
மீண்டும் நிலமாந்தர் வசமாச்சு.
'ஆனையிறவின் மேனிதடவி
போனது போனது பூங்காற்று'
பாடலை இன்றும்தான் பாடுகிறது நிலவு.
நாங்கள் அழுதபோதும் நிலவிருந்தது.
சந்தோஷம் கட்டிச் சதிரிடும்போதும் நிலவிருக்கிறது.
உலகெங்கும் நிலவு உளது
அழகென்னவோ இங்குதான்.
□□

வெளிச்சம்
கார்த்திகை - மார்கழி 2001

# சதங்கை கட்டிய வாழ்வு

இருள்சப்பிக் கிடக்கிறது வனம்.
ஒளியுடுத்திவரும் புலர்பொழுதைக்கூட
அடித்து விழுங்கத் துடிக்கிறது அந்தகாரம்.
சுப்ரபாதத்தைத் தின்றுசெரிக்கிறது சுடுசொற்கள்.
கோபுரப்புறாக்களை கொண்டேகுகின்றன பூனைகள்.
பூக்களை அரூபகரங்கள் பிடுங்கியெறிகின்றன.
கேட்பாரில்லையா? எனக் கேட்கிறது
தனித்த குரலெடுத்த ஒப்பாரி.
நாளைக்கான நம்பிக்கைசுமந்து நடக்கிறது
விடுதலைநதி.
நதியின் கரையெங்கும் மருதமரங்கள்.
மரங்களின் கிளையிருந்து பாடுகின்றன கிளிகள்.
சோகம் போர்த்திய பாடலெனினும்
உள்ளே எம்தேசத்தின் ஆன்மா ஒளிர்கிறது.
காலிற் சதங்கைகட்டிய வாழ்வு
நாளை நடனமாடவரும் நம்மோடு.
காற்றுக்கு ஒரு கவிஞன் கட்டளையிடுகிறான்.
ஆற்றுக்கும் அவனே ஆணையிடுகிறான்.
மூச்சுக்கு மூலாதாரமான முழுமுதல்களே!
மழையாக இறங்கி நிலமாடும் தேவதைகளே!
உலகின் ஒருகோடியில் மனிதம் தவமிருக்கிறது
அவர்களை வருத்தியது போதும் வரமளிப்பீர்.
பட்டதுயரும் கொடுத்தவிலையும் அதிகமென்பதால்
அபயகரம் காட்டி ஆதரிப்பீர்.
உலகமே கவிஞன் கையிலென்பதால்
அவன் கட்டளைக்குப் பணிவீர்.
□□

வெளிச்சம்
தை - மாசி 2002

## A-9 தெருவும் இனிவரும் உறவும்

*A-9 தெருவே!*
சிரிப்புக்குள் ஆயிரம் அர்த்தம் புதைத்து
ஏதோ சொல்லத் துடிக்கிறாய்.
மனதின் சாளரங்கள் திறந்து வீசு
சொல்ல நினைக்கும் வார்த்தைகளை.
நேற்றுவரை யாருமற்றுக் கிடந்தாய்
துகிலுரிந்து துச்சாதனர்கள் முலைநெரிக்க
நீ ஓலக் குரலிட்டபோது
கம்பன் புகழ்பாடும் இந்திரவிழாவில்
பத்மா சுப்பிரமணியம் பரதமாடிக்கொண்டும்
சேஷகோபாலன் தில்லானா பாடிக்கொண்டுமிருந்தனர்.
சதங்கை ஒலியிலும், சங்கீத ஸ்வரங்களிலும்
சபைக்குக் கேட்கவில்லை உன் சாக்குரல்.
உலகெங்கும் உலாப்போகும் அறிஞர்களும்
சாவுக்குப் பின்னும் ஜீவிக்கும் கனவில்
புத்தகங்கள் அச்சிட்டுக்கொண்டிருந்தனர்.
உனக்காக வார்த்தையுதிர்க்க

அவர்களுக்கெங்கே நேரமிருந்தது
கேட்க நாதியற்றுக் கிடந்தாய்.
வெள்ளைக்காரன் விட்டுப்போய் ஐம்பது வருடங்கள்
ஆயினுமென்ன?
அவன் போட்டுவிட்டுப்போன முடிச்சுகள்
இன்றும்தான் இறுகிறது.
காலத்துக்கு வயதேற ஏறவும் தளர்வின்றி
கழுத்தைத் திருகி மூச்சுத் திணறவைக்கிறது முடிச்சு.
தேம்ஸ்நதி தன்தேவைக்கெனப் பெற்ற உன்னில்
மகாவலியும், கனகராயன் ஆறும்
மல்லுக்கட்டிப் புரண்டன நேற்று.
இருதயத்துக்குக் குருதிகொண்டோடும் நரம்பறுந்துபோக
ஓமந்தையில் ஒட்டுப்போட்டது அதிகாரக் கொடிக்கால்.
விளக்குவைத்த குளம்கூட இருண்டிருந்தது
ஒளிகொண்டுலவிய புலிவீரர்மட்டும் உன்னோடு.
ஊர்மனைகளை ஒட்டஇறைத்து எல்லோரும்போக
வழிமறித்திருந்த பிள்ளைகள் மட்டும் உன்னோடு.
தோலுரிந்து
எக்ஸிமா செதிலாகப் படையெழும்பி
படுக்கைப் புண்ணோடு நீ படுத்திருந்தபோது
கதை முடிந்ததெனக் காற்றுரைக்கும் நாளுக்காக
காத்திருந்தனர் பலர்.
சிதையும் எரிந்துமுடியட்டும் செலவுக்குப் போவோமென
சிலர் சொல்லியுமிருந்தனர்
நடந்தது வேறாகிப் போனது.
அம்பகாமத்தில் ஜெயசிக்குறுவுக்கு அந்திரட்டிசெய்தோம்.
அன்று கொள்ளிவைக்க வராதவர்கள்கூட
இன்று பிண்டம்போடப் புறப்பட்டு வருகின்றனர்.
வென்று மீண்ட வீதியே!
புண்ணான மேனிக்கு பூதூவும் கூத்து நடக்கிறது!
ரணங்களைப் பற்றி யாருக்கும் கவலையில்லை.
ஏறிவந்த யமனுடன் பொருதி
முழத்துக்கு ஒருவராய் வீழ்ந்தவரை
எவர் நினைத்தார்?
புளியங் குளத்திலும், புதூர்ச் சந்தியிலும்

• புதுவை இரத்தினதுரை

வழிமறித்திருந்த சோதரியரை எவர்வாய் பேசிற்று?
தடுத்தாட்கொண்ட தென்தமிழீழ மறவர்
கொடுத்த விலைக்கு எவர்தலை குனிந்தது?
பழையன மறக்கும் பண்பு இதிலுமா?
*A-9* தெருவே!
உனக்கு வாழ்வு வந்ததடி.
இன்று கரைமருங்கான கண்ணிகள் அகற்றி,
முள்ளரண் தூர்த்து,
பீரங்கி நிலைகள் பின் நகர்த்தி,
துலாக்கால் தூக்கி
முதலில் சாமான் லொறிகளாம்
பின்னர்தான் 'பெருங்குடிமக்களாம்'.
காற்றின் திசையறிந்து நெல்தூர்த்தவும்,
முதலில் போனவரென்ற முடிசூடவும்,
ஆசனங்கள் அகப்பட்டால் அமரவும்,
பங்குப்பணம் கேட்கவுமென
இனி எத்தனை 'உறவுகள்' வந்துசேரும்.
கண்டிவீதியின் கரைமருங்குள்ள
காயமுற்ற மரங்களே!
குண்டுபட்டுக் குழியுண்ட வன்னி மண்ணே!
போய்வரப்போகும் உறவுகளுடன் பேசுங்கள்.
ஒளியேற்றிய வீரர்களுக்கு கொஞ்சம் ஓய்வு
சற்று விலகியிருப்பர்.
எம் பிள்ளைகளின் குருதிபடிந்த சுவடுகள்
இவையிவையென
உல்லாசப் பயணம் வரும் உறவுகளுக்குக் காட்டுங்கள்.
பார்த்து விட்டுப்போய்
கொழும்பில் பட்டிமன்றம் பேசட்டும்
கவிதை எழுதி விற்கட்டும்.
மீண்டும் உன்னை மூடும்வரை
சொந்தங்களென உனக்கு ஆயிரம்பேர்.
□□

வெளிச்சம்
தை - மாசி 2002

# வாசல் வருகை

*மீண்டும் வருகின்றோம்.*
*சிறைபட்ட ஊர்களை மீட்டு*
*கறைபட்ட தெருக்களைக் கழுவி*
*நாங்கள் வருகின்றோம் நம் வாசற்படிக்கு.*
*அழுதுகொண்டு வெளியேறிய அதே செம்மணியால்*
*கூடுகலைந்த கொடுந்துயரில்*
*வாரி மண்ணள்ளிக் கொட்டி*
*சாபமிட்டுச் சென்ற அதே தெருவால்*

● புதுவை இரத்தினதுரை

வருகின்றோம்.
எம் விழிகள் அழுதகாலம் முடிந்தது
இருள் அழிந்துபோக இனி உதயகாலம்.
முல்லைத்தீவை மீட்டு,
கிளிநொச்சியை மீண்டும் எமதாக்கி.
ஒட்டுசுட்டானில் நின்றவனை ஓடவிரட்டி,
கண்டிவீதி ஏறியவனைக் கலைத்து,
ஆனையிறவின் கபாடங்களை அகலத்திறந்து
வனவாசம் முடித்து வருகின்றோம்
பாடியபடி வன்னியிலிருந்து.
யாரும் எதிர்கொண்டழைக்க வரவேண்டாம்
நாமே வாசலுக்கு வருகின்றோம்.
ஊர்புகும் தோரணவாசல் நின்று அழைப்போம்
உம் பெயர் சொல்லி.
உடனே கபாடம் திறமின்.
வெண்சங்கும் செங்கம்பளமும்
வேண்டாம்.
தோளிற் தூக்கிச்செல்ல யாரும் வரவேண்டாம்.
கூடு திரும்பும் குருவிகளுக்கேன்
குதுகல வரவேற்பு?
எம் வெள்ளைப்புரவி பூட்டிய வில்லுவண்டி
இனி ராஜவீதியில் உலாவரும்
வெகு கம்பீரத்துடன்.
எந்தக் காவலரணும் வழிமறிக்கக் கூடாது.
தலைவணங்காத அதே கிறுக்குடன்
சந்தனப் பிரம்பும்
குமிழ் மிதிவடியும் இலங்கத் திரிவோம்
எமக்கானதை நாமே எழுதியபடி.
□□

வெளிச்சம்
பங்குனி - சித்திரை 2002

# கனவின் மீதியெழுதும் காலம்

*சிங்களக் கிராமமொன்றின் சிறுதெருவில்*
*காலாற உலவுவதாகக் கனவுவந்து*
*விழித்தும் துரத்துகிறது என்னை.*
*பலிக்காத பகற்கனவெனினும்*
*பழைய நினைவுகளைக் கிளறி*
*வேடிக்கை பார்க்கிறது சனியன்.*
*அது என் சிங்கள நண்பனின் சிற்றூர்.*
*நான் அதிகம் களைப்பாறியநிழல்.*
*தமிழனெனத் தள்ளாது*
*தூக்கி ஒக்கலையில் வைத்தஊர்.*
*அத்தனை அழகுகளையும் கொட்டி*
*எவன் படைத்தான் அந்த ஊரை?*
*சொர்க்கத்தில் வெட்டிய துண்டொன்றை*
*சுமந்துவந்து அங்கே போட்டவன் எவன்?*
*மனித உழைப்பதிகமின்றி*
*அதிசயமாய் அதன் அழகு நிகழ்ந்திருக்கலாம்.*
*எந்த ஒப்பனையுமின்றி*
*கிணற்றடி வாழையின் மதமதப்பாய்*
*ஒய்யாரமாய்க் கிடக்கும் ஊர்.*
*தினமும் மழைசிணுங்கும் மலைச்சாரலில்*
*காற்றில் சேலையுலர்த்துவதாய்*
*மேகம் மிதந்து செல்லும்.*
*மேலே பார்த்து அதிசயித்தபடி*

எந்த அவசரமுமற்று நகர்ந்துபோகும் நதி.
ஊர்முழுதும் ஓடும் வாய்க்காலெங்கும்
ஜென்மமெடுத்ததே குளிப்பதற்கென்பதாய்
பாவாடை மேலேற்றிக்கட்டிய தாமரைகள்
கூச்சமற்றுக் குளித்தெழும்.
கிராமத்தை ஊடறுத்து கிழக்கு மேற்காக
புகைவண்டிப் பாதைபோகிறது.
தார்வீதியும் தண்டவாளமும்
அருகருகாய் இருப்பதால்
றெயில் ப்யணிகள் பஸ்சுக்கும்
பஸ் பயணிகள் றெயிலுக்குமாக
கைகளை ஆட்டியபடி இவ்வூர் கடப்பர்.
விரைவுவண்டி தரித்தேகா ஸ்டேசனொன்றும்
அங்குண்டு.
ஆற்றுக்கு மேலான பாலத்தேறி
அக்கரை போகவேண்டும் அதற்கு.
மாலைச்சூரியன் மலையில் இறங்குவதை
இந்தப் பாலத்தில் நின்று பார்க்கவேண்டும்
பிறவி பலன் பெறும்.
மலையும்,
மாலைச் சூரியனும்,
பச்சை போர்த்திய வயல்களும்,
ஈரலிப்பான இதமான காற்றும்,
உள்ளேயுள்ள ஊர்களிருந்து ஓடிவரும்
வண்டிற்பாதைகளும்
என்னை விட்டுப் போவாயா நீயென
வாரிச்சுருட்டித் தன்னுள் வைத்துக்கொள்ளும்.
அத்தனை அழகும் சேர்ந்து
எம்மைப் பித்தனாக்கிவிட்டுப் புன்னகைக்கும்.
விரலுக்கேற்ற வீக்கமாய்
ஒரு சின்ன பஸ்ராண்ட்,
அஞ்சாறு கடைகள்,
ஆண்களுக்கும் பெண்களுக்குமான
இரண்டு பாடசாலைகள்,
ஊரின் நடுவில் சடைவிரித்த அரசமரம்,

அதனடியில் சித்தார்த்தன் தவமிருக்கும்
சின்ன விகாரை
போகும் ஒவ்வொரு தடவையும்
அங்கேயே தங்கிவிடச்சொல்லும் மனது.
தங்கிப் பிரியும் ஒவ்வொரு முறையும்
வலிசுமந்து வெளியேறும் இதயம்.
வெள்ளைத் துகிலுடுத்த பஞ்சுப்பொதியென
தாமரைத் தட்டேந்திய சிறுமிகள்
பூசைக்குப் போவர்.
கூட்டியள்ளிக் கொஞ்சவேண்டும் போல
அத்தனையும் அழகுப்பொம்மைகள்.
மெல்லக் காற்றுலவுவது போல
பூமிக்கும் நோகாமல் நடந்து
எவரையும் இறாஞ்சிக்கொண்டு போவர் இளம்பெண்கள்.
வரட்சியில்லாத அந்த வனப்பு
ஈரப்பலாக்காய்க்கு எவர்கொடுத்த வரம்?
முப்பது வருடங்களுக்கு முன்னர்
ஒரு பௌர்ணமிநாளில்
அந்தக் கிராமத்தில் இருந்தேன் கடைசியாக.
என் சிங்களத்தோழன் சந்தகிரி வீட்டில்
இறுதியாகத் தமிழனுக்கு விருந்துநடந்தது.
இலங்கைத் தேசியம்,
இனங்களை மீறிய வர்க்க உறவு,
இரு இனங்களையும் இணைத்த பாட்டாளிகளின் புரட்சி
இப்படி என்னென்னவோ எல்லாம் பேசியபடி
அந்தக் கிராமத்தின் தெருவில் உலவினோம்.
வயலில் நடந்தோம்.
ஜில்லென வந்து தழுவும்
மலைச்சாரற் காற்றை அளைந்தபடி
மலைகளை அகற்றிய மூடக்கிழவனைப் பற்றி
பேசியதாயும் நினைவு.
சந்தகிரியின் தங்கைதான் பராமரித்தாள்.
குளிக்க ஆற்றுக்குப் போனபோதும்
குளித்துத் திரும்பியபோதும்
அவளும் கூடவே வந்தாள்.

• புதுவை இரத்தினதுரை

வழமைபோல் அன்றும் பிரியும்போது
மீண்டும் சந்திப்போமெனச் சொல்லிக்கொண்டோம்.
பஸ்ராண்ட்வரை வந்து
வழியனுப்பி வைத்தனர் சந்தகிரியும் தங்கையும்.
எல்லாம் நேற்றுப்போல நிழலாட
முப்பது வருடங்களை விழுங்கிவிட்டதா காலம்?
இன்று கனவிலேன் வந்தது அந்தக்கிராமம்?
சந்தகிரியை மீண்டும் சந்திக்கவில்லையே
எங்கிருக்கின்றாய் நண்பா?
அந்த ஊரில் அதேவீட்டிற்தானா?
பன்னிரண்டு முறை இடம்பெயர்ந்து
இப்போ வன்னியிலிருக்கிறேன் நான்.
இடையில் நடந்ததனைத்தையும்
மறந்துவிடுவோம்.
நீ இப்போதும் ஜே.வி.பியின் செயற்குழுவிலெனில்
இன்றையகனவை நான் சபிக்கிறேன்.
நாம் மீண்டும் சந்திக்கும்வாய்ப்பு
இப்போதுதான் அதிகமுண்டு.
அதே ஊரில்
அதே ஆற்றின்மேற்போட்ட பாலத்தில்
அதே ஜில்லெனக் காற்றுத்தவழும் வயல்களில்
சந்திக்க முடியும் தோழனே.
உன் தங்கைக்குச் சொல்க
எனக்கு மூன்று பிள்ளைகளென்று.
கனவின் மீதியெழுதும் காலம் வந்துளது
கைவிட்டுவிடாதீர்.
நல்ல நண்பர்களாக,
நல்ல அயலவராக,
ஒன்றெனில் ஓடிவரும் உறவினராக
அருகருகாய் வாழமுடியும்
உங்கள் கைகளிற்தான் எல்லாமும்.
□□

வெளிச்சம்
பங்குனி - சித்திரை 2002

# ஓவென்றிரையும் காற்று

யாருமற்ற ஊருக்குள்
ஓவென்று இரைகிறதே காற்று.
என்ன நடந்தது இங்கு
எல்லோரும் எங்கு போய்விட்டனர்?
தெருவில் புழுதியளையும் சிறுவரெங்கே?
அல்லிப் பூவாட்டம்
ஆற்றில் குளித்தெழும் பெண்களைக் காணோமே.
உலாவரும் கொம்பன் மாடுகளும் தொலைந்தனவா?
பாடும் குயில்களும் கிளிகளும் பறந்தனவா?

சலசலத்தோடும் இரணைமடு வாய்க்காலின்
சந்தனநீரை உறிஞ்சியவன் எவன்?
நெற்றியிலிட்ட ஒட்டுப்பொட்டாய்
நிலவுவருமே
எவன் களவெடுத்துப் போனான் அதை.
காடதிரக் கேட்குமே காத்தான் கூத்துப்பாட்டு
அண்ணாவியின் வாயை அடைத்தவன் யார்?
அழுத நாளிற்கூட கலகலவென்றிருந்த ஊருக்கு
எவரிட்ட சாபமிது?
கண்பட்டுப் போனதோ கற்பகவிருட்சம்?
கட்டிய கச்சையை அவிழ்த்து
ஏன் மேலாக்குப் பிடிக்கின்றனர் எல்லோரும்.
சிறையிருந்தபோதே சிரித்தவர்கள்
ஒப்பந்தம் என்றதும் உருகிப்போனார்களா?
ஓமந்தைக்கு அப்பாலான உலகில்
தங்கமழை பொழிவதாக யார் சொன்னது?
மூச்சுவிடக் காற்றைத் தவிர
எல்லாவற்றுக்கும் தடையிருந்தது நேற்று.
எவரும் அழவில்லையே அப்போது
வரும் பகையெதிர்க்கும் வல்லமையுடன்
நிமிர்ந்த வாழ்வுக்குரியராய் இருந்தோம்.
வீதி திறந்ததும் ஏனிந்த விபரீதம்.
இடி தாங்கிவிட்டு இருக்கிறது மாங்குளம்.
தேகமெங்கும் குண்டுபட்டும்
போகப் புறப்படவில்லையே புளியங்குளம்.
இவர்களுக்கு மட்டுமேன் இத்தனை அவசரம்?
□□

வெளிச்சம்
வைகாசி - ஆனி 2002.

# தேவி எழுக

*தேவி எழுக*
*இந்தச் சிறுமுல்லைக் காடதிர.*
*ஆவி கலங்குமெமை ஆதரிக்க நீவருக.*
*தேவி எழுக*
*இந்தச் சிறுமுல்லைக் காடதிர.*
*கூவும் குயிற்பாட்டெம் குடிமனையிற் கேட்டிடணும்*
*தூவும் மழைச்சாரல்*
*சுடு நிலத்தில் வீழ்ந்திடணும்.*

தவித்த வாயடங்கத் தண்ணீர் பெருகிடணும்.
அவித்த கிழங்குண்டு
அந்தரித்த உயிர்களுக்கு
விதித்த தீர்ப்பதனை விலக்கிச் சுகம்தருக.
நதியில் இறங்கிடணும் நம் கால்கள்
இற்றை வரை
கொதித்த உடலமெலாம் குளிரும் நிலைவரணும்.
வாசலெங்கும் கோர வல்லூறின் எச்சங்கள்.
வீசும் காற்றினிலும் வெடிமருந்தின் உச்சமணம்.
சாவின் மணம் போதும்.
சாக்காட்டின் பூமத்தம்
பூவின் மணம் போதும்
புது வசந்தம் வீசட்டும்.
இரந்திரந்து எல்லா இரவுற் திண்ணையிலும்
உறங்கியதும்
பட்ட உத்தரிப்பும் போதுமடி.
கரம் தொழுதோம் எங்கள் கண்ணீருக்கென்னபதில்?
வரம் தருவாய் அழுத வாசலினி விளங்கட்டும்.
விண்ணைக் கிழித்துந்தன் விழிதிறந்து
எமைப்பார்த்து
புன்னகையை நல்காய் பெருமாட்டி.
கையிலுள்ள
உடுக்கினொலியிந்த உலகேழும் ஆர்ப்பரிக்க
மிடுக்கோடுனது சிறு மெட்டியொலி கேட்டிடணும்.
கண்டி நெடுஞ்சாலைக் கரையெங்கும்
பூமலர்ந்து
வண்டூதும் பாடல் வரணும்.
ஊர்புகுமெம்
தேர்களிலே உந்தன் திருமுகமே இலங்கிடணும்.
நீர்தெளித்து வைத்த நிறைகுடங்கள் யாவினிலும்
நெற்றித்திலகம் நிலைத்திடணும்.
வன்னியிலே
பெற்ற வரங்களுடன் போகுமெம் பிள்ளைகளின்
வெள்ளைப் புரவிகளால் வீதியெலாம் ஜொலிப்புறுக.
கள்ளி; சிறுநெருஞ்சிக் காட்டிடையே தீயெழுக.

• புதுவை இரத்தினதுரை

மீண்டும் துளிர்த்தெங்கள்
முல்லை வனம் பூச்சொரிக.
தோண்டும் குழியிருந்து
சுனைநீர் பெருகிடுக.
இடையில் கடல்கடந்து இடம் பெயர்ந்தோம்.
இன்றோ பார்
தடைகள் உடைத்தெங்கள் தார்வீதி மீள்கின்றோம்.
ஆறு வருடமதாய்
அடை காத்து
அடை காத்து
வீறுடைய குஞ்சுகளை வெளியே வரச்செய்தோம்.
சூரியனின் சூட்டில் சூல்கொண்ட மலையிலினி
காரிருட்டுமேகம் கவியாது;
விடுதலையின்
வேரினிலே எந்த விஷஎறும்பும் கடியாது.
மீன்பாடும் வாவி மிளிரும்,
இரணைமடு
வான்பாயும்; கோணவரைமீது முகிலிறங்கும்.
பாலாவி நீர்கொண்டு பாடும்;
கீரிமலை
ஆளாகி மீண்டும் அழகாய் புதிதுடுக்கும்.
வன்னிமண் தன்னை வணங்குகின்றோம்;
இத்தனை நாள்
கண்ணின் இமையாகிக் காத்தாள்
அவள் முலையில்
பாலருந்திப்பெற்ற பலத்தால் நிமிர்ந்துள்ளோம்.
தேவி எழுக
இந்தச் சிறுமுல்லைக் காடதிர.
ஆவி கலங்குமெமை ஆதரிக்க நீவருக.
தேவி எழுக
இந்தச் சிறு முல்லைக் காடதிர.
□□

வெளிச்சம்
வைகாசி - ஆனி 2002

# நிர்மலியாய் நீ

*என்விதி எனக்கென்றாயிற்று*
*நீயேன் அழுகின்றாய் அதற்கு?*
*கடலிழுத்துச் செல்லும் எனக்காகக் கலங்காதே.*
*துயரேதுமின்றி நதிநீரிறங்கி நீராடு நீ.*
*மற்றவரின் துயருக்கெல்லாம்*
*அழுவதே வழக்கென்றிருந்தால்*

• புதுவை இரத்தினதுரை

கண்ணீரில் முக்குளித்திருக்குமே உலகு.
எனக்காக நீயும்
உனக்காக நானும் அழுவதெனில்
சந்தோஷமெங்கே தலைவிரிக்கப்போகிறது?
அழுவதை நிறுத்தி
துயரற்றிருக்கத் துணிக.
நான் கடல்மீண்டு வருவேனெனும் கனவிலிருக்காதே.
என்னைத் துடைத்தெறிந்துவிட்டு
எழுது புதுப்பாடல்.
இந்தா மூச்சுத்திணறத் தொடங்கிறது.
வாழ்வின் இறுதிக்கணத்தின் வதைசூழ்கிறது
எனினும் வாழ்ந்த உலகெண்ணிச் சிரிப்புவருகிறது.
பொய்பூசிய மனிதருள்ளும்
நீயிருந்தாய் மெய்யாடை தரித்து.
வசந்தம் தொலைத்த ஒற்றைமரமாய்
இருந்த என்னில் படர்ந்தாய் கொடியாய்.
எத்தனை பசியமரங்களிருந்தன பக்கத்தில்
அத்தனையும் எறிந்துவிட்டு
பற்றிப்படர என்னகண்டாய் என்னில்?
அடி பைத்தியக்காரி!
இப்போதும் பின்தொடர்ந்து வந்து
ஏன் கையசைக்கிறாய் கரையில் நின்று?
அலையழிக்கும் மணல் எழுத்தாய்
என்னை அழித்துவிட்டுப் போ.
ஊருக்கள் புகுந்துகொள்.
உலகறியா எம்முறவை எரித்துவிட்டு
மனதில் என் நினைவகற்றி
நிர்மலியாக இருப்பாய் நீ
என்மீது வைத்த அன்பு உண்மையானால்.
□□

வெளிச்சம்
ஆடி - ஆவணி 2002




# திருவிழா முடிந்த மூன்றாம் நாள்



*ஆரவாரமும்*
*அரோகராச் சத்தமும்*
*கூவியழைத்த வியாபாரக் குரல்களும்*
*ஓய்ந்துபோக*
*வேலவன்வீதி வெறிச்சோடிக்கிடக்கிறது.*
*சனநரல் வடிந்த நல்லூார்த்தெருக்களில்*
*மீண்டும் சுகம்வரத் தொடங்கிவிட்டது.*
*காற்றில் எழுவதும் குந்துவதுமாக*
*கடலைசுற்றிய கடதாசிகள் சில.*
*ஒருவரற்று உறைந்திருக்கும் வீதிகள்*
*எத்தனை அழகு.*
*இன்னும் அகற்றப்படாமல்*
*'இங்கே துப்புங்கள்' வாளிகள்.*
*மனிதவெக்கையற்ற வெளிகளே*
*ரம்மியமானவை.*
*எவரும் வரமாட்டார்களா என்னிடம் என்பதாய்*
*தேர்முட்டிப்படிகள் பெருமூச்செறிகின்றன.*
*தினமும் வெளிவீதியுலவிய அசதியில்*
*வள்ளி வலிதாளாமல் பள்ளியறையில்.*
*தந்தையைக் காணாதிருந்த தவிப்படங்க*
*தெய்வானை இந்திரலோகம் போய்விட்டாள்.*
*முருகன் இன்னும் விளையாட்டுப் பிள்ளைதான்.*
*மயிலேறிப் போனான் காலையில்*
*கோயில் திரும்பவில்லை இன்னும்.*
*ஆலயக் கதவில் பூட்டு.*

● புதுவை இரத்தினதுரை

குருக்கள் வீட்டில் அன்ரனா திருப்பப்படுகிறது
பொதிகைக்காக.
மேற்கு வீதியில் முத்துவிநாயகரும்
ஈசானமூலையில் மனோன்மணி அம்மனும்தான் பாவம்
இனி எவர்வந்து தேடுவர் இவர்களை.
பாதாளக்கிணற்றில் சாகஜம் புரிந்தோர்
பலகைகளைக் கழற்றிக்கொண்டு
போயிருப்பர் வல்லிபுரக்கோயிலுக்கு.
பாம்புக்காரன் எங்கு போயிருப்பான்?
திருவிழா என்றாலே களியாட்டம் என்றாயிற்று.
எல்லோரும் ஊமையராகி
உண்டியலிலேயே கவனமாயிருக்கின்றனர்.
பிரசங்கக்காரர்களுக்கு பொன்னாடை கிடைத்திருக்கும்
தடவியபடியிருப்பர் சந்தோஷத்தில்.
பூனூல் மார்பிற் துலங்க
ஒரு பிராமணன் கொத்துரொட்டி கொத்தினானே
அவன் புரட்சிக்காரன்.
தலைவணங்கலாம் அந்தத் தகுதிக்கு.
உடல் வருத்தி உழைத்தபணம் நிலைக்கும்.
பூஜை செய்வதிலும் இது பெரியதொழில்.
திலீபனின் நினைவுத்தூபியிருந்த இடத்தில்
சிதிலமாகிய கற்கள்மீதாயினும்
யாரேனும் பூக்கள் வைத்திருப்பார்களா?
இடித்தவனை விடுங்கள்
தூபித்துண்டங்கள்மீது ஏறியிருந்தவர்களை
என்ன செய்யலாம்?
இம்முறை நல்லபடியாக நடந்து முடிந்ததாம்
நல்லூர்த் திருவிழா.
கிழடொன்று கூறிச் சென்றதைக் கேட்க
சிரிப்பு வந்தது.
□□

வெளிச்சம்
ஆடி - ஆவணி 2002

# மகளான பெண்ணுக்குத் தந்தையான ஆணிடமிருந்து

*வருடத்தில் ஒருநாளாகிய ஊர்வலமொன்று*
*வாசகங்கள் சில*
*வீதியிற்கட்டிய பதாகைகளும் சிலபாடல்களும்*
*போதுமா உனக்கு புரட்டிவிடுவாயா மலையை?*
*நானே என்னை மறைத்தெழுதும் கவிதைகளில்*
*உன்னிடமிருந்து தப்பமுடியுமே.*
*என்னை அறியாமலே எனக்குள்ளேயும்*
*எத்தனை மடிப்புகளும் பூட்டுகளும்.*
*நோயின் கூறுகள் ஆழத்திற் கிடக்கிறது.*
*பேச்சாயினும், எழுத்தாயினும், பாட்டாயினும்*
*வார்த்தைகளெல்லாம் உண்மைகளல்ல;*
*உனக்கானவையும் அல்ல.*
*எப்படித் தொடங்குவாய் உழவாரத்திருப்பணி?*
*பாசிபடர்ந்துள்ள பாழ்கிணற்றில்*
*தூர்வாரும் வேலையை எங்கிருந்து ஆரம்பிப்பது?*
*உன்மீது படர்ந்தழுத்தும் சுமையை,*
*சுமைதரும் வலியை*
*எந்தப்புயலும் வந்து எடுத்தெறியாது நீயே புயலாகும்வரை.*
*அப்பனுக்கு அடிமையாய் ஆத்தாள்,*
*எனக்குச் சேவகியாக மனைவி,*
*மகளுக்கு ஆண்டையாக மருமகன்*
*இழையொன்றாயினும் அறுந்துபோனதா இதுவரை?*
*எல்லாம் அப்படியேதான்.*
*நேற்றுப்போல் இன்று இன்றுபோல் நாளையுமா?*
*வேண்டாம் எங்கிருந்தாவது தொடங்கு.*
*காஞ்சூரமரத்துக்கு கோடரிபோடு சாய்ந்து விழனும்.*
□□

*ஈழநாதம்*
*10.10.2002*

# காத்திருப்பு

காத்திருப்பதில் எந்தக் களங்கமுமில்லை.
எம் கவிதைக்குரிய பொருள்
நோவடையாவரையும் காத்திருப்பதில்
எந்தப் பழியுமில்லை.
இத்தனைநாள் தலைநோகச் சுமந்தசுமை
அதற்குரிய முதல்மரியாதையுடன்
இறக்கிவைப்பது மகிழ்ச்சிதான்.
வதைசூழ்ந்தும்

*வலிதாங்கியும்*
*பொன்னகரம் நோக்கிப் புறப்பட்டபயணம்*
*வழியில் நிறுத்தப்படுவதெனில் எத்தனைதுயர்?*
*நாளைய காலை நம்மைப் பழிக்கும்.*
*எனினும் என்ன வந்துவிட்டது இப்போது?*
*எதை இழந்துவிட்டோம் நாம்?*
*சுமையிறக்கி வைத்ததுகூட*
*மீண்டும் தூக்கக்கூடிய தோள் உயரத்திற்தானே.*
*சற்று இளைப்பாறி இருக்கின்றோம்*
*அவ்வளவேதான்.*
*காலில் எந்தத் தளர்வுமின்றி*
*மீண்டும் நடக்கும் பலம் பெறுவதற்கு*
*நெஞ்சில் நம்பிக்கைத் துளிர்ப்புடன்*
*இடத்தை இலக்கு வைத்தபடி*
*காத்திருப்பதெனில் களங்கமில்லை.*
*பயணம் தொடரும் பக்குவமும்*
*பலமும்*
*இளைப்பாறும் ஒவ்வொரு நொடியும்*
*மீண்டும் மீண்டும் உறுதிசெய்யப்படுமெனில்*
*பலம்பெறும் வகையில் காத்திருப்பதில்*
*பழியுமில்லை.*
*பிழையுமில்லை.*
*காத்திருப்பதில் எந்தக் களங்கமுமில்லை.*
□□

*வெளிச்சம்*
*புரட்டாதி - கார்த்திகை 2002.*

## என்னால் இயலாது

*பூச்சூடி வடிவுபார்க்கின்றனர்*
*எல்லோரும்*
*என்னால் இயலவில்லை.*
*எம் பிஞ்சுப்பிள்ளைகளின்*
*குருதியுறைந்த தெருவில் நின்று*
*எப்படிக் கூத்திட முடியும்?*
*உறவுகள் அவலமுற்றோடிய*
*நாட்களை மறந்து*
*எப்படி சட்டெனப் பாடமுடியும்?*

• புதுவை இரத்தினதுரை

*கனத்த சப்பாத்துக்களின் கீழே கிடந்தும்
பூக்கும் செடியல்ல நான்.
ஊரில் உலவவும்
அநுமதி வேண்டுமெனும் அதிகாரக் குரலிடை
என்பாட்டும் இருக்கவேண்டுமா?
முடியாது என்னால்.
முகமாலைக்கு இப்பால் வரும்
ஒவ்வொரு தடவையும்
மூச்சுத் திணறுகிறது.
அந்நிய தேசமொன்றில்
களவாகக் காலடி வைப்பது போலிருக்கிறது.
வந்து போவதால்
இந்த வாழ்வை ஏற்றுக்கொண்டதாக
எண்ணவேண்டாம்.
வெட்கத்தைவிட்டுச் சொல்கிறேன்
அரையில் ஆடையவிழ்ந்து விழ
உள்ளே வருவதாய் உணர்கிறேன்.
எப்படி இங்கிருப்பது? என்றதும்
'ஏன் நாங்களிங்கிருக்கவில்லையா
நீ மட்டும் என்ன உசத்தி' என்கிறான் ஒருவன்.
அவனால் முடிகிறது
என்னால் முடியவில்லையே.
இரணைமடுத்தாயே!
உன் வாய்க்கால் நீரில் குளித்தபடி வாழ்வேன்
முள்ளகன்று என்முற்றம் சிரிக்கும்வரை
பின்வருவேன் பாடியபடி.*
□□

*வெளிச்சம்
தை - மாசி 2003*

# மதியம் கழிந்த மாலையும் காலம் தப்பிய மழையும்



மதியம்வரை வருவேனென
எந்த அசுமாத்தமும் காட்டாதிருந்துவிட்டு
அரக்கப்பரக்கச் சூல்கொண்டமேகம்
பின்னேரமானதும் பொழிந்தது.
மின்னலும் இடியுமாக வானத்தைப்பிரித்து வர்ஷித்து
சாரலடித்துச் சந்தோஷித்தது மழை.
தவித்த வாயாய்க் கிடந்த நிலத்தில்
ஆறாய்ப் பரவியவெள்ளம் முற்றம்கழுவி முன்னேறியது.
காதல் முத்தத்தில் கிறங்கியதாய் மரங்கள்.
தலைவழியும் துளியாய் கிளையிறங்கிய துமிகள்
அடிமரத்தில் படம்வரைந்தது.
இன்றைக்கினி இவ்வளவும்தான்
இனியெங்கே தீனிபொறுக்குவது
தாழ்வாரத்தில் நடுங்கின குளித்துக்குறாவிய கோழிகள்.
வேரை நனைத்திருக்கும் பூமரங்கள்
நாளை பூப்பெய்தி அதிகமாகவே அழகுகாட்டும்.
பாடக்கொப்பித் தாளில் படகுசெய்து
ஓடவிட்டான் சின்னமகன்.
விறகுநனைந்த வெப்பிசாரத்தில் மனைவியின் புறுபுறுப்பும்

• புதுவை இரத்தினதுரை

*கழுவிவிட்ட சைக்கிளை வெளியில் இறக்கமுடியாது*
*நடந்தா ரியூசனுக்குப் போவது*
*மூத்தவனின் முணுமுணுப்பும்*
*சாபமிட்டன.*
*பாவம்மழை அதற்கெங்கே தெரியும்*
*இப்படியான ஆயிரம் பிரச்சினைகள்.*
*பெய்துகொண்டேயிருந்தது பெருமழை.*
*இந்தமழைக்கு மகளும் இருந்திருக்கலாம்*
*வளவுமுழுதும் வாசம்பரப்பி*
*பூங்குஞ்சு ஓடித்திரிந்திருக்கும்.*
*தோய்த்துக் காயவிட்ட துணி,*
*உப்பிட்டு உலரவைத்த மிளகாய்,*
*கொத்திக் காயப்போட்ட விறகுகொள்ளி*
*மூட்டையென வெய்யிற்போட்ட மெத்தை*
*ஒன்றுமே முற்றத்தில் நனைந்திருக்காது*
*ஓடியோடி ஒழுங்குபடுத்தியிருக்கும்.*
*எனக்கு எல்லாமே ஒன்றுதான்.*
*மழையும் வெய்யிலும், மாரியும் கோடையும்,*
*இரவும் பகலும்*
*எல்லாமே ஒன்றான ஞானியாகிவிட்டேனா நான்?*
*வெற்றிலைப்பெட்டி,*
*அடிக்கடி அழைத்ததும் வரும் தேனீர்,*
*அட்டவணையின்றி வயிறுகேட்கும்போது மட்டும் உணவு,*
*வெள்ளை வெளேரென்றிருக்கும் வெற்றுத்தாள்,*
*விடியும்வரை எழுதவும் வற்றாத பேனையொன்று*
*போதுமெனக்கு.*
*மழை பொழிந்து கொண்டிருந்தபோது*
*கவிதையும் நானுமாக இருந்தோம்.*
*விடியும்வரை பெய்ததாம் மழை*
*மறுநாள் மனைவிதான் சொன்னாள்.*
□□

*வெளிச்சம்*
*தை - மாசி 2003*

# வேண்டும் வரமொன்று

முகிலிறங்கித் தவழும் முலையென
கிடக்கிறது மலை.
பனிவிழுந்த பச்சைஇலைகளின்மேல்
வெளிச்சம் தூவுறான் வெய்யோன்.
காலுக்கடியில் கலகலத்தவாறு
ஓடுறது நீரோடை.
குமரியழகோடு கிடக்கும் மரங்கள்தழுவி
போகும் வழியில்

• புதுவை இரத்தினதுரை

ஈர இதழ்கொண்டு என்னையும் உரசி
மன்மததேசம் போகிறது மலைக்காற்று.
என்னூருக்கில்லாத எழில்கொண்டு
இலங்கிறது இவ்வூர்.
"காணக் கோடிவிழி காணாது" என
இங்கொருநாள் வாழ்ந்தவனே எழுதியிருப்பான்.
இத்தனை அழகும் எனக்குமுரியதென
எத்தனை கவிதை எழுதியிருப்பேன்.
பொய்யாகி
பொசுக்கென தீயெரித்துப்போனது
அக்கவிதையை.
வாழ்வின் இறுதியிலாயினும்
இங்கு வாழ்ந்திறக்க அவாவுற்றேன்.
என்கனவில் கல்லெறிந்து கலைத்தனர்
பாவியர்.
மீண்டுமொருமுறை பார்க்கக் கிடைத்ததே
போதுமெனக்கு.
இனி என்னூரின் நாயுருவிப் பற்றையிடையே,
இலந்தை மரத்தின் சிறுநிழலின் கீழே
படுத்தபடி உயிர்நீக்கும் பாக்கியம் தா.
நேற்றென் பூட்டனையும்,
பாட்டனையும்,
நாளை எந்தையையும் எரிக்கும் சுடலையில்
நானும் எரியும் வரம்வேண்டும்.
தருவாயா இறைவா?
□□

வெளிச்சம்
சித்திரை - வைகாசி 2003

# சாவுக்குப் பின்னான என் வாழ்வு

நேற்றந்த ஊரின் நெல்வயல்கள் மீதுலவும்
காற்றளைந்தேன்.
மாலைக் கருக்கலிலே
வரம்பின் மேல்
வீற்றிருந்தேன்
என்னே விந்தையடா.
வானமதில்
சித்திரங்கள் தீட்டியதாய்
சிலதை அழித்தழித்து விட்டதுவாய்
அந்த விரித்த பெருந்திரையில்
தூரிகையால் வர்ணம் தெளித்தவன் யார்?
ஓவியங்கள் கீறியதார் ?
என்ற கேள்வியினைக் கேட்டபடி
கிடந்தேன் பதிலெனக்குக் கிட்டவில்லை.
அவன் வரைந்த
படங்கள் தெரிந்ததன்றி
படைத்தவனைக் காணவில்லை.
கட்புலனுக்கெட்டாக் கலைஞனது
கைவண்ண
வித்தையினைக் கண்டு வியந்தேன்.
பக்கத்தில்
நாற்றெழுந்து காற்றில் நடனமிட
வளை நண்டு
சேற்றினுக்குள் ஏதோ செய்திருக்க
நீர்த்திவலை

எற்றிக் கரை நனைத்து ஏகியது
வாய்க்கால்நீர்.
கத்தித் தொலைத்தெந்தன்
காதுகளைக் கிழித்தபடி
சென்றதொரு ஆட்காட்டி.
சீ.. சனியன் என்றபடி
நின்றேன்; அருகிருந்த நெடுமரத்தின் மீதிருந்து
சின்னக்குருவியதின் சிறுவாய் பாடிற்று.
பொன்வண்டும் சுருதி
போட்ட அழகிருக்கே
அற்புதம்தான் கேட்டு அதிசயித்தேன்.
ஒற்றையடிப்
பாதையெங்கும் வாசம் பரப்பி
வண்டினத்தை
ஊத அழைத்தனவாம் உயிர்ப்புற்ற பூங்கொடிகள்.
சித்திரைக்குச் சேலை சுற்றிவிட்டு
வயற்காரன்
நித்திரைக்குப் போனானா நின்றழகைத் தின்னாமல்?
வெட்டுவதும் பின்னர் விதைப்பதுவும்
அவன் வேலை.
சுற்றுவதும் அழகைச் சுகிப்பதுவும்
என் வேலை.
ஏருழவன் வேர்வை இறைக்கின்றான்;
நான் கவிதைத்
தேரினிலேயேறித் திரிகின்றேன்.
நாளையிந்தப்
பச்சைப்பயிர் முற்றிப் படுத்தவுடன்
அவன் வந்து
கச்சையுடன் நின்று கதிரறுத்துப் போய்விடுவான்.
அச்சமில்லை; சோற்றுக்கு அவன்கையில் நெல்லிருக்கும்
பிச்சையில்லை.
வயலில் போய்நின்று வாய்பார்த்து
மெய்மறந்த எந்தனுக்கு மிஞ்சுவது ஏதுமில்லை.
பொய்யழகைப் பார்த்துப் பூரித்து
நிஜவுலகில்

*வாழாமற் போனால் வறுமைக்கு இரையாகி*
*பாழாகி*
*வாழ்வு பட்டுச் சரிந்துவிடும்.*
*பட்டுச்சரிந்து பாழாகிப் போனாலும்*
*தொட்ட மனம் ஏனோ துடிக்கிறது.*
*தொடர்ந்தெழுது*
*விட்டு விட்டு வேறு வேலையினைத் தேடுவதால்*
*பட்டினிதான் போகும்*
*பசித்த மனம் ஆறாதே*
*என்றலறும் நெஞ்சை எதைச்சொல்லித் தேற்றிடலாம்?*
*அன்றன்று வாழ்ந்து அழிந்தவுடன் அழிவதற்கா*
*வந்தவன் நீ என்றோர்*
*வலியகுரல் கேட்கிறது.*
*பொந்திருக்கும் சின்னப் பூச்சியதாய்*
*மற்றவர்போல்*
*சந்தையிலே நீயும் சரக்குவிற்க வந்தவனா?*
*என்றெனக்குள் யாரோ இரைகின்ற குரல்கேட்டு*
*வென்றெழுந்தோர் கவிதை*
*விளைச்சலுக்கு விதையெறிந்தேன்.*
*நெல்விதைக்கக் கொஞ்சம் நிலம்போதும்.*
*கவிதையெனும்*
*வில்வளைக்க நெஞ்சில் வீரியத்தின் வேர்வேண்டும்.*
*சொல்லடுக்கிச் சும்மா செய்வதெல்லாம்*
*கவிதையல்ல.*
*கல்லென்று இறுகி களியென்று தானுருகி*
*வெல்லுவதே கவிதை வீச்சதுவாம்.*
*என் வாழ்வும்*
*குந்த மனையென்றோர் குடில்வாழ்வு ஆனாலும்*
*சந்தோஷம்;*
*நானெந்தன்*
*சாவுக்குப் பின் வாழ்வேன்.*
□□

*வெளிச்சம்*
*சித்திரை - வைகாசி 2003*

# அம்மா உன் வாசலில் நிற்கவா போகவா?

உயிரிழைத்த கவிதைபோல்
அலை பரப்பி
சிங்களக் கிராமங்கள் மீதான என்காதல்
பாடலாய் பரவியது ஒருகாலம்.
இத்தனை அழகும் எனதென்று சொல்லி
எத்தனை ஆழமாய் நம்பினேன்.
இப்போதும் உன் வாசலில் நிற்கிறேன்.
அம்மா!
நான் நிற்கவா? போகவா?
என்ன சொல்லும் உத்தேசம்?
வந்து வந்து வருடமொருமுறையாயினும்
தங்கியிருந்து புறப்படும் தருணம்
பிரியமனமின்றி என்விழி கசிந்தபோது
நீயும் அழவில்லை?
'போய் வா மகனே' என்று

படலை வந்து பயணமனுப்பவில்லை?
தாயே! சத்தியம் செய்
உனக்கொன்றும் நினைவிலில்லை?
எல்லாவற்றையும் அடித்து வாயிற்போட்டு
இனவாதப் பூதம்
அகலக் கால்பரத்தி நிற்கிறது தெருவில்.
உயிருள்ள சாட்சியான ஊர்களே!
மௌனம் கலைப்பீர்.
காலத்துக்குத் தகுந்த தாளமா உனது கையிலும்?
பேசடி பெருந்தேவி.
தெருவேறிப் போகலாம்
தமிழன் நுழையக் கூடாதாம் ஊருக்குள்.
உத்தரவு போட்டவனை நான் கேட்பது இருக்கட்டும்
நீ கேட்பது எப்போது?
உல்லாசப் பயணிகளான வெள்ளைத்தோலர்
உள்ளே போய் வருகின்றனர்.
எங்கும் போகலாம்
எதிலும் தங்கலாம்
விருந்தினர் மாளிகைக்கு விசாவேண்டியதில்லை.
தமிழனாயினும்
நாட்டுக்குரியவன் அல்லவா நான்!
எனக்கா அநுமதி மறுப்பு?
மாவலியை நெஞ்சுக்குள் பொத்தி
பாயும்நீரில் கால் நனைத்தவாறு
'என் சாம்பல்கரையணும் உன்னிலென'
எழுதிய கவிதையை என்னசெய்வது?
சொல்லடி கங்கையாளே!
என்னைப் புறமொதுக்கிப் போவதற்கு
சம்மதமா உனக்கு?
ஸ்ரீபாத மலைமுகட்டில் நின்று
முகில் விலகிய வேளை
எழுவான் திசைநோக்கித் தொழுது
பொற்கதிர் என் மேனிபரவ
நீயென் தாயின்முலையென எழுதிய
பாடலை என்ன செய்வது?

• புதுவை இரத்தினதுரை

*சொல்லுங்கள் என் தேவதைகளே.*
*உங்களுக்கும் எனக்குமான உறவு முற்றிற்றா?*
*பொன்வாய் திறந்து பேசுங்கள்.*
*பதினாறுவருடங்கள் கழித்து*
*வாசல் திறந்ததும்*
*உங்களைப் பார்க்க வந்துள்ளேன்*
*பேசாமற் கிடக்கின்றீர்.*
*வாசல் வந்ததும்*
*ஓடிவந்து முத்தமிட்டிருக்க வேண்டும்.*
*கட்டியணைத்து என் கன்னம்தேய*
*"இத்தனை நாள் எங்கிருந்தாய் மகனே?" என*
*கேட்டிருக்கலாமல்லவா?*
*அந்நியன்போல் முற்றம்நிற்கும்*
*அவலம் ஏன் நல்கினீர்?*
*அனைத்தையும் மனதிருந்து அழித்து*
*எழுதுவோம் புதியகவிதை.*
*அம்மா!*
*உன் இளைய மகன்*
*என் தம்பி* J.V.P
*சேர்த்து வைத்திருக்கிறாய்.*
*உன் மூத்த மகன்*
*நான்* L.T.T.E
*பார்க்க மறுக்கிறாய்.*
*நான் நிற்கவா? போகவா?*
*போவெனச் சொல்லில்*
*என் முதுசக்காணியின்*
*பிள்ளைப்பங்கைத் தா*
*போய் விடுகிறேன்.*
*ஏதோ என்னால் முடிந்த வல்லமையுடன்*
*ஒரு கொட்டில் கட்டிக் குடியிருப்பேன்*
*எல்லையிருக்கும் இடையில்.*
*சொல்லுதாயே*
*நான் நிற்கவா? போகவா?*
□□

*மல்லிகை 2003*

# காலமள்ளிய பிரிவும் மீண்டுமொரு காலைப்பொழுதும்

*மீண்டும் உன் ஊர்கள் கடந்து*
*பயணிக்கும் பாக்கியம் எனக்கு.*
*அதிகாலையில்,*
*அந்திமாலையில்,*
*நள்ளிரவிற்கூடப் போய்வருகின்றேன்.*
*இருபது வருடங்களுக்குப் பின்னான உலா.*
*உன்னுடையதென இன்றுவரை நீயும்,*
*என்னுடையதென நேற்றுவரை நானும்*
*மனதில் பூவெறிந்து மகிழ்ந்த*
*ஊர்களைக் கடக்கும் ஒவ்வொரு தடவையும்*
*நெஞ்சில் முள்ளேறி வலிக்கிறது.*
*என் காதற்கிராமங்களென இருந்த*

இவ்வூர்களை அந்நியமாக்கிய கொடுமையெண்ணி
உள்ளே அழுதபடியிருப்பேன்
வாகனத்தின் உள்ளே.
சாரதிக்குத் தெரியுமா என் மனக்கிளர்வு
"ஐயா இனிச் சிங்களவங்கட ஊர்கள்" என
அவதானமாய் விரைவான்.
ஊர்களின் அழகிற்கிறங்கி
நான் குதிப்பதறியாது
"கண்ணாடிகளை உயர்த்துங்கள் ஐயா" என்று
கட்டளை வேறு.
இந்தக் கிராமங்களிலெல்லாம்
இருந்தேன் நானென்பது
அவனுக்கெங்கே தெரியும்.
பயண வழியில் இருளிருந்த காலையில்
நிலம் வெளிக்காத நேரத்தில் ஓர்நாள்
மிகிந்தலையில் நின்றேன்.
பனிபூசிய தெருமீது இறங்கி
திறந்திருந்த கடையில் தேனீர்பருகினேன்.
குடித்து வெளிவந்தபோதும் குளிரிருந்தது.
தூரத்தெரிந்த மலையுச்சியில்
புகாரிடை தெரிந்தார் புத்தபெருமான்
வெள்ளைச் சிலையில்மட்டும் வெளிச்சமிருந்தது.
நாற்சந்தியில் ஒருதூபி
தர்மசக்கரம் அதன் தலையிலிருந்தது.
கையிற் கமரா இருந்தும்
படமெடுக்கப் பயம்.
தமிழனிங்கு படமெடுப்பது தண்டனைக்குரியதாம்.
ஆசையை உள்ளே அடித்திருத்திவிட்டு
கண்களைத்தான் கமராவாக்க முடிந்தது.
என் விதியெண்ணிய கோபமாய்
மேலே வானம் சிவந்துவந்தது.
காலைக்கு வரவுகூறும் காகங்கள் மட்டும்
இங்கேன் இல்லாமல் போனது?
காகங்களாற்தான் காலை வடிவுபெறுகின்றது.
இத்தனை அழகிருந்தும்

காகங்கள் இல்லாமை குறையெனப்பட்டது.
புத்தபிக்குகளிருவர் கடந்தபோது
ஒருவர் புன்னகை வீசிப்போனார்.
பதிலுக்கு நானுமொரு சிரிப்பெறிந்தேன்.
இருபது வருடங்களுக்குப் பின்னர்
என்மீது பரவிய சிங்களச்சிரிப்பு.
அந்தச் சிரிப்புமொழியின் அர்த்தம்
எதுவாகவும் இருந்துவிட்டுப் போகட்டும்
எனக்கது வாசம் பூசிற்று.
ஆனையிறவில் செத்துக்கிடந்த சிப்பாய்களிடையே
இந்தவூரைச் சேர்ந்தவனும் இருந்திருப்பானோ?
மந்துவிலில் குண்டெறிந்த விமானவோட்டி
இந்தவூர்க்காரனாகவும் இருக்கலாம்.
நானிங்குலவிய நாட்களில்
சிறுவராய் அவர்கள் திரிந்திருக்கலாம்.
வன்மம் களைய வந்தவரே
இனவாத வலையிற் சிக்குண்டபோது
என்னால் என்ன செய்ய இயலும்?
எல்லாம் தலைகீழாகிப்போனது.
'வெலாவகீயத'?
தலையில் மரக்கறிச்சாக்கு சுமந்த சிறுவன்
மணி கேட்டான்.
சொன்னேன்.
நன்றிசொல்லி சிரிப்புதிர்த்துப்போனான்.
மிகிந்தலையே!
சின்னக் கிராமமாய் நீயிருந்தபோது
உன்னில் சிலநாள் தங்கினேன்
நினைவிருக்கிறதா?
என்னை வீட்டுக்கழைத்து
விருந்தளித்த விமலசேனா!
சந்தியில் நின்று தேடுகின்றேன் இன்று
உன் வீடிருந்த இடம் தெரியவில்லை.
எங்குள்ளாய் நண்பா?
கத்தி அழவேண்டும்போல
கனக்கிறது நெஞ்சு.

என்னவாய் எழில்கொண்டு இலங்கினோம்
இப்படி இடிவிழுந்து சிதறிப்போனோமே.
ஒட்டுப்போட முடியாத உடைவு
சத்திரசிகிச்சைதான் சரிவருமோ?
"போவோம் ஐயா" என்றான் சாரதி.
மிகிந்தலையே!
விமலசேனாவே!
உம்மைப் பிரிந்துபோகிறேன் மனமின்றி.
என்னை யாரென்று தெரியாமல்
பிள்ளைகள் எனக்கு கையசைத்து
போகின்றனர்
பள்ளிக்கு.
விடைகொண்டு விரைகிறது
என் வாகனம்.
□□

மல்லிகை
சித்திரை 2003



# காலமெழுதிய கவிஞனின்
# சுமையற்ற வாழ்வும் பயமற்ற சாவும்

நோயுற்றுச் சிதைக்கப்பட்டோ,
எதிரிகளாற் துளைக்கப்பட்டோ,
சாவெனக்கு இல்லையெனில்
முதுமையிலும் நான் முளைப்பேன்.
என் கவிதைகளே
எனக்கு வாலிபத்தின் வலிமைதரும்.
கால்கள் நடக்கவும்,
கைகள் வீசவும்,
குனிந்து ஒருபிடி மண்ணள்ளி நிமிரவும்
பலமிருந்தாற் போதும்
என்னால் இறக்கைகட்டிப் பறக்கமுடியும்.
சாவை எதிர்கொள்ளும் சக்தியுடன்
முதுமையிலும் வாழ்வைத் தரிசிப்பேன்.
பூக்களுடன் வேர்களாகவும்,
வேர்களுடன் பூக்களாகவும் விளங்கமுடியும்.
அன்றும் என் கவிதைகளால்
புதிது புதிதாகப் பிறந்தெழுவேன்.
மானுட வதைக்கெதிராக
அன்றும் போராடும் அணியினரின் அருகாய் விரிவேன்.
எனக்கு முதுமையில்லை,
தள்ளாமையில்லை,
என் கவிதைகளால் எனக்குச் சாவுமில்லை.

வாழ்வின் இறுதிவரிகளை நானெழுதும்போது
என்னருகில் எவரும் வேண்டாம்.
சின்னக் குத்துவிளக்கின் ஒளியில்
முகமிருந்தாற் போதும்.
வந்தபோதும்,
வறுமையுற்று இருந்த போதும்
எந்தவிதமாகத் தனித்திருந்தேனோ
சாவுக்கு என்னை இரையாக்கும் போதும்
தனித்திருக்கவே விரும்புகிறேன்.
காலன் நடந்துவரும் காலடியரவம்
என் காதருகே கேட்கவும் கலங்கேன் நான்.
அட! வாடா என அழைத்தவனை வரவேற்பேன்.
நீட்டிப் படுக்க ஒரு பாய்,
தாகமெடுத்தால் குடிக்கத் தண்ணீர்,
பாடியபடியே சாக என் பாடலொன்று
போதுமெனக்கு
போய்ச் சேர்ந்துவிடுவேன்.
உடல் விறைத்து
பிணமென்றான பின்பும்
யாரும் கலங்கக்கூடாது.
வீட்டிலென் சவமிருக்கும்வரை
என் பாடல்களைப் பாடி,
கவிதைகளை உரத்து வாசித்து
எல்லோரும் இன்புற்றிருக்கக் கடவது.
வந்தேன்
இருந்தேன்
சென்றேனென இல்லாமல்
என்னாலும் இயன்றளவு
செய்தே திரும்பினேன் என
போவேன்
எனக்கிது போதும்.
□□

சுட்டும்விழி
15.08.2003

# காலனே!

*காலனே!*
*கயிறு என்மேலெறிய*
*கணக்கெடுக்கின்றாயா நாட்களை?*
*விரைவில் முடியாதென் கணக்கு.*
*சாக்குறிக்கும் ஜாதகமே பொய்யென*
*உணர்த்துவேன் உனக்கு.*
*மரணபயமில்லை எனக்கு.*
*இறுதிநாளைச் சொல்லவரும் உன் தூதுவரைக்கூட*
*முகம் மலர்த்தி வரவேற்பேன்.*
*மேதியூர்தி ஏறிவரும் உன்னையும்*
*பாயருகே அமர்த்தி*
*பத்துவருடங்கள் கழித்துவாவெனச் செப்பும்*
*பலமெனக்குண்டு.*
*என் 'அப்பு' எனக்களித்த வரமிது.*
*சாவு ஒருநாள் என்னைத் தழுவும்*
*என் ஒப்புதலுடன்.*
*போதும் என் ஜீவிதமெனும் நிறைவுடன்*
*நானாக உன்னைக் கூவியழைத்துக் கூட்டிப்போ என்பேன்.*
*அதுவரை உனக்கு*
*என் முகவரி எதற்கு?*
*காலா!*
*சென்று வேறெவனும்*
*இழிச்சவாயன் இருப்பான்*
*எடுத்துச் செல்.*
*என்னைத்தான் வேண்டுமெனில்*
*நானாக உன்னை அழைப்பேன்.*
*அப்போது வா தோழா.*
□□

*சுட்டும்விழி 2003*

# நரைவிழும் ஞானம்

என் வளவெங்கும் மஞ்சள் விரித்து
ஆடுகால் பூவரசுக்குக் கீழே
அழகிறைத்துக் கிடக்கிறான் அந்திச்சூரியன்.
இளமாலை அழகெனினும்
அதன் காலடிக்குக்கீழே இரவல்லவா?
இரவில் என்னதான் இயலும்
இளைப்பாறுவதைத் தவிர.

*தோள்வலியின் இறுமாப்பில்*
*நம்பிக்கை விதைத்திருந்தேனெனினும்*
*நாட்களைத் தொலைத்துவிட்டேனா நான்?*
*பாவம் நீயென்பதாய்*
*விடிகிறது ஒவ்வொரு பொழுதும்.*
*போட்டது போட்டபடிகிடக்க*
*வந்து போர்க்கிறது இரவு.*
*வழிநடந்த பயணத்தின் மீதி*
*அதிகமாகக் கிடக்கிறது.*
*காலிடை இடறும் கல்லையும், முள்ளையும்*
*எற்றிநடந்த இளமைமிடுக்கு இல்லாதழிய*
*எழும்பவும், நடக்கவும் வதைதெரியும்*
*முதுமைவேர்கள் படர்கிறது என்னில்.*
*நான் என்செய்வேன்?*
*வளையமுருட்டிய சிறுவத்திலும்,*
*ஒற்றைக் கொலுசுமணிச் சத்தத்திலும்,*
*ஜனனக் குறிப்புணராதும்,*
*என் வருகையின் ஆழமறியாதும்*
*கழித்து விட்டேனா காலத்தை?*
*பருவம் தப்பிய உழவுக்கு*
*ஏர் கொண்டுபோனேன் வயலுக்கு.*
*உழவும் முடியவில்லை*
*விதையும் எறியவில்லை*
*எனினும் விடுவதாயில்லை.*
*போறை விழுந்த பூவரசமரத்தை*
*புரட்ட வேண்டும்.*
*ஐயோ*
*இது என்ன புதியவலி*
*என் இடுப்புக்குக் கீழே.*
□□

*வெளிச்சம்*
*புரட்டாதி - ஐப்பசி 2003*

# கற்பனைச் சிறகெடுத்து சிற்றுடுக்கோடு ஒரு பாடல்



சிற்றுடுக்கதின் ஓசையிற் பாடவும்
தீயுமிழ்விழி கொண்டுமே ஆடவும்
கற்பனைச்சிற கோடுவான் வீதியில்
கையசைக்கவும் கற்றிடு மானுடா.
அற்புதம் இவ்வையகம் தானடா.
அந்தவானவர் பூமியென் றானதும்
முற்பிறப்பதும் மெய்யிலை பொய்யடா.
மூடமந்திரம் அற்றது வாழ்வடா.

புனிதமென்பது பொய்யிலா திருத்தலாம்.
புரட்சியென்பது வாழ்வைப் புதுக்குதல்.
பணிதலற்று நிமிர்வது மகிழ்ச்சியாம்.
பாரமற்று இருப்பவன் தேவனாம்.
தனிமையென்பது சாதரும் நஞ்சதாம்.
தாய்நிலம்தனைத் தூக்கியே கொஞ்சலாம்.
துணிவு கொண்டெழ வேண்டுமே மானுடா.
துயரமென்பதைத் தூக்கியே வீசடா.

அழகுபூத்திடச் செய்வது காதலாம்.
அதிகபலமது காதலாற் சேருமாம்.
முழவுபேரிகை மத்தளம் கொட்டியே
முதுமைவந்தெதிர் கொள்ளவும் ஆடுக.
உழவுமாடென வாழ்தலை விட்டுமே
உலவுகாலிலே கிண்கிணி கட்டியே
இழவுவீடிலை எங்களின் நாடிது
இனியபூமலர்ந் தாடிடும் வேரிது.

• புதுவை இரத்தினதுரை

*பெண்மையென்பது தாய்மையின் ஊற்றடா*
*பெண்மையேயுயிர் மூச்செனும் காற்றடா.*
*பெண்மையென்பது பூமியின் தோளிலே.*
*பூமியென்பது பெண்மையின் காலிலே.*
*பெண்மையென்பதைப் பூவெனச் சொல்வதா?*
*பெரியதெய்வமே பெண்மைதான் அல்லவா?*
*உண்மையுண்மையென் றூதடா சங்கினை*
*உலகமேகொடு பெண்மையின் பங்கினை.*

*நிலவுதெய்வமாம், நீள்வயல் வரம்பிலே*
*நின்றுலவிடும் போதுநீ தெய்வமாம்.*
*அழகுபூத்திடும் யாவுமே தெய்வமாம்.*
*அதைவணங்கிடும் மானுடன் தெய்வமாம்.*
*இலகெனச்சுமை யற்றதாய் வாழ்வினை*
*எய்திடும்மனப் பக்குவம் தெய்வமாம்.*
*உலவுகாற்றது தெய்வமாம், நாளதின்*
*உதயவேளையில் வுலகது தெய்வமாம்.*

*வதைக்குநேரெதி ராகவே நின்றிடு.*
*வலியனாகியே வல்லமை சேர்த்திடு.*
*விதைத்தமாமணி வீரரைக் கும்பிடு*
*விடியும்வேளைபூ பாளமே பாடிடு.*
*உதைத்தகாலினைக் கும்பிடு மோர்நிலை*
*உனக்குநேருமென் றாலுயிர் போயுடல்*
*புதைக்கும்போதிலும் புன்னகை செய்திடு*
*புதியவாழ்வதின் வேரென ஆகிடு.*
*□□*

*வெளிச்சம்*
*புரட்டாதி - ஐப்பசி 2003*

# இறுகிப் பிணைதல்

*தொடுவானம் போலத்தான் தெருவும்*
*நடக்க நடக்க நீள்கிறது*
*ஒரு அந்தமில்லாது.*
*எந்தத்தெருவும் ஒரு முடிவின்றி*
*இன்னொன்றுடன் இணைந்துவிடுகிறது.*
*இந்தா முடிகிறது எனநடந்து*
*தொட்டபின் பார்த்தால்*
*அது வேறொன்றின் தொடக்கமாகிறது.*
*ஒன்றுடன் ஒன்று பிணைந்து*

என்றும் கலவியிற் கிடக்கின்றன தெருக்கள்.
ஆதியும் அந்தமுமில்லாப் பெரும்பொருளாய்
சிரித்தபடி நீள்கின்றன.
இத்துடன் முற்றிற்றென
ஏதாவது ஒரு தெருவை
காட்ட முடிகிறதா நம்மால்?
ஊர்களை இறுக்கி,
நகர்களை இணைத்து,
தேசங்களைப் பிணைத்து,
வையப்பரப்பை வளைத்தபடி
நீக்கமற நீள்கிறது பயணவழி.
தலை ஆறுகளாய் சில
கிளை ஆறுகளாய் சில
அருவிகளாய் சில
ஓடைகளாய் இன்னும் சில
எல்லாம் ஒன்றாகி
சங்கமிக்கும் கடல்வரை பாடிநகர்கின்றன.
கூடுமிடம் வந்தாலும்
ஆறெது கடலெதுவென அறியமுடியாமல்
கலந்து கிடக்கிறது முகத்துவாரம்.
தெருக்களும் இப்படித்தான்.
இணைக்கும் எல்லாமுமே இணைந்துவிடுகின்றன
மனிதரைத் தவிர.
□□

வெளிச்சம்
கார்த்திகை - மார்கழி 2003

# உங்கள் அலை மீதேறிப்போகும் எங்கள் மீதிப்பயணம்

இத்தனைக்குப் பின்னும்
கொழும்பும் எமதென்றே குறிப்பெழுதி
இடையிருந்த எல்லை தகர்த்து
வந்தோம் உங்கள் வாசல்.
ஆணியறைந்த காலத்துயர் அழித்து
மீண்டும் கையிணையும் மகிழ்வில்
அந்தப் பெருந்தெரு ஏறிவந்தோம்.
துருப்பிடித்திருந்த கபாடம் திறந்து
தூசிபடிந்த தெருகழுவி
புன்னகை சுமந்தோராய்
உள்ளூறிய நிறைவில் வந்தோம் தலைவாசல்.
"முகிழ்த்து மலர்வோம் நம் சோதரஉறவுகளுடன்" என
நீங்களனுப்பிய அழைப்பிருந்தது நெஞ்சில்.
அச்சமில்லையெனும் நம்பிக்கையும்
உலகு உறவுகளால் நிரம்பியதென்ற உணர்வும்
அந்த வாசகத்தின்மேலே ஒளிர்ந்தது.
வரும்வழியெல்லாம் வாகனம் நிறுத்தி
வெள்ளையப்பம்,
சீனிச்சம்பல்,
கிரிபத்,
மாசிச்சம்பல்,
கித்துள்பாணி என
பலகாலமுண்ணாப் பலகாரம் உண்டோம்.
அனுராதபுரத்தில்
மேலிருந்திறங்கித் தகுமெனச் சொல்லி
இதுவே தருணமென்றுரைத்து
எல்லாள மகராசனும்
கெமுனு இளவரசனும்

ஒன்றாகநின்று வாழ்த்தியனுப்பினர் வழி.
இருளழித்து ஒளிதூவிவந்தன எம்தேர்கள்.
பாதிவழிவந்து எதிர்கொண்டன
உம் பல்லக்குகள்.
வந்தோம் கங்கையாள் பூமி.
வருகவென்றுரைத்து
விழிபனிக்க நீவிர் தழுவியபோது
தோளில்விழுந்து சுட்டது கண்ணீர்.
நலமாயிருந்ததா பயணவழி எனக்கேட்டீர்
கரைந்திளகிச் சிலிர்த்ததெம்மேனி.
சந்தோஷத்தில் சிறகுமுளைத்துக் கொண்டது
எம்முதுகு.
அன்றிரவு படுக்கைதட்டி
உம் மனசென அதில் வெள்ளைவிரித்து
மின்விசிறி சுழலவிட்டு
தலைமாட்டில் தண்ணீர்க்குடுவை வைத்து
நுளம்புத்திரி கொழுத்தி
அறையிருந்து விடைபெற்றேகி
வாசலிலிருந்தீர் காவல்.
மனிதம் முகிழ்த்த உம் முகமெண்ணி
விழிதூங்காதிருந்த இரவு விடிந்தபோது
இனங்களைக் கடந்தும்
மதங்களைக் கடந்தும்
உறவு நூலிழைபிடித்து ஓடுமென்பதற்கு
சாட்சியாயினீர் நீர்.
இருளினிச் சாகுமெனச் சொல்லி
வந்தான் ஒளிக்கடவுள்.
ஒரு சிங்கள முற்றத்தில்
நீண்டகாலத்தின் பின்னான சூரியோதயம்.
அழகாய் பூமலர்ந்திருந்தது.
பனிதூவிய சிறு குளிரிருந்தது.
புதிய தொடக்கத்தின் புலரியென
சாளரம் திறந்து காற்றை அளைந்தோம்.
தூரத்தே பன்சலையிருந்து வந்த
பிரித்தொலியுடன் சேர்ந்து

உயிர்கசிந்து உருகியது உம் உறவெண்ணி.
புதிய நகரசபைமண்டபம் வந்திறங்கியபோது
நெஞ்சின் மடிப்புகளில் பாசிபடர்ந்திரா மனிதராய்
வாசலில்நின்று வரவேற்றீர்.
இருபதுவருடங்களுக்குப் பின்னான இணைவு என
சிங்கள + தமிழ் வாய்கள்
ஒன்றுக்கொன்று சொல்லி உருகின.
கலைஞர்கள் இணையும் கலைக்கூடலில்
ஒன்றாகநின்று ஒளியேற்றினோம்.
இதை எப்படிப்பொறுக்கும் இனப்பூதம்?
மனிதக்கொடிகள் பின்னிப்பிணைவதைப் பார்த்தால்
நச்சுமரங்கள் நடுங்காதா என்ன?
வாய்திறந்து கூவியபடி வந்தன பேய்கள்.
கொள்ளிக்கண்கள் தீயுமிழ
கையிற் கோடரியுடன்
மண்டையோடுகள் தரித்த மார்பினராய்
குருதிவழியும் பற்களைக்காட்டிக் குதித்து
'தமிழன் எப்படி வரலாம் எம் தலைநகர்?' என
கேட்டுக் கூவியது புழுவாய்திறந்த பூதம்.
திகைத்துப் போனோம் நாம்.
அதிசயம் இப்படியும் நிகழுமென
பேயில் மின்னலடித்ததுபோல இறங்கின
மனிதக் கைகள்.
முன்னே நின்றன நல்லுறவுப் பாலத்தின்
நடுத்தூண்கள்.
மனிதனுக்காக மனிதன்சிந்திய கண்ணீரை;
தமிழருக்காக சிங்களவர் கொட்டிய செந்நீரை
தரிசித்தனர் தமிழர்.
காவல்வேலியெனக் கைகளை இணைத்து
சுற்றிக்கொண்டன சொந்தங்கள்.
கவசமாயினர் மனிதர்.
தோழர்களே!
தோழியரே!
உம் தலைகளில் முகில்கள் படிய உயர்ந்து
அடிமுடியறியா விடிவின் வடிவினராய்

*எம் கண்களின் முன்னே நின்றீர்*
*மௌனமாய் வணங்கினோம்.*
*மந்திரம்போல் உம்நாமம் உச்சரித்தோம்.*
*திரும்பும்போதும்*
*பாதிவழிவரையும் எம்முடன் பயணித்தீர்.*
*வழிநெடுக உம்மை அசைபோட்டபடியே*
*வந்தோம் எம் ஊர்வரையும்.*
*உம்மை நாமும்*
*எம்மை நீரும் தெரிந்துகொண்டோம்*
*எனினும் போதாமையுள்ளது அதிகமீதமாய்.*
*அகலமாயுள்ளது பாலமற்ற ஆற்றுவெளி*
*நிரவவேண்டும்.*
*நடப்போம் இப்பயணவழி தொடர்ந்தும்.*
*ஒன்று தெரியுமா உங்களுக்கு?*
*இன்றும் நீங்களே எங்கள் பேசும்பொருள்;*
*இனியும்தான்.*
*நாங்கள் போராடுவது மனிதருக்கெதிராய் அல்ல*
*பேய்களுக்கு எதிராகவெனப் புரிந்திருப்பீர்.*
*நீங்களும் இவ்வழியில் இனியிருப்பீர்.*
*மீண்டும் சந்திப்போம் சொந்தங்களே*
*ஆயுபோவன்.*
□□

*வெளிச்சம்*
*கார்த்திகை - மார்கழி 2003*

குறிப்பு:

29.30-10-2003 இருதினங்கள் கொழும்பு புதிய நகரசபை மண்டபத்தில் 'ஹிறு' குழுவினரால் ஏற்பாடு செய்து திறம்பட நடந்த 'சிங்கள தமிழ் கலைக்கூடலு'க்குச் சென்றுதிரும்பிய ஒருவனின் நெஞ்சின் பதிவு. இந்த இருதினங்களும் 'சிஹல உறுமய' இக்கூடலை இனவாதக கண்கொண்டு குழப்பமுயன்று தோற்றுப் போனதென்பது குறிப்பிடத்தக்கது. இனங்களுக்கிடையே உண்மையான நல்லுறவையும் புரிந்துணர்வையும் ஏற்படுத்த 'ஹிறு' குழுவினர் எடுத்துவரும் நல்நிமித்தங்கள் நம்பிக்கை தருகிறது.

# பாரதி!
# ஒளிப் பறவை நீ

*பாரதி!*
*அழகான முண்டாசு முரடனே.*
*மீண்டும் மீண்டும் உன்னில் படியும்போதே*
*உன் ஆளுமையழகை உணரமுடிகிறது.*
*மந்திர வார்த்தைகளில் கரையும் கணங்களில்*
*உன் மணிவாசகங்களில்*
*புதுப்புது அர்த்தங்கள் புலனாகிறது.*
*உன் வரிகளில் தளைதட்டுமிடங்களிற்தான்*
*புதிய களைகொண்டிலங்கிறது கவிதை.*
*விடுதலைக்கு நீ சமைத்த விருந்திருக்கிறதே*
*உண்ணும்போது*
*அது வெவ்வேறு சுவைகளில் ருசிக்கிறது.*

தமிழுக்கு எல்லோரும் கரைகட்டிக் குளமாக்கினர்
நீதான் கட்டுடைத்துப் பாயவிட்டவன்.
கம்பனை,
வள்ளுவனை,
இளங்கோவை வியந்தாய்.
எனினும் எம்மை வியக்கவைத்தவன் நீயே.
காதலை கவிஞர்கள் தீக்குச்சியாக்க
மூண்டெரியும் வேள்வித் தீயாக்கியவன் நீ.
பெண்மீதான உன்பார்வை விசாலிப்பு
எல்லையற்றது.
புலவர்கள் பூவாக்க
கவிஞர்கள் கண்ணீராக்க
மனிதனே!
ஒருமையிலழைத்து அவளுக்குப் பெருமை
சேர்த்தாய்.
சக்தியை 'சொல்லடி' என்று முன்னிறுத்தி
சுகம்கேட்ட சுதந்திரனல்லவா நீ.
பட்டினிக்குக் கிட்டிய உறவாகிய வேளையும்
'எத்தனை இன்பம் வைத்தாய் இறைவா' என
பாட உன்னால் மட்டுமே இயலும்.
உனக்குப் பின்னான எல்லோருக்குள்ளும்
எப்படிப் புகமுடிகிறது உன்னால்?
ஐயனே!
உலகைக் கடுகாக்கி கையிலெடுக்கவும்
கடலாக்கிக் கண்முன் விரிக்கவும்
எங்குகற்ற வித்தையடா இது.
உன் உள்மனவெளி பரந்தது.
அழகானது.
அங்கு கோடையில் மழை பொழிகிறது.
மாரியில் இளவெய்யிலடிக்கிறது.
இருளில் ஒளியிருக்கிறது.
ஒளியில் வழியிருக்கிறது.
நீ பூனூல் தரிக்காத வேளையில் பிராமணன்
தரித்த நேரத்தில் சூத்திரன்.
சிட்டுக் குருவிக்கும் ஜீவிதமளித்தவனே

உனக்கு வாழ்வளிக்க யாருமற்று வடிந்துபோனாய்.
சாவின் பின்னும் சுவாசமியங்கும் கவிஞன்
தமிழில் நீயொருவனே.
அகவையேறி
அநுபவம் அதன்மேலேறி
பயணம் செய்யும் காலத்தில்;
வயோதிபம் கதவு தட்டும் வாசலில்
உன்னை உரசும் போதுதான்
ஒளிவெள்ளம் என்னவெனத் தெரிகின்றது.
உன் பாடல்களைப் பாடும்போதும்
உச்சரித்து முத்தமிடும் வேளையும்
மனதில் ஞானத்தீ மூண்டெரிகிறது.
அர்த்தமற்றது இவ்வுலகு என
ஆன்மா அந்தரிக்கும் இரவில்
எவரோ தலைகோதி விடுகின்றனர்.
வெளியேபார் உலகு எத்தனை வெளிச்சமென
ஒரு வெண்கலக்குரல் கேட்கிறது.
அது உன் விரலும்
உன் குரலுமே.
பாரதி!
நீயே ஒளியின் உயிர்.
நீயே விடுதலையின் முகவரி.
நீயே ஞானத்தின் பிள்ளை.
நீயே வரிகளுக்கு வாசம்கொடுத்த முல்லை.
உன்னில் கலந்திளகும் போதில்
நீயே எல்லாமுமாகி விடுகிறாய்.
மெய்யுண்மை விளங்கும் முதலோனே!
பொய்யில்லா உன் தமிழைப் பேசியபடி
நகரும் காலம்.
நீ புதிது புதிதாகப் பிறந்து
எக்காலமும் இருப்பாய் எம்முடன்.
□□

வெள்ளிநாதம்
12.12.2003

# பறக்கும் திசைகள் அழகெனினும் இருக்கும் கூடே இனிது.

எல்லை கடந்தேகிய பயணம் முடித்து
கொல்லை வந்திறங்கும் பொழுதுகளிற்தான்
எம்மூர் வாய்க்கால்களின் வனப்புத் தெரிகிறது.
வயலும்,
குளமும்,
வரண்டு கிடந்தாலும்
அவற்றில் துடிக்கும் ஜீவனும்,
சாணியும்
சகதியுமெனினும்
தெருக்களின் தேஜஸ்சும் புரிகிறது.
வையமுள அதிக வாசல்களிலிறங்கி
வைகறையள்ளியும்,
அந்திப் பொழுதுகளிலும்
அர்த்த ராத்திரிகளிலும் சொரியும்
அழகுப்பொடியெடுத்துப் பூசியும் உள்ளேன்.
எங்கெங்கோ எல்லாம்
பனிதூவும் பூமழை நனைந்தும்
பாலைவனப் புழுதிப் புகாரிடை நுழைந்தும்

கோயிற் கடைதிறவுகாணும் பக்தனென
புளகமெய்தியுள்ளேன்.
வரிசைகட்டி நின்று
கரையெங்கும் தென்னைகள் கவரிவீச
என் வருகைக்கானது இதுவெனும் கற்பிதத்தில்
கேரளத்துக் 'காயல்'களில் படகில் பயணித்து
ஜென்மபலன் சித்தித்ததாய் கண்ணயர்ந்துள்ளேன்.
'ஏற்காட்டு'ச் சிறுவரைகளிலும்
'ஊட்டி'யின் 'தொட்டாபெட்டா' உச்சியிருந்தும்
அந்தியழகைச் சிந்திடாதுண்டேன்.
மாலை வெய்யில் மலையிலிறங்க
மற்றெவர்க்கும் கொடுக்க மனமின்றி
நெஞ்சுக்குள் பொத்தி நிறைந்தேன்.
சிங்கப்பூரின் 'சீனப்பூங்கா'விலும்
காதலர் சொர்க்கமெனக் கிடக்கும்
'காத்தோங்' கடற்கரையிலும் நின்று
முதுகில் இறக்கை கட்டிப் பார்த்துள்ளேன்.
மலேசியாவின் 'சிறம்பானி'லும்
'சிலாங்கூரி'லும்
பச்சை கட்டிய பால்மரக்காட்டிடையேயும்
நானும் பாட்டுமாக
நடனமிட்டுள்ளோம்.
மத்திய கிழக்கின் மையமாய்,
கடலிடை கரையாத் திலகமாய்,
மன்னன் மடிகிடக்கும் மங்கையாய்
இன்னும் படுதாவிலத்தாத 'பாஹரேனி'ல்
பகலையும், இரவையும்
குளிரையும், கோடையையும்
அலுக்கும்வரை அள்ளியுள்ளேன்.
'சுவிஸ்லாந்'தின் முலையெனத் திமிரும்
மலைகளிலும்
ஐரோப்பாவின் சிகரமென்றான
'அல்ப்ஸ்' மலையிலும்
நெஞ்சில் சளிபிடிக்குமென்ற எச்சரிக்கையையும்
கால்வழுக்கும் கவனமென்ற அணைப்பையும் மீறி

உறைந்த பனிமீது உருண்டும்,
பஞ்சாய்ப் படர்ந்திருந்த
பனிப்பூவள்ளி எறிந்தும்,
முகில்தொட்ட மனிதனெனும் மிதப்பில்
பவன அமுக்கம் குறைந்த உயரத்திற்கூட
சந்தோஷத்தில் விரிந்தேன்.
சுவிஸிலிருந்து ஜேர்மனிக்கு
எனக்காக..
எனக்காகவே மட்டும் பறந்த
தனி விமானத்தில்
ஆரோகணித்திருக்கும் வரமெய்தி மெய்மறந்தேன்.
வெளியே முகில்கள் நலம் கேட்க
கீழிறங்கும் ஒவ்வொரு வாசலிலும்
பல்லாயிரம் உறவுகளின் பாசமழையில்
நனைந்தேன் நாவிழந்து.
கால நினைவுக்கு மீதமாய் எஞ்சிய
ஜேர்மனியின் 'பெர்லின்' சுவரேறி
துயரையும், மகிழ்வையும்
அர்த்தநாரீஸ்வரராக்கி அனுபவித்தேன்.
பிரான்ஸின் பாரீஸில்
'ஈபிள்' இரும்புக் கோபுரத்து உச்சிநின்று
அந்த இரவின் சொர்க்கத்தை
விழிகளால் முத்தமிட்டேன்.
நெதர்லாந்திலும்,
நோர்வேயிலும்
நண்பர்கள் சூழ நடந்தேன்.
உணர்வின் துணிக்கைகள் ஒவ்வொன்றும் துடிக்க
எனை மறந்திருந்த பொழுதுகளே
ஏராளம்.
இன்னுமின்னும் எத்தனை வாசல்கள் நுழைந்து
நிலத்திலும், கடலிலும்
நீலவான் பரப்பிலும்
சிறகுமடித்திறங்காப் பறவையென
பயணித்தேன்.

*நட்சத்திர விடுதிகளின் நீராழி மண்டபங்களில்*
*நீந்தியும்,*
*மெல்லிய ஒளிசிந்தும் நடனகூடங்களை*
*மாந்தியும்*
*தொட்டுச் சுகமனுபவித்தேன் சுவைத்து*
*எல்லாமும் அதிசயிக்க வைத்தனதான்.*
*எனினும்*
*என்னூரின் குளமும், வயல்களுமே*
*என்னைக் குதுகலிக்கச் செய்கின்றன.*
*இதமான குளிர்பூசும் மாசிவைகறை,*
*இளவேனில் வந்துலவும் வைகாசியிரவு,*
*வயல்வெளி பரவிவந்து எழுப்பும்*
*அதிகாலைக் கோயில்மணி,*
*அந்த நாதஸ்வரமங்கலம்,*
*காலிற் சதங்கைகட்டிய பெண்ணாய்*
*இன்றுமெம் ஒழுங்கையுருளும் வண்டில்கள்,*
*அரிதாய் இன்னுமிங்கே எஞ்சியுள்ள*
*தாமரைக் குளங்கள்,*
*உச்சி பிரித்து ஒற்றைவரம்போடும்*
*எம்மூர் வயல்கள்,*
*சூடடிக்கும் காலத்து புதுநெல் வாசம்,*
*சாவீடுகளிற் கசியும் உறவுகளின் அந்தரிப்பு,*
*ஒன்றெனிற் துடிக்கும் அயலின் அரவணைப்பு*
*என்னதான் சொன்னாலும்*
*எத்தனை ஜீவகளையிருக்கிறது இவைகளில்.*
*வேண்டுமெனக்கு இத்தனையும்*
*சாகும்வரை.*
*சாவுக்குப் பின்னும்*
*தோழமைத் தோளேறிச் சுடலை போகும்*
*வரம் வேண்டும் தாயே*
*தரவேண்டும் நீயே.*
□□

*உலகத் தமிழர் (கனடா)*
*2004.*

# அப்பு



*அப்பு!
வார்த்தையொன்றும் கிட்டலையே
உங்களை வடிவமைக்க.
கவிதையொன்றுக்காக அமர்ந்தால்
கண்ணீர் வருகுதன்றி
கவிதை வரக் காணோமே.
எத்தனை கவிதைகள் செதுக்கினேன்.
எத்தனை பாடல்களுக்குப் பிரம்மனானேன்.
ஏனப்பு உங்களை மட்டும்
உருவகிக்க முடியவில்லை என்னால்?
அப்பு!
தமிழை என்வாய் தீத்திய தந்தையே
உங்கள் நினைவிற்கு
சொற்களால் ஒரு மாளிகை சமைக்க முயன்று
தோற்றுப் போனேன் இன்று.
பெற்ற கடன்தீர்க்காப் பாவியாய்
கொள்ளிசொருகிக் கொளுத்தினேன்.
எஞ்சிய சாம்பலையாவது எடுத்துவைத்தேனா?
வில்லூன்றிக் கடலிலல்லவா கரைத்து
தலைமுழுகி வந்தேன்.
பெற்ற கடனுக்குப் போதாதையா
இந்த எரிப்பும், கரைப்பும்.
இந்த நாயையும் நிமிர்த்திய நாயகனே!*

அந்தரித்துப் போவேன் இனி.
உங்கள் அந்திமத்திலாவது அருகிருந்து தாங்கும்
வரம் நல்காது
துரத்தித் துடிக்க வைத்தது சூழ்நிலை.
சதி செய்ததையா விதி.
வெளியே சிரித்து விளங்குகிறேனே தவிர
சின்னவயதின் நினைவுகள் தீமூட்ட
உள்ளே எரிகிறேன்.
என்னால் என்னசெய்ய இயலும் இதைத்தவிர?
வல்லமையற்ற பிள்ளையாய்
பெற்றாய்,
வளர்த்தாய்
எந்தப் பலனையும் என்னிடம் எதிர்பாராமல்.
கொள்ளிக்கு மட்டுமே நீயெனக்குறித்து
ஆவிகலங்கிய கடைசிநொடியிலும்
இந்தப் பாவியைப் பார்க்காமல்
போனாய் புண்ணியனே.
வேறெந்தத் தந்தைக்கும்
என்னைப்போல் பிள்ளையொன்று
இனிப் பிறக்காதிருக்கக் கடவது.
ஆச்சி தனித்தாள்,
அக்கா அந்தரித்தாள்,
வந்துமக்கு வாய்க்கரிசியாவது போடும்
வரமற்றுப் போனாள் தங்கை.
தம்பிதான் பாவம்
அடிக்கடி வந்து ஆதரித்தான்.
ஆயினுமென்ன
பொற்சுண்ணமிடிக்கும் பேறிழந்து போனானே.
கழிந்த காலத்தைக் கரையொதுக்கிவிட்டு
நடக்கிறது காலநதி.
நிகழ்காலத்தையும் நாளை எறிந்துவிட்டு
நடக்கும் நாளெனும் நதி.
காளி!
ஊழிக் கூத்தின் முதல்வி!
வந்தாயடி நேற்றெம் வாசல்.

வந்து திரும்பும்போது
அப்புவைத் திருடிச்சென்றாய்.
சிம்மவாகினி!
உன் பாத அரவிந்த நிழலில்
அப்புக்கோர் ஆசனமருள்க
இனியாவது அவர் கொஞ்சம் இளைப்பாறட்டும்.
18.01.2004 ஞாயிற்றுக்கிழமை
அன்றுதான் எம்மிலிருந்த பலம்,
இறுமாப்பு,
தன்னம்பிக்கை
எல்லாம் கைதவறிப்போனது.
எம்மீதான அன்பு,
கரிசனை,
பற்றிப் படர்ந்திருந்த உறவு
எல்லாம் இல்லையென்றாச்சு.
எண்பத்தியெட்டு வருடமாய்
பெரிய உறவுவட்டமாய் விரிந்தவெளி
கணமொன்றிற் சுருங்கி,
ஒரு புள்ளியாகி,
பிணமென்று பேர்சூடி
பின் காணாமலே போனது.
வீட்டு முற்றத்திலும்,
திண்ணையிலும்,
காளிகோயிற் கருவறையிலும்,
சொந்தங்கள் நெஞ்சிலும்
பரவிய சந்தனவாசம்
இல்லையென்றானது இப்போ.
வந்து சுகம்கேட்கும் வசந்தமில்லாது
புழுங்கிக் கிடக்கிறது முற்றத்து வேம்பு.
ஆச்சியென அழைத்தபடி
வந்தமரும் அப்பு இல்லாமல்
காளியம்மன் கருவறை இருண்டது.
காண்டாமணி மௌனத்தில் உறைந்தது.
நிமிர்வுக்குக் கண்ணெதிரேயிருந்த சாட்சியை
பூவரசங்கட்டையில் வைத்தெரித்து

பதினாறு நாட்கள் இன்றுடன்.
வஞ்சமில்லா நெஞ்சொன்றின் எச்சத்தைக்கூட
வில்லூன்றி வற்றுக்கடல் வாங்கிவிட
வெறுங்கையர் ஆனோம் நாம்.
அப்பு
வெளியே தெரியாதிருந்துபோன
அழியா அழகு.
பணிந்தறியாச் செருக்கின் நிமிர்வே
எமக்கவர் அருளிய கொடை.
ஏட்டறிவு அதிகம் இல்லையெனில்
அதுவொரு குற்றம் அல்லவென
அப்புதான் அயலுக்குத் தீர்ப்பெழுதினார்.
உண்மை மனிதன் உரத்துப்பேசுவான்,
காதுகிழியக் கத்துவானென
சத்தியத்துக்குச் சாட்சிசொன்னவர் அப்புதான்.
சுறுசுறுப்புக்கும்,
சோரா உழைப்புக்கும்,
பஞ்சியறியா நடை பயணத்துக்கும்
ஒரேயொரு உதாரணம் இருந்தது.
அதுவும் இல்லையென்றானது நேற்றுடன்.
அப்பு எல்லோர்மீதும் கோபமெறிவார்
உள்ளூறும் அன்புக்கசிவில் நனைந்தபடி.
மற்றெந்தத் தந்தைக்கும் மேலானவரல்ல
எம் தந்தை.
எனினும்
வேறெந்தத் தந்தைக்கும் கீழானவருமல்ல
எங்கள் அப்பு.
அப்பு சிரிப்பது அத்திபூப்பதுபோல
எப்போதாவது இருந்துவிட்டு இவ்வதிசயம் நிகழும்.
மெல்லக் கதைப்பதென்பதை அவர் வாயறியாது.
உரத்து,
மிகவுரத்து
ஓங்காரமாய் ஒலிக்கும் குரல்.
அருந்தலாய்,
மிக அருந்தலாய்

நெகிழக் கூடியதாய் ஏதேனும் நிகழ்த்துவார்.
கால்பட்டுலவிய முற்றத்திருந்த
சுவடுகளையும் நேற்றழித்தாயிற்று.
காற்றிற் கலகலத்த பேச்சரவம்
இன்றில்லை, இனியுமில்லையெனும்
உண்மை அறைகிறது முகத்தில்.
மரத்துக்காக வேர்கள் நீரருந்துவதே வழக்கம்
இங்கு வேர்களுக்கு மரமே பால்கொடுத்தது
தன் அந்திமம் வரையும்.
ஏய், பருத்தித்துறை வீதியே!
புத்தூரிருந்து கள்ளியங்காடு வரையும்
கொதித்துருகும் தார்பூசிய உன்முதுகேறி
வெற்றுக் காலுடன் இனியெவரின்
வீதியுலா இருக்கும்?
அப்புவின் கா்ல்படும் பாக்கியமிழந்து
தவிப்பாய் கிடந்து எங்களைப்போல.
காளியம்மன் கோயிற் கருவறையே!
எவருமில்லை உனக்கினி ஒளிதர.
ஒற்றைமனிதனாய் வெளிச்சம்நல்கிய அப்புவை
எடுத்துச் சென்றாய்.
இனி இருட்டில் கிடவடி கிழடி.
என் மனைவி இரவும் அழுதாள்
மாமனுக்காக அல்ல
மனிதனுக்காக.
நெஞ்சில் கல்மிஷமற்றவர் அப்புவென
நெடுகவும் சொல்வாள்.
உண்மைதான் அப்பு.
ஒப்பனை ஏதுமற்ற உண்மைமுகத்துடன்
பொய்யான போர்வையேதும் போர்க்காமல்
இப்படி இருந்துபோக எப்படிமுடிந்தது உங்களால்?
தேவேந்திரன் உலாவரும் தேரின்சக்கரம்
பழுதுற்றுளதாம்.
வாயுதேவனின் வாகனமும்,
வருணபகவானின் ஆசனமும்
சிதிலமுற்றுளதாம்.

*புதிய ரதமொன்றில் உலாவர*
*அக்கினிக்கடவுளுக்கு ஆசையாம்.*
*எல்லோரும் சேர்ந்து அப்புவை எடுத்துவிட்டனர்.*
*“அண்ணனைக் கூட்டிவாருங்கள்”என*
*‘ஆசையய்யா’தான் சொல்லியிருப்பார்.*
*ஐம்பது தேர்களைச் செய்த அவருக்கு*
*பக்கத்தில் நீங்களில்லாவிட்டால் பத்தியப்படாதே.*
*தனக்குக் கொள்ளியிட்டவரை*
*தம்பி அழைத்தார்.*
*உங்களுக்குக் கொள்ளியிட்ட கையை*
*என்ன செய்யும் உத்தேசம்?*
*அப்பு!*
*நீங்கள் இல்லாமலும் மழைபொழியும்*
*எங்கள் முற்றத்திற்தான் நிலம்குளிராது.*
*நீங்கள் இல்லாமலும் பூக்கள்மலரும்*
*எங்கள் முற்றத்திற்தான் வாசம்பரவாது.*
*அடுத்த பிறப்பென்று ஒன்றிருந்தால்*
*அப்போதும் ஆச்சியே உங்கள் மனைவியாய்,*
*நாங்களே பிள்ளைகளாய்,*
*மருகர், பேரர், மைத்துனர்கள் எல்லோரும்*
*இவர்களாகவே இருக்கட்டும்.*
*சென்று வருக.*
*திரும்பி வராவிட்டாலும்*
*நன்றியென்ற ஓர் உணர்வை*
*நாம் சுமந்து நிற்கின்றோம்.*
*சென்று வருக தேவே!*
□□

*வரதம்*
*02.02.2004*

**குறிப்பு:**

*18.01.2004* ஞாயிற்றுக்கிழமை தனது *86*வது வயதில் காலமான, கவிஞரின் தந்தை கந்தையா வரதலிங்கம் அவர்களின் பிரிவெண்ணி எழுதியது இது.

# விசாரணைகள் மூன்று

## பூனை மயிர்களின் காலம்

*கிழவனுக்குப் பெரிய மீசை*
*கொடுவாக்கத்தி போல.*
*சிறுவனுக்குப் பூனைமயிர்*
*பூஞ்சணம் மாதிரி.*

*கோழியொன்று ஏறிற்று தலைவாசல்*
*கல்லெடுத்தெறிந்தது பூனைமயிர்.*
*கொல்லடா என்றது கொடுவாக்கத்தி.*

*நாயொன்று வந்தது முற்றம்*
*பார்த்திருந்தான் சிறுவன்.*
*அடியடா என்றான் கிழவன்.*

*ஊரை வளைத்து*
*ஆங்காங்கு முள்பரவி*
*நானுன் ஆண்டையெனும் மிதப்பில்*
*வேலிபுகுந்து வளவுள்ளே வந்தன*
*கொம்பேந்திய எருமைகள்.*

*கல்லெடுத்தான் சிறுவன் எறிய.*
*அட! பேயா போடடா கீழேயென்று*
*பதறினான் கிழவன்.*

*ஏனப்பு என்றது பூனைமயிர் பலமாக.*

*குழுமாடுகளடா குத்திக் கிழிக்கும்*
*பதுங்கினால் தப்பிவிடலாமென*
*கொடுவாக்கத்தி குசுகுசுத்தது.*

வலியதை வணங்கி
எளியதை இடிக்கிறான் பாரெ௭ன
பெரிய மீசையைப் பார்த்து
புறுபுறுத்தது பூனைமயிர்.
□□

## இறப்பெனப்படுவது பிறப்பே

இந்த இரவைப் போலவே
நேற்றுச் சாவடைந்த இரவும்
இருந்தது இறுதி மூச்சை எறியும்வரை.
மெல்லிய பனிபூசிக்கொண்டு
முதலிரவுக்குப் பரபரக்கும் மணப்பெண்போல
சந்தோஷத்தில் தலைவாரிக்கொண்டது.
இருப்புக்கொள்ளாமல்
நிலவைப் பொட்டிட்டு
முகிலைப் போர்த்திக்கொண்டு
சில்வண்டின் பாட்டுடன் இணைந்து
மோகனம் வழிந்தொழுகப் பாடிற்று
மெல்லியதாய்.
நாணம்மீதுர இடைக்கிடை சிரித்து
தன்னைச் சரிபார்த்தும் கொண்டது.
தனித்திருக்கும் பீதியற்று
முளைத்திருக்கும் காவலரண்களையிட்டும்,
கொல்லாயுதமேந்தி
உலாப்போவோரையிட்டும்
எந்த அச்சமுமின்றி
எதையும் எடுத்தெறியும் பாவனையில்
பாடிக்கொண்டிருந்தது சாமம்வரை.
அதிகாலை சந்தியாகாலமிருக்கும்
அதுக்கு மூச்சுத்திணறியது.




*முகம் வெளிறி*
*ஏதோ முனகிற்று*
*அவ்வளவுதான்.*
*சடலமெடுத்தெரிக்கும் சிரமமும் தராது*
*காணாமற் போயிருந்தது காலையில்.*
*இந்தோ; இன்றைய இரவிருந்தும் பாடுகிறது*
*எத்தனை புளகிதமாய்.*
*ஐயோ பாவம்.*
□□

## மனதில் அழித்தெழுதல்

*வேலியில் கூவிற்று சேவல்*
*விடிந்தது எனச்சொல்லி.*
*எழும்புவதாய் காணோம் எவரும்*
*போங்கடா*
*நீங்களும் உம் தூக்கமுமெனச் சொல்லி*
*கீழிறங்கிக் கிளறத்தொடங்கிற்று.*
*கனவுடனும்,*
*சுமையுடனும் மனிதர்*
*எழும்பவா முடியும்?*
*மகிழ்வுடனும்,*
*வயிறுடனுமே கோழிகள்*
*தூங்கவா முடியும்?*
*ஆச்சரியம் என்னவெனில்*
*எல்லாவற்றுக்கும் ஒன்றாகவே*
*விடிவதும்*
*இருள்வதும்தான்.*
□□

*வெளிச்சம்*
*தை – பங்குனி 2004*

# பதிலில்லாக் கேள்வி

*'எடியேய்' என்பார் அப்பு.*
*எடுத்ததைப் போட்டோடி*
*'என்னங்கோ' என்பாள் ஆச்சி.*
*'இஞ்சார்' இது அப்பா.*
*குடல்தெறிக்க வந்து*
*'என்னப்பா' இது அம்மா.*
*'அஞ்சு' என்பான் அண்ணன்.*
*காற்றாகிக் காலடியில் அண்ணி.*
*ஒற்றைச் சொல்லொன்றால்*

*இந்தவேகம் எப்படி இவர்களுக்குள்?*
*ஏதோ மாயப்பொடிதான்*
*இப்படி மயக்கிறது.*
*நாளை கணவனும் அழைப்பான்*
*ஓடணுமா நானும்?*
*தலைமுறை மாறிக் காலமோடுறது.*
*அழைக்கும் வார்த்தைகளில்*
*கொஞ்சம் அன்புக்கசிவும் தெரிகிறது.*
*ஆயினும் என்ன?*
*ஓட்டம் குறையவில்லையே எமக்கு.*
*இனியும் எத்தனை மாரிக்கும், கோடைக்கும்*
*தீவாய்பட்டு எரிவதோ?*
*சற்றுக் காலாறிப்பரவ*
*கட்டுகள் தளர்ந்துளதேயன்றி*
*அறுக்கவில்லையே முற்றாக.*
*எம்மைச் சுற்றி*
*அந்த மூன்று நாட்களுமிருந்த*
*கரிக்கோடு கரைந்தது.*
*மற்றெந்த வரைகோடுகளும்*
*மறையவில்லையே இன்னும்.*
*தந்தையெனினும்,*
*அண்ணனெனினும்,*
*கணவனானாலும்,*
*மகனானாலும்*
*ஆணென்றிருக்கும் எவருக்கும்*
*தெரியவில்லையே சரிபாதியின் வலி.*
*இதற்குமென்ன ஆயுதமா ஏந்துவது?*
*முடியாதே.*
*பதிலில்லாக் கேள்வியாய்க் கிடக்கிறோம்*
*பலகாலம்.*
*இனியுமா?*
□□

*வெளிச்சம்*
*தை - பங்குனி 2004*

# யூலிய்...! நாயல்ல நீ

உன்னில் சாவுச்சிலந்தி வலைபின்னி
உயிர் உறிஞ்சக் கிடக்கிறாய்.
வாழ்வின் இறுதிக்கணத்தை
எப்படி எதிர்கொள்வாயோ?
ஒட்டியுலர்ந்து விலாஎலும்பு துருத்த
இன்னுமென்னில் உயிரிருப்பதாகச் சொல்லி
மூச்சுவிடுகிறாய்.
ஏதுசெய்ய இயலும் என்னால்?
ஊனுருக உள்ளே அழுதபடி

உன்னருகில் உள்ளேன்
என்னை மன்னித்தருள்க.
பஞ்சுப்பொதியாய் என்வீடு புகுந்த அன்று
உன்னைக் கொஞ்சாதார் எவர்?
இன்று நாராய்க் கிழிந்து கிடக்கிறாய்.
உனக்கான மருந்தேதும் இல்லையாம்
நான் என்செய்ய?
துடித்துக் கொண்டிருக்காதே
கடைசிமூச்சை வெளியேவீசிக் கண்களைமூடிவிடு
குழிவெட்டி புதைத்துவிடுகிறேன்.
இம்மண்ணில் மனிதர்கள் மட்டுமல்ல
மிருகங்களும் வாழமுடியாதென்று
சொல்லிப் போகிறாய்
போ என்பிரிய சகியே.
யூலிய்: நாயல்ல நீ
எனக்குத் தோழி.
மனைவிக்குச் சோதரி.
பிள்ளைக்குச் சித்தி.
சேலைகட்டிப் படியிறங்குவாள் மனைவி
வாசல்வரை வந்து வழியனுப்புவாய்.
திரும்பி வீடுவர
ஓடிவந்து இடுப்பைக் கட்டி
முகத்தை வயிற்றிலுரஞ்சி மகிழ்வாய்.
மீனறுக்கும் போது
காகங்களுக்குக் காவலிருப்பாய்.
நள்ளிரவு கடந்து நான் வீடுதிரும்பும்வரை
வாசலிலென் வரவுபார்த்துக் காத்திருப்பாய்.
கண்டபின்பே உன் மனம் ஆறும்.
வாய்பேசா ஜீவனெனினும்
உன் உள்ளுணர்வை உணரமுடிந்தது எம்மால்.
நாம் சயனிக்கும் அறையின் சாளரங்களை
மூடாதிருக்க வேண்டுமென்பது உன்கட்டளை.
உள்ளே விளக்கெரிய வேண்டும்
இது உன் உத்தரவு.

*மணிக்கொரு தடவை யன்னலால் எட்டிப்பார்ப்பாய்*
*எண்ணிக் கணக்கிட்டும் இருப்பாயோ?*
*நாங்கள் உறக்கத்திலிருந்தால் உனக்குத் திருப்தி.*
*என் காவலிலிவர்கள் என்பதில்*
*உனக்கொரு கிறுக்கு.*
*குளிரெனினும் சாளரம் சாத்தவிடாய்*
*காலால் விறாண்டித் திறவென்பாய்.*
*திறக்காதிருந்தால் குரைப்பாய்.*
*பனியெனினும் யன்னல் மூடாதிருக்கப் பணித்தாய்*
*உன் அன்புணர்ந்து ஒழுகினோம்.*
*இன்று நோயால் நொடிந்து கிடக்கிறாய்.*
*யூலி!*
*உயிரைத் தூக்கியெறிந்து இறந்துபடு.*
*அரக்க மனமல்ல எனக்கு*
*இரக்கமனம்.*
*நீ துடித்துக் கிடப்பதை*
*பார்த்திருக்க ஒப்பவில்லை என்நெஞ்சு.*
*வந்தாய்,*
*எம்மிற்கலந்து வாழ்ந்தாய்,*
*போகிறாய்*
*போ தாயே.*
*மீண்டும் சந்திப்போமா?*
*சந்திக்க வேண்டும் சகியே.*
*யூலி!*
*ஆசையாய் ஒருமுறை அழைக்கிறேன்*
*என்குரலை உள்ளேவைத்தபடி*
*செத்துவிடு.*
□□

*வெளிச்சம்*
*சித்திரை – வைகாசி 2004*

**குறிப்பு:** அன்புடன் வளர்த்த நாய்
அகாலமாய் இறந்தபோது எழுதியது.

# அழகின் ஆட்சி

*காதலியின் இடுப்புத்தசை கிள்ளும் விரலாய்*
*கரைவந்து தொட்ட அலைகள்*
*நோவின்றி மெல்லியதாய் நுள்ளின.*
*ஆரவாரமற்ற குஞ்சு அலைகளானாலும்*
*முத்தத்தாற் சிந்திய வாய்நுரை*
*கரையெங்கும் பூத்திருந்தது.*
*பெருங்கடல் பெய்த சிறுநீர் வழிந்து*
*'வட்டுவாகலுக்கு' வெளியே கசிந்து*
*கடலெனும் பெயருடன் நந்திக்கடல்.*
*கசிவு நீரெனினும் எத்தனை அழகு.*
*இரவின் மோனத்தில்*
*நந்திக்கடல் மெய்புளகமெய்தும் மேனிபெறும்.*

• புதுவை இரத்தினதுரை

நிலவின் சௌந்தர்யஜொலிப்பில்
அழகின் ஆட்சியே கடலில்.
நட்சத்திரங்களை எண்ணிக் கணக்கிட்டபடி,
வந்து தழுவும் குளிர்காற்றைச் சுகித்தபடி,
குரலெழுப்பிப் போகும் இரவுக்குருவிகளை
ஏக்கத்துடன் பார்த்தபடி
கரையிலிருப்பது எத்தனைசுகம்.
நான்போகும் நாட்களில் எவருமிரார்
தன்னந்தனியாக நான் மட்டுமே.
ஒருவனே இத்தனையழகையும் எப்படித்தின்பது?
இன்றுமட்டும் அதிசயமாய் இன்னொருவன்
கையில் வலையுடன்.
அவனுக்கு நான் அதிசயமானேன்.
எட்டநின்று யாரெனவினவிக் கிட்டவந்தான்.
பயந்துபோனேனெனச் சிரித்தான்.
எத்தனை அழகிந்தக் கடலென்றேன்
விசித்திரமாய் என்னை விழித்தான்.
அழகுபார்க்கும் நிலையிலா உலகுளது என
சலிப்பது போலிருந்தது பார்வை.
நண்டு பிடிப்பேன்,
சிலநாளில் இறால்படும்,
காலையில் வந்து குண்டிகழுவுவேன்,
இதிலென்ன அழகு என்பதுபோல
நடந்து கடலில் இறங்கினான்.
வீடு திரும்ப எழுந்து பார்த்தேன்
அழகு மீதான எந்தச் சிலிர்ப்புமின்றி
வலையும் கையுமாக கடலில் அவன்.
நந்திக்கடல் அவனுக்கு மகள்
எனக்குக் காதலி.
ஒரே பெண்ணானாலும் உறவுவேறு
நடந்தேன்.
□□

வெளிச்சம்
சித்திரை – வைகாசி 2004

## ஆளை விடு

ஐயோ வேண்டாம் ஆளைவிடு.
எனக்கிப்போ வேண்டுவதெல்லாம்
மனிதவாடையற்ற ஒரு வெளி
இல்லையேல் ஒரு வயல்
குறைந்தது ஒரு தெரு
சும்மா உலாத்தத்தான்.
ஆட்களும் ஆரவாரங்களும்
ஏனோ அலுத்துவிட்டது.

இருப்பது,
கதைப்பது,
சிரிப்பது
எத்தனை காலத்துக்கென்றுதான்
இவையே நானாவது?
அவிந்து போனது நெஞ்சு.
பூவோடு மணிக்கணக்காகப் பேசலாம்
ஒரு பொல்லாப்பும் இல்லை.
நாயோடு நாட்கணக்காகப் பேசலாம்
எந்தப் பிரச்சினையும் எழாது.
மனிதர்களுடன் பேசுவோமெனில்
முகமூடி,
உருமறைப்புச் செய்த வார்த்தைகள்,
சிரிப்பது போன்ற பாவனை
இவற்றுடனல்லவா இருக்கின்றனர் முன்னால்
எப்படிப் பேசலாம் இவர்களுடன்?
பேசலாம்;
எனக்கும் வேண்டும் முகமூடி,
உருமறைப்புச் செய்த வார்த்தைகள்,
சிரிப்பது போன்ற பாவனை
வேண்டுமா இந்த வதை?
ஐயோ வேண்டாம் ஆளைவிடு.
ஒரு வெளி
ஒரு வயல்
குறைந்தது ஒரு தெரு வேண்டும்
சும்மா உலாத்தத்தான்.
□□

வெளிச்சம்
சித்திரை – வைகாசி 2004

• புதுவை இரத்தினதுரை

# காலம் எழுதிகளின் கதை

நாளை மழை கழுவிச்செல்லும்
மண்ணிருக்கும் காற்தடத்தையும்.
அவர்களை கந்தகநெடியாக வாங்கியகாற்று
தன் சுயத்துக்குத் திரும்ப
சுவடுமற்றுத் தொலைந்துபோவர்.
இறுதியாகத் தாய்மண்ணை முத்தமிட்டு
எல்லை பிரிந்தேகியபோது
தொட்டுத் தடவிப்போயினர் பூக்களை
அற்றைநாளே அவை வாடிவிழுந்திருக்கும்.
பயணக் களைப்பை மறக்க
பாடிய பாடல் பரவிய வனம்
மீண்டும் மௌனத்துறையும்.
அவர்களுக்கு கையசைத்துப்போன
பள்ளிச் சிறுவர்
வழமையான வழிப்போக்கரென எண்ணியிருப்பர்.
வழியில் கொஞ்சம் காலாற அமர்ந்திருந்த
மரநிழலுக்குத் தெரியுமா
தான் குடைவிரித்தது அக்கினி நாவுகளுக்கென்று?
இந்த வரம்பிற்தானே நடந்தனர்.
இந்தக் கரையிற்தானே படகேறினர்.
இதோ இந்தத் தோட்டவெளிக் கிணற்றிற்தான்
எரிமலைகள் நீரருந்தின.
இடியுண்டு பூசையற்றுப் போக
எவரும் எட்டிப்பார்க்காதிருந்த கோயில் வெளியிற்தான்
கூட்டாக எல்லோரும் போட்டோ எடுத்தனர்.
உள்ளே கலங்கி
வெளியே விளங்கியபடி நின்றவருக்கு
சென்றவர்கள் பயணம் சொல்லிப் போயினர்.

*நடந்தும்,*
*படகேறியும்,*
*புகைவண்டிக்குள் கரந்துறைந்தும்*
*பணிமுடித்தலுக்கிடையில் எத்தனை வதை?*
*சாவுக்குக்கூட சாகஜம் வேண்டியுள்ளது.*
*கரும்புலிகள்.*
*கவிதை தோற்றுப்போவது அவர்களிடம்தான்.*
*அகமும் புறமும் அளவெடுக்க முடியாமலும்*
*உள்ளுறையும் அமுக்கத்தை அறியமுடியாமலும்*
*கவிஞன் தோற்பதும் அவர்களிடம்தான்.*
*வரலாறு திருப்பிகளாய்*
*வெடித்து அதிர்ந்துதிரும்வரை*
*வழியெங்கும் சிரிப்பெறிந்து திரிவர்.*
*வீசிப்போகும் புன்னகை*
*இளமையாய் கிடக்கும் நெடுங்காலம்.*
*நானென்பது நானல்ல*
*அது நீயென்பதாய் அவர் தோழமை.*
*எட்டிப்பிடித்து கைவிரல் நீவி*
*மௌனமாய் அவர் தூறும் மொழிக்கு*
*அகராதி இல்லை*
*எத்தனை அர்த்தங்கள் விரிக்கலாம் அதில்.*
*குளிர்நாளில் கணப்பருகிலிருத்தலான பிணைப்பில்*
*பிரியும்நாள் நெருங்குவது புரியும்.*
*வாயால் ஒரு வார்த்தையுரைத்து*
*போய்வருகிறோமெனில் குறைந்தா போவர்?*
*பொல்லாத அமசடக்கிக் கள்ளரவர்*
*பேசவே மாட்டார்கள்.*
*ஓங்கி முகத்திலறைந்துவிட்டு*
*அழ நினைக்கும் மனம்.*
*எப்படி முடியும்?*
*அது சாவுக்கு வழியனுப்பல் என்றாகிவிடுமே.*
*அறிந்தவர் இடிந்துதிர*
*அவர்கள் நடப்பர் திரும்பியும் பாராமல்.*
*இப்படி இருந்துபோக*
*எப்படி முடிகிறது அவர்களால்?*

● புதுவை இரத்தினதுரை

விளக்கில் தொட்டாலே துடிக்கும் மெல்லியருக்குள்
வெடியாய் சிதறுவோர் விளைவது எப்படி?
ஈசலின் இறப்புக்கே
இழவு கொண்டாடும் இனமொன்றில்
அவர்களின் தோற்றுவாய் சூத்திரம் என்ன?
ஓரிரண்டு பேருக்குள்ளே உறங்கிறது
அவர் உயிர்மையம்.
ஞானவிழிகளுக்கு மட்டுமே
நெருப்பாற்றின் உற்பவமும், கழிமுகமும் தெரியும்.
அஞ்ஞானக் கண்கள் அறியக்கூடியதல்ல
விஸ்வருபத்தின் அடியும் முடியும்.
போத்தலில் அடைக்கமுடியுமா
பேராற்றின் பிரவாகத்தை?
புசு புசு மயிர் விளைந்த பூனைக்குட்டிகளாய்
மடி விளையாடிவிட்டு
விடைகொள்ளும் ஒவ்வொரு தடவையும்
சாவது அவர்களல்ல நாங்களும்தான்.
"கரும்புலிகள்
பலவீனமான இனமொன்றின் பலம்"
தலைவன் சொன்னதே சரி.
அவர்களை வரையத்தொடங்கியது பிழை.
ஆயினும் தூரிகை தோற்கும் போதெல்லாம்
ஓவியன் வெற்றியடைகிறான்.
கரும்புலிகளுக்கு மட்டுமே இந்தச் சமன்பாடு.
இனியும் தொடரும் அவர்கள் பயணம்
தேசம் ஒளிகொண்டு இலங்கும்வரை
பிரிவதும் கவல்வதுமாய் போகுமெம் காலம்.
வாழ்வின் விதிமீறும் குழந்தைகளை
வரைவது எங்ஙனம்?
தோற்றுப்போவதே ஓவியப்பெருமை.
□□

வெளிச்சம்
ஆனி – ஆவணி 2004

# பிரிவெண்ணியழும் ஒரு குரல்

அந்த நெட்டூரம் நிகழ்ந்த அன்றிருந்து
இப்படித்தான் ஒருவாய் நீர்கூட உள்ளிறக்காமல்
ஏகாந்தமாய் வெறித்த பார்வையுடன்
சோபிதம் அகல ஒற்றையனாய் நிற்கிறது
இந்த நெடியபனை.
காலெடுத்துநகரா வாழ்வெனினும்
ஜனனத்திருந்தே அருகென்றாகி
இணையென இருந்தன ஒருசோடிப் பனைகள்.

• புதுவை இரத்தினதுரை

பெருங் காற்றடிக்கும்போதில் மெல்லத் தோளுரசி,
புளகமெய்தி,
பருவமெய்தியதும் காதல்மீதூர
சிரித்துப்பேசி இருந்தன இரண்டும்.
நேற்றொருவன் வந்தான்
அவன் மனிதனாம்.
மளமளவென்று பெண்ணுடல் சுற்றிப்படர்ந்து
மார்புரச ஏறிக் கழுத்திற் சுருக்கிட்டான்
மூச்சுத் திணறியது பெண்ணுக்கு.
கீழே விழுந்த கோடரிவெட்டு ஒவ்வொன்றுக்கும்
துடித்துப்போனாள் காதலி.
அருகிருந்த ஆண்பனைக்கு,
தன் ஆசைக் காதலனுக்கு
ஏதேதோ சொல்லி அரற்றிற்றுப் பெண்பனை.
கூடல் கலங்கி எதிரொலிக்கக் கத்திற்று.
மௌனத்தில் உறைந்தன அருகிருந்த உறவுகள்.
மதியப்பொழுதானதால் வெட்டுவாயிருந்து
அதிக குருதி பெருகிற்று.
சற்று நேரத்தில் அன்றில் பறவைகளிலொன்று அடிசாய்ந்தது.
குரூர மனிதனுக்கு எப்படிக் காதலைக் கணக்கிடமுடியும்?
சக உயிரின் வலிருசிக்கும் மனிதனுக்கு
மகளென்ன? மரங்களென்ன?
காதலைப் பிரிப்பதே களிப்பு.
நேற்றுக் காதல்மரங்களில் ஒன்றை வெட்டிய மனிதனே
சோடிப்பனைகளில் ஒன்றையேன் விட்டுச்சென்றாய்?
வாடா; வந்து வெட்டடா மற்றதையும்.
காதலியிடம் போய்ச்சேரட்டும்
இந்த ஒற்றைப் பனையின் உயிரும்.
□□

வெளிச்சம்
ஆனி – ஆவணி 2004




# வில்லாண்ட பரம்பரையின் விழுதுக்கு பல்லாண்டு

*எங்கள் நிலமீது மழைகொண்டுவந்த முகிலுக்கு*
*ஐம்பது அகவையாகிறது.*
*எம்மீது இருள்கவிந்த வேளையில்*
*ஒளிகொண்டுதூவிய வெளிச்சத்துக்கு*
*வயது ஐம்பதாகிறது.*
*ஐயனே!*
*கடுங்கோடை எரித்த நிலமீது*
*நீயே மழையாகி வந்தாய்.*

*காரிருள் சூழ்ந்த பொழுதுகளில்*
*நீயே சோதிப்பிளம்பாகத் தோன்றினாய்.*
*பகையேவிய அம்புகள் துளைத்து*
*உயிர்குடித்த வேளையில்*
*நீயே எமக்கு நெஞ்சின் கவசமானாய்.*
*நெடுங்காலம் தலைநிமிர்த்தாதிருந்த பரம்பரை*
*நின் வரவுக்குப் பின்னரே மீண்டும் முடிதரித்தது.*
*சிதிலமான கொற்றப் பந்தரையும்,*
*கொலுமண்டபத்தையும்,*
*சிம்மாசனத்தையும்*
*புதுக்கிய வரலாறு நினது.*
*எவரும் மிதித்தேறிப்போகவும்*
*கேட்க நாதியற்றிருந்த எம் கையில்*
*வாள்கொடுத்த வல்லமை நீ.*
*இன்றும் உன்னால் வந்த உயர்வனைத்தையும்*
*இனத்தின் கரங்களில் தந்துவிட்டு*
*வெறுங்கையனான வெளிச்சம் நீ.*
*வழித் தெளிவுணர்ந்த தலைப்பயணியே!*
*தங்க அகவை நினக்கல்ல*
*தமிழருக்கு.*
*ஐம்பது வயதென்பது நினக்கல்ல*
*அது எமக்கு.*
*வில்லாண்ட பரம்பரையின் விழுதுக்குப்*
*பல்லாண்டு பாடுகிறோம்*
*வாழிய நீ.*
□□

*வெளிச்சம்*
*புரட்டாதி - ஐப்பசி 2004*

# பயண வழி

*தொட்டு நுழைந்தும்,*
*விட்டுப் பிரிந்தும்*
*பயணவழியில் கடக்கும்*
*ஒவ்வொரு கிராமங்களும், நகரங்களும்*
*தரும் அநுபவங்களும், பட்டறிவும்*
*வேறெதிலும் கிட்டாத சிகரங்கள்.*

• புதுவை இரத்தினதுரை

வழிப் பயணங்கள் யாவும் தனித்துவ இயல்பின.
ஒன்றைப்போல் இன்னொன்று இல்லை.
எதிர்கொள்ளும் வழியில் அகப்படும்
ஊர்களுள்ளும் நகர்களுள்ளும் நுழைவது
நூலகத்துள்ளே புகுவது போலத்தான்.
அறியாமுகங்களின் அழகையும், உணர்வுகளையும்
அளவெடுத்து உள்ளே வைத்துக்கொள்வதும்
ஒரு உளவியற் பயிற்சிதான்.
வழியில் எத்தனை இடங்களும்
எத்தனை முகங்களும்
புன்னகைத்துப் பேசிப்போகின்றன.
பயணமென்று ஏறி அமர்ந்ததும்
சீவன்முத்தர்நிலை சித்திக்கிறது.
எதிர்வருவன யாவும் எழில்கொண்டு இலங்குகின்றன
ஏனென்று இன்றும்தான் புரியவில்லையே.
வீதிகள் வித்தியாசமானவையாக,
மரங்கள் மாறுபட்டவையாக,
ஆறுகள், குளங்கள், கிணறுகள்கூட
புதிய அழகுடுத்தினவையாக,
அட; புல், பூண்டு, செடி, கொடிகள் யாவும்
எப்படி இவ்வளவு துரிதத்தில் ஒப்பனை செய்துகொண்டு
ஒய்யாரம் பெறமுடிகிறது?
பயணங்கள் முழுமை செய்கின்றன மனிதனை.
என் இறுதிப் பயணத்திற்கூட
வெளியே பார்த்து, அறிந்து, சிலிர்த்தபடிபோய்
கட்டையிற் படுத்தெரியும் வரம்வேண்டும்
தருவாயா?
□□

வெளிச்சம்
புரட்டாதி – ஐப்பசி 2004

# நடத்தலெனும் பிரயத்தனம்

*திசைவழி தவறா நடத்தலிற்தான்*
*சேரிடமடையும் விரைவிருக்கிறது.*
*பாலையும் சோலையும் இடைவரும் நாளில்*
*பாலையிற் தளர்ந்தும்*
*சோலையிற் கிளர்ந்தும் தடுமாறல்*
*பயணத்துக்காகாது.*
*இலக்கின் தலைமேலுள்ள குறியில்*
*விழியகலக்கூடாது.*

• புதுவை இரத்தினதுரை

*நடத்தல்,*
*மீண்டும் நடத்தல்,*
*தொடர்ந்தும் தொடர்ந்தும் நடத்தலெனும்*
*பிரயத்தனமே வெற்றிதரும்.*
*வெய்யிலடிக்கும்போது நட,*
*மழைபொழியும் நாளில் நட,*
*பனியும் புயலும் தின்னும்*
*இரவோ பகலோ நட.*
*நடந்தபின் கொஞ்சம் ஓய்வெடு*
*நடக்கமுன் இளைப்பாறாதே.*
*நடைபயணத்துக்கு வேண்டியது*
*உடற்பலமல்ல*
*நம்பிக்கைப் பலம்.*
*வழிநெடுகிலும் பார்த்தபடி போ.*
*உனக்கு முந்திய யாத்திரியரின்*
*எலும்புக்கூடுகள் கிடைக்கும்,*
*பயணவழிக் குறிப்புகள் கிட்டும்,*
*முன்னோடிகளின் காற்தடங்கள் அகப்படும்*
*எல்லாவற்றையும் கடந்துபோ*
*அவை வழிகாட்டும் உனக்கு.*
*இடையில் விழுந்தாலும் தகைமையுடைச் சாவுவரும்.*
*நாளைய பயணிக்கு*
*நீயும் திசைசொல்லியாய்க் கிடக்கும்*
*தவம் பலித்த ஒருவனாக*
*உன் தடமிருக்கும் மண்ணில்.*
*போதாதா உனக்கு*
*தொடர்ந்து நட.*
□□

*வெளிச்சம்*
*கார்த்திகை - மார்கழி 2004*

# வேலிச் சண்டை விசாரணை
# அல்லது
# சமாதானக் கிழவனின் சாவு

*பேச்சுவார்த்தை சுமந்து சுமந்து களைத்த*
*சமாதானக் கிழவனின் உயிர்போய்*
*இந்தோ விறைத்துக் கிடக்கிறான்.*
*இருந்த இறுதிமூச்சையும் வெளியிலெறிந்து*
*நேற்றுத்தான் விழிபிதுங்கி*
*மூச்சுத்திணறிச் சரிந்தான்.*
*எந்த உரிமைக்காரரும் அருகின்றி*

எடுத்துப் பால்வார்க்க எவருமின்றி
வேண்டியவர்களுக்கு வார்த்தையொன்றும் கூறாமல்
பொதுக்கெனப்போனது உயிர்.
உயிர்கொண்டுலவிய நாளில்
ஓடியோடி வந்த பலரைக் காணவில்லை
ஒதுங்கிக்கொண்டனர் எல்லோரும்.
தனித்துக் கிடக்கிறது சடலம்.
மூக்கில் நீர்வழிய
கண்களில் பீளைசாறி
ஈமொய்க்கக் கிடக்கிறது இளைத்த உடல்.
இழவுசொல்லிகளுக்காகக் காத்திருக்கிறது
உறுதிப்படுத்துவதற்காக உலகம்.
எவ்வண்ணம் இறப்பு நிகழ்ந்தது?
மூச்சுத்திணறியதா?
கொலையா?
தற்கொலையா?
இனிப் பிரேதபரிசோதனை நடத்துவர் மத்தியஸ்தமருத்துவர்.
பாவம் சமாதானக் கிழவன்
எத்தனை நம்பிக்கையுடன் இருந்தான்.
தன் பிள்ளைகளிருவரும் ஒன்றாயமர்ந்து
பேசித் தீர்த்து
தாயுறுதியிலுள்ள எல்லைகளை ஏற்கும்
நாளொன்று சாத்தியமாகுமென
புன்னகைவீசித் திரிந்தான் பொக்கைவாய்க்கிழவன்.
தன் அந்திமத்துக்கு முன்னம்
மகளும்
மகனும்
பகைமறந்து ஒருவருக்கொருவர் உருகுவரெனும்
எதிர்பார்ப்பில் இடிவிழுந்துபோக
நின்றபடி சரிந்தான் நிகழ்ந்தது மரணம்.
ஏனோ தெரியாது
சமாதானக் கிழவனை
பிறந்த நாளிருந்தே மகளுக்குப் பிடிக்காது.
ஊராரின் பழிச்சொல்லுக்கு அஞ்சி

*இடைக்கிடை வருவாள்*
*ஏதேனும் பேசுவாள்*
*சந்தர்ப்பம் பார்த்திருந்து*
*தகப்பன் துரோகமிழைப்பதாய்ச் சொல்லி*
*நிமிர்ந்து தம்பிமுகம் பாராது போய்விடுவாள்.*
*சாதுரியமாய் ஊரை வசப்படுத்துவதில்*
*மகள் மகாசூரி.*
*சண்டையை வலிந்திழுத்துவிட்டு*
*அடியாட்களை ஏவி எல்லைகளை முன்னகர்த்துவாள்.*
*தனக்கே காணிமுழுதும் சொந்தமெனும் நினைப்பில்*
*தம்பி வளவுக்கான தண்ணீர்ப்பங்கைக்கூட*
*தரமறுப்பாள்.*
*ஒவ்வொரு தடவையும் ஊர்பழிப்பது தம்பியைத்தான்.*
*அக்காக்காரியின் ஆட்டமறியாமல்*
*அவளையே நம்பும் அயல்.*
*கிழவன் பாவம்*
*உள்ளே அழுதபடி உறங்கிப்போவான்.*
*திரும்பவும் எழுவான்*
*பிள்ளைகளை ஒன்றாக்க முயன்று*
*தோற்றுச் சுருள்வான்.*
*எத்தனைமுறை முயன்று*
*எத்தனைமுறை தோற்று*
*மீண்டும் மீண்டும் எத்தனித்தகிழவன்*
*இம்முறை செத்தேபோனான்.*
*சடல ஒப்படைப்பு யாரிடம்*
*எடுத்துப்போகவும் வருமா உலங்கு வானூர்தி?*
*மரணச்செய்தி விளம்பரத்துக்காக*
*காத்திருக்கின்றன எல்லா மக்கள் தினசரிகளும்.*
*பாவம் கிழவன்*
*இனியாவது உறங்கட்டுமே எரியும்வரை.*
□□

*வெளிச்சம்*
*கார்த்திகை - மார்கழி 2004*

# கார்த்திகைப்பூ பூத்திடும் நாள்

எழுதும் வரிகளே உருகிக் கசியும்
கவிதை இவர்.
அடையாளமற்றிருந்த இனமொன்றின்
முகவரி இவர்.
விதி வலியதல்ல
வலியதே விதியாகிறது என
எழுதிய புதுவிதியிவர்.
பிறப்புக்கு இறப்பால் அர்த்தம் சொல்லி
சிறப்புற்ற சீவன்முத்தர்கள்.
தலை சாய்த்து வளைந்தாடுவதே
வாழ்வெனக் கருதும் நாணற்புற்களிடையே
நிமிர்ந்தெழும் வழியுணர்த்திய நிர்மலர்கள்.
எப்படியென்றும்
எங்ஙனம் சாத்தியமானதென்றும் அறிய
நாளைய ஆய்வுக்காரர்களுக்காக
நடப்பட்டுள்ள கல்வெட்டுகள்.
நேற்று இருந்ததெனவும்
இடையில் இல்லாதழிந்ததெனவும்
மீண்டும் இன்று முளைத்தெழுந்ததெனவும்
சொல்லப்படும் இனமானத்தினதும்
வீரத்தினதும் சொந்தக்காரர்கள்.
குச்சுக்குடிசைகளின் கூரைமேற் சுடர்ந்த
தாமிர கலசங்கள்.

அறியப்பட்டனவாகவும்,
அதிகம் அறியப்படாதனவாகவும்
கல்லறை கிடக்கும் காலச்சாட்சிகள்.
வீரத்தின் மணிமுடிதரித்து
ஒருகாலம் இப்படியும் இருந்தோமெனச் சொல்லி
புதைக்கப்பட்ட காலப் பெட்டகங்கள்.
ஈழத்தமிழருக்கு எழுப்பம் அருளிய
தேவப் பிறவிகள்.
படைகொண்ட பரம்பரையென
மீண்டும் நிறுவிய மகுடர்.
சிதையுண்டு சிதிலமாகிய தேசிய கோபுரத்தை
புனரமைத்து வர்ணம் பூசியோர்.
இவனால் இது முடியுமெனக் கணித்து
தலைவனுக்கு இடது வலது ஆனோர்.
சாவு வாழ்வின் முடிவல்ல
தொடக்கமுமாகலாம் எனச்சொல்லி
வாழ்வுக்குப் புதிதான வழிகாட்டிகள்.
வருடமொரு கவிதையால்
இவர்களை வரையமுடியாது.
கார்த்திகை மாதத்தில் பூப்பதால்,
மற்றவைகளிலிருந்து மாறுபட்டு
அதிசயமாய் விளைவதால்,
கானகத்தில் கரைந்துறைவதால்,
கழுத்தில் நஞ்சணிவதால்,
மஞ்சளும் சிவப்புமாய் மலர்வதால்
கார்த்திகைப் பூவே
மாவீரருக்குக் கனகச்சிதமானது.
கார்த்திகைப் பூவே இவர்
இவரே கார்த்திகைப் பூ.
மாவீரர் நாள்
கார்த்திகைப்பூ பூத்திடும் நாள்.
□□

*தினக்குரல் - உதயன்*
*27.11.2004*

# வாழ்வளித்த தாயே நீயே சாவும் அளித்தாய்

*கடலே!*
*எமக்குப் பிடிக்காப்பெண்ணானாய் இப்போ.*
*எத்தனைநாள் உன் அழகிற்கிறங்கி*
*பாதாதிகேசம் பாடினோம்.*
*எம்தாயின் வேலியாய்க்கிடந்து*
*அடிதாங்கிய கடலே.*
*இன்றேனடி இந்தக்கொடூரம் இழைத்தாய்?*
*'சுனாமி'*
*நீ எந்தப் பகைவனின் பினாமியாய் வந்தாய்?*

மெல்ல அலைப்பாவாடை மேலுயர்த்தி
கணுக்கால் தெரிய ஓடிவரும்போதில்
உன் கொலுசுமணிச் சத்தத்தில் உருகினோம்.
இன்று கொலைவாள்கொண்டு
ஏனடி ருத்ரதாண்டவமாடிப் போனாய்.
"கரைகெழு சந்தும் காரகிற் பிளவும்
அளப்பரும் கனமணி வரன்றி
குரைகடலோதம் நித்திலம் கொழிக்கும்" என்று
ஞானசம்பந்தன் பாடிய நாயகியே
இன்று பேயாய்த் தலைவிரித்தாடிக் கிடக்கின்றாய்
எந்தப் பேச்சுமின்றி.
அழுதழுதுசோர்ந்து நிமிரவொண்ணாதிருக்கும் எம்மீது
உன் பலம்காட்டிப் போனாய்.
உப்புக் கரிக்கும் இதயத்தாளே
நம்பியுன் கரைகிடந்தோருக்கு
ஏனடி துரோகமிழைத்தாய்?
நித்தமுன் மடிவளர்ந்த பிள்ளைகள்மீது
அப்படி என்னவஞ்சம் உனக்கு?
'நீலமாகிவரும் கடல்' என
உன்னை நினைந்துருகினான் இங்கொருவன்.
அதுவுன் வஞ்சநெஞ்சில் நிறைந்திருந்த
நஞ்சின் நிறமெனக் கண்டோமின்று.
வாழ்வளித்த தாயே
நீயே சாவுமளித்தாய்.
கரையெங்கும் உயிரெடுத்தும்
உடல்புதைத்தும் போனாய்.
கரைமாந்தர்மீது துயர்கவித்தபோது
நெஞ்சிலொரு மூலையிலாவது நெருடவில்லையா?
கண்ணீரால் உன் கரையுருகிப்போவது
காண்கிலையா கடற்தாயே.
எம் சின்னமணித்தீவின் வண்ணமழித்தாய்.
பூவையும், பொட்டையும்
தாலியையும்கூட வாரிப்பறித்தேகினாய்.
பூக்களைக் கசக்கியும்,

பிஞ்சுகளை உதிர்த்தும்,
பழங்களைப் பறித்தும்
மொட்டை மரமென மூளியாக்கினாய் எம்மை.
உனக்கு அருகில்வர பயமெமக்கு இப்போ.
எந்த மடியேறித் தவழ்ந்தோமோ,
எந்த அலையேறி மிதந்தோமோ,
எந்த முகமேறி முத்தமிட்டோமோ
அச்சமூட்டுகின்றன அவையாவும் எம்மை.
எட்டாவொன்றாகி
என்ன செய்தழித்தாய் எம்முறவை?
கடலருகே மலையொன்றாக்கி
பிணம்குவித்தோம்
பின் வாரிப்புதைத்தோம் உன் கண்ணெதிரே.
இயற்கை இனம் பார்ப்பதில்லை
மதம் பார்ப்பதில்லை
நிறம் பார்ப்பதில்லை எனவுணர்த்தவா
இந்த ஊழிக்கூத்தாடிப் போனாய்?
போடீ அரக்கி!
வாரியுன் மடிநிறைத்துவிட்டு
பாறிச் சரிந்துள்ளோம் பார்.
இனி நிமிர்வதெக்காலம்?
எங்ஙனம்?
எவரால்?
திசைவெளிக்காப்பொழுதின் பயணியராய்,
திகைப்பூண்டாய்,
கசையடியால் உடல்கிழிந்த பாவியராய்
கரையில் நாம்.
கடலே வடிவுகொண்டிலங்கமுடியும் உன்னால் மீண்டும்.
இயலாதடி எம்மால்.
வளமற்ற தேசங்களின் கரையில்
வறுமையுற்ற நாடுகளின் ஓரங்களில்
வல்லரசுகளே! அணுக்கழிவுகளை இனியும்
வாரிக்கொட்டுங்கள்.
பழுதடைந்த கந்தகக் கழிவுகளை வீசுங்கள்.
புதிய பரிசோதனை முயற்சிகளை

*பாவப்பட்ட நாடுகளின் கரையிற் பரீட்சித்துப் பாருங்கள்.*
*உமக்கென்ன நீவிர் உயரத்திலுள்ளீர்*
*நாங்கள்தானே பளுசுமப்பது.*
*"இயற்கையை நீ அழித்தால்*
*இயற்கையால் நீ அழிவாய்"*
*எவன் கருத்திலெடுத்தான் இவ்வாசகத்தை.*
*கொட்டுங்கள்*
*குவியுங்கள்*
*கழிவுகளை எம்முதுகில்.*
*இன்னும் மீதமாய் கொஞ்சப்பேருள்ளோம்*
*உங்கள் பரிசோதனைகளுக்குப் பலியாக.*
*வந்து கொட்டுங்கள் கழிவுகளை.*
*பின்னர்*
*நீலிக்கண்ணீருடனும்*
*நிவாரணப் பொருட்களுடனும் வாருங்கள்.*
*கையேந்தி நிற்போம்*
*பாய்களுக்கும்*
*பவுடர்களுக்கும் உங்கள் முன்னே.*
*உங்களை எவர் கேட்கக்கூடும்*
*உயர்ந்தவரல்லவா நீங்கள்?*
*எங்களை எவர் பார்க்கக்கூடும்*
*இழிந்தவரல்லவா நாங்கள்?*
*இனியும் கரைகிடப்போம்*
*இனியும் கடலெடுக்கும்.*
*கத்திக் குளறிவிட்டு*
*மீண்டும் கரைகிடப்போம்*
*மீண்டும் கடலெடுக்கும்.*
*போக்கறுந்து போவாரே!*
*போட்டுக்குவியுங்கள் அணுக்கழிவுகளை*
*எம் கரையில்*
*நாங்கள் செத்துத்தொலைகின்றோம்.*
□□

*தினக்குரல்*
*02.01.2005*

# கழுகிறங்கும் கடற்கரை

கடல்தின்ற சோகத்திருந்து
மீளாதோர்முன்னே
ஆரம்பமானது அரங்கேற்றமொன்று.
ஒப்பனையிட்ட கட்டியக்காரன்
தருப்பாடியபடி சபைவந்துளான்.
கூத்தின் நாமம்
'பேரிடர் உதவி' என்பதாய் எழுதி
போர்க்கப்பலின் அணியத்தில் ஒட்டியுளது.
நங்கூரமிட்ட கப்பலிருந்து
குளிருக்குப் போர்வையும்
கூடாரப்பொருட்களும் இறக்கப்படுகின்றன.
இயல்பு மறைத்து
இறக்கைக்கு வர்ணம் தீட்டி
கூரிய கத்திநகங்கள் தெரியாவண்ணம்

• புதுவை இரத்தினதுரை

காலிற் சப்பாத்துத் தரித்து
பட்டாளமுகத்தைத் தற்காலிகமாக
அப்பாவி முகமென்றாக்கி
எங்கள் மலைமீதும்,
பனைமீதும்,
அழகிய வயல்மீதும்,
நதிக்கரைமீதும்
வந்து இறங்குகின்றன வல்லூறுகளும், பருந்துகளும்.
மலர் வளையங்களுடன்
இறக்கை மடித்தமர்கின்றன
எங்கள் இலுப்பைமரமீதும் கழுகுகள்.
சுனாமியில் புதையுண்டோருக்கு அழுவதாய்
தொப்பி கழற்றி அஞ்சலிவேறு.
வியட்நாம் வயல்களிலும்,
ஒட்டகநாட்டின் ஈச்சைமரத்திலும்
இவை இப்படித்தான் இறங்கின முன்னரும்.
உங்களுக்காக அழவும் ஆராதிக்கவுமே
வந்தோமெனும் வார்த்தைகளின் பின்னே
இனிவரும் நாளில்
இச்சிறுதேசம் சிந்தப்போகும்
கண்ணீரும் குருதியும் இருக்கலாம்.
வலசைபோகும் வழியில்
வந்தனவல்ல இவை.
கூத்து ஆரம்பமானதைச் சொல்லி
அரங்கிற் கோமாளியே முதலில்.
கோமாளிகள் கொலையாளிகளாவதை அறியாத
ஏமாளிகளல்ல நாம்.
கழுகிறங்கும் கடற்கரையில்
வண்ணத்துப் பூச்சிகளின் வடிவிருக்காது.
சின்னப்புட்கள் சீட்டியடிக்காது.
ஆமை புகுந்த வீடும்
............ புகுந்த நாடும் விளங்காதென்பது
அடிபட்ட ஒருவனின் அனுபவமொழி.
கழுகுகளுக்கு அப்படியென்ன கரிசனை எம்மேல்?
இந்தச் சின்னமணித்தீவுமீதேன்

*இத்தனை அன்பு?*
*வியட்நாம்.*
*ஓ.. அந்த அழகியவயல்கள்*
*இந்தக் கழுகுகளின் எச்சத்தால்*
*எத்தனை வருடங்கள் எரிந்தன.*
*இன்னுமொரு பாவப்பட்ட பாலைவனம்*
*இன்றும்தான் அழுதுகிடக்கிறது.*
*நெடுநாள் தவத்துக்கு*
*வரம்கொடுத்தது சுவாமி.*
*சுனாமி!*
*நீயாகவும் வந்தழித்தாய்*
*அழைத்துவந்தும் அழச்செய்யப்போகிறாய்.*
*வரலாற்றுத்துயரம் தலைமுறை கடந்தும்*
*கடத்தப்படுமா எம்முதுகில்?*
*சவாரி செய்பவர்களுக்கு எம் கண்ணீரளவு*
*எப்படித் தெரியும்?*
*மௌனத்தைச் சம்மதமென்றாக்கும்*
*வழக்கொன்றுண்டு.*
*உரத்த குரலேதும் இல்லாமை*
*கழுகுகளுக்கே வாய்ப்பாகும்.*
*புல்வெளிச் சொந்தமான வண்ணத்துப்பூச்சிகளே*
*வாய்திறவுங்கள்.*
*கடலுறவான ஆட்காட்டிப்பறவைகளே*
*அவலமுணர்த்திக் குரலிடுங்கள்.*
□□

*தினக்குரல்*
*09.01.2005*

# இருந்ததும் இல்லையென்றானதும்

நேற்றெம் ஊரிருந்த காற்றில்
இதமான குளிரும்
நேர்த்தியான சுகமுமிருந்தது.
சாணி மெழுகிய தலைவாசலில்
சந்தனக்காப்பெனும் புனிதமிருந்தது.
வாசலிறங்கக் கோலமிருந்தது.
வயலில் நம்பிக்கை விளைந்தது.
வெளியே அறியப்படாத எத்தனையோ
உள்ளே வெளிச்சம் நல்கின.

அரைஞாண் கயிற்றுக் கோவணத்திலும்
குறுக்காகக் கட்டிய மாராப்பிலும்
நிறையும் மனமிருந்தது.
மின்சாரம் மினுங்காத ஒழுங்கைகளில்
இருளெனும் எழிலிருந்தது.
அள்ளிய ஒருமிடறு நீரிறக்க
சுவாசம் சீராகும் சுகம் தெரிந்தது.
ஆலமரம் விசிறிய காற்றின் தாலாட்டில்
தேவநிலை சித்தித்தது.
ஊர்நிறைத்த கோயில்மணி நாதமும்,
கூத்துப்பாட்டும்,
நாதஸ்வர மங்கலமும்
தூக்கித் தட்டாமாலை சுற்றிவிட்டு
எங்கே துரத்திப்பிடியென்பதாய் போயின.
சாவுக்கும் சடங்குக்கும் ஊனுருகியொழுக
பக்கத்திற் சுற்றமிருந்தது.
சனியானாற் பிடித்திழுத்து எண்ணைமுழுக்காட்ட
ஆத்தைமார் இருந்தனர்.
புதுவருடத்தன்று புளியமரக்கிளையேறி
அன்னவூஞ்சல் கட்டி ஆட்ட
அம்மான்மார் இருந்தனர்.
சின்னத் திரளிப்பொடியும்
வெள்ளிமுரலும்
கூனிறாலும் போட்டுக் குழம்புவைக்க
குஞ்சாச்சிமார் இருந்தனர்.
நிழல் விழுத்தும் முற்றத்துப் பூவரசின் கீழே
பல்லாங்குழியாட அம்மான்மகள்மார் இருந்தனர்.
தில்லையம்பலப் பிள்ளையார்கோயிலுக்குப் போய்வர
திருக்கல் வண்டில்கள் இருந்தன.
என்ன இல்லையென்பதாய்
எல்லாமுமிருந்தன.
தையெனிற் பொங்கல்
சித்திரையிற் கஞ்சி
ஆடியிற் கூழென

வாய்க்குக்கூட வரையறையிருந்தது.
அப்பனுக்கு மூத்தவன்
ஆத்தாளுக்கு இளையவனென
சாவுக்குப் பின்னுமொரு சங்கையிருந்தது.
ஆகக்கூடிய தொலைவுப்பயணமெனக் கதிர்காமத்துக்கு
அதுவும் கால்நடையாகப் போகும்
வடிவிலங்கிய வாழ்வொன்றிருந்தது காலடியில்
மாதமொரு கூத்திருந்தது கோயில் வெட்டையில்
அதுவே போதுமெனத் தூங்கியெழுந்தன ஊர்கள்.
சூடடித்துக் குவித்த நெல்லும்
கிழித்துலர்த்திய ஒடியலும்
நிறைத்த நெஞ்சில் நித்திரையிருந்தது.
தழுவிப்போனது காற்று
உருகி உள்ளேறியது உறவு.
கமல்ஹாசனும் சிம்ரனும் சொல்லித்தர முன்னரும்
இலந்தைமரக் காட்டுவெளியிடையும்,
புல்லாந்தியும் நாயுருவியும் சணைத்த
ஒற்றையடிப் பாதையிலும்,
வயல் வரம்பிலும்,
வாய்க்காற் கரையிலும்,
தோட்டவெளி ஆடுகாற் பூவரசின் கீழும்
இணைந்ததும் பிணைந்ததுமென
இருந்தது எம்மூர்களிலும் காதல்.
இன்று எல்லாம் தொலைத்து
இடருருவிக் கிடக்கிறது வனப்பு.
துக்கித்திருக்கிறது சோபிதம்.
'வெஸ்ரேன் யூனியனில்' வந்திறங்கும்
வெளிநாட்டு ஆதாரம்
இஷ்டத்துக்குப் பெருகுதெனினும்
கொள்ளிக்குப் பிள்ளைகளில்லையே.
காட்சிப்பெட்டி,
கைத்தொலைபேசி,
துவைக்கும்பொறி,
குளிருறை இயந்திரமென




*புதிதாயெழும் மாளிகையெங்கும் நிறைந்துளது.
ஆயினுமென்ன
முதுகேறி விளையாடிய பிள்ளைகளில்லையே.
மூத்திரம்பெய்ய பேரர்களில்லையே.
வந்த பணம்குவிந்து,
வங்கி நிறைந்து,
வட்டி வளருதன்றி
கைவிஷேசம் வாங்க யாருமில்லையே.
முற்றத்து முருங்கை நிறைகாய்
சுமைதாங்காது கிளைமுறிய
மரமும் பாறிச் சரிகிறது
உருவிச்சப்ப ஒருவரில்லையே.
கிணற்றடிவாழை குலைமுற்றிக்கிடக்கிறது
ஒருவரில்லையே உரித்துத் தின்ன.
பழைய சாய்மனைகளுக்கெதற்கு புதியவீடு?
எல்லா அழகும் இல்லையென்றாக
எலியோடும் உத்தரத்தை வெறித்தபடி
எத்தனை நாளுக்கென்றுதான்
கைத்தடிகள் காவலிருப்பது?
"பிள்ளைகளை அனுப்பினது பேய்வேலை"
கூழோ கஞ்சியோ குடித்தபடி
ஒற்றைப்போர்வைக்குள்
எல்லோரும் உறங்கியிருக்கலாம்.
இருந்ததை எண்ணி மகிழ்ந்ததுவாய்
இழந்ததை எண்ணி குமைந்ததுவாய்
உழவை எதிர்பார்த்துக் கிடக்கிறது ஊர்.
வெளியார் வயலில்
வயலோர் வெளியில்.
முட்டும் இழுப்புடனும்
மூத்தோரே ஊர்முழுதும்.*
□□

*வெளிச்சம்
மாசி 2005*

